# ஒப்பியல்சமய நோக்கில் திருவருட்பா

* * * * *

**முனைவர். இராம. மலர்விழிமங்கையர்க்கரசி**
எம்.ஏ., எம்.ஃபில்., எம்.ஃஎட்., பிஎச்.டி.,
இணை ஆய்வாளர்.
(Research Associate)
தமிழியற்புலம்.
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை - 625 021

**அருவி பதிப்பகம்**
**மதுரை**

## நூல் விவர அட்டவணை

| | | |
|---|---|---|
| நூல் தலைப்பு | - | **ஒப்பியல்சமய நோக்கில் திருவருட்பா.** |
| நூலாசிரியர் | - | **முனைவர்.**<br>**இராம. மலர்விழிமங்கையர்க்கரசி.** |
| பதிப்பு | - | முதற்பதிப்பு - டிசம்பர் - 1999. |
| உரிமை | - | நூலாசிரியர்க்கு. |
| வெளியீடு &<br>கிடைக்குமிடம் | - | அருவி பதிப்பகம்.<br>AVM இல்லம்.<br>2/63, பேச்சியம்மன்படித்துறை,<br>மதுரை - 625 001. ✆ 742844 |
| தாள் & அளவு | - | சேசசாயி - 1/8 |
| பக்கங்கள் | - | **232** |
| படிகள் | - | **1000** |
| விலை | - | ரூபாய் 70 |
| கணினி அச்சுக்<br>கோர்ப்பு & அச்சிட்டோர் | - | பாண்டியன் கணினி அச்சு,<br>80-ஏ, மேலமாசி வீதி,<br>மதுரை-1. ✆ 746927 |



## காணிக்கை

காற்றிலே கலந்து
ககனவெளி நின்று
வாழ்த்தும் தாய்க்கும்.
பெற்றியே தந்து
அவையத்து முந்த
ஆசியளித்த தந்தைக்கும்.
காணிக்கையாக்குகிறேன்.

THIS BOOK IS PUBLISHED
WITH THE FINANCIAL ASSISTANCE OF
**TIRUMALA TIRUPATI DEVASTHANAMS**
UNDER THEIR SCHEME AID TO PUBLISH RELIGIOUS BOOKS

●

இந்நூலை வெளியிடப் பொருளுதவி தந்த

**திருமலை திருப்பதி தேவஸ்தானம்,**
அதன் நிருவாக அதிகாரி அவர்கள்,
ஆசிரியர் (எடிட்டர்) **என்.எஸ்.இராமமூர்த்தி,** எம்.ஏ., அவர்கள்
ஆகியோர்க்கு எங்கள் நெஞ்சார்ந்த நன்றி.

## பொருளடக்கம்



# மதுரை காமராசர் பல்கலைக் கழகம்

**பேராசிரியர் மு. சாலிகு**
துணைவேந்தர்

பல்கலை நகர்
மதுரை-625020.

## வாழ்த்துரை

தமிழியற்புலத்தில் பணியாற்றும் திருமதி. இராம. மலர்விழி மங்கையர்க்கரசி அவர்கள் பிறசமயங்களுடன் திருவருட்பாவை ஒப்பிட்டு நூலாக்கம் செய்திருக்கிறார்கள்.

ஒப்பியல் சமயம் அறிமுகமும் - விளக்கமும் என்ற இயலில் சமயங்களை ஒப்பிட்டு அறிவதற்கான காரணங்கள், விளக்கங்கள், தடைகள் ஆகியன குறித்து நன்றாக விளக்கியுள்ளார். ஒப்பியல் சமய பீடங்களின் வரலாற்றினைக் கூறும்போது நமது பல்கலைக்கழகமும் பல்வேறு சமயங்களை இணைத்து ஒரு குடையின்கீழ் இயங்கும் அமைப்பை உருவாக்கியுள்ளது என்று சுட்டிக்காட்டியது பெருமை கொள்ளச் செய்கிறது.

இராமலிங்கரின் திருக்காப்பிட்டுக் கொள்ளல் என்ற முறையானது. சூபிகளின் ஒரு கூறான சிஷ்டியா சங்கத்தைச் சேர்ந்தவர்கள் மேற்கொள்ளும் சில்லா எனும் வழிபாட்டு முறையுடன் ஒத்துள்ளது எனக் குறிப்பிட்டிருப்பது சமயங்களுக்கிடையே பொதுமை காண விழைந்ததன் வெற்றி என்றே பகரலாம்.

மேலும் திருவருட்பாவை கிறித்தவ சமய மதிப்புக்களுடனும், சமண சமய உயிரிரக்கக் கொள்கைகளுடனும் ஒப்பிட்டு ஆய்வு செய்த பாங்கு சிறப்பிற்குரியது. இத்தகு நூல்கள் மதநல்லிணக்கத்தை வலியுறுத்துவனவாக அமைவது கண்டு பாராட்டுகிறேன். இந்நூல் ஆர்வலர்கள் படித்துப் பயன்பெற வேண்டிய ஒன்றாகும்.

(மு.சாலிகு)

முனைவர் அ.இராமசாமி, எம்.ஏ., பிஎச்.டி.,
பதிவாளர்



# பாராட்டுரை

முனைவர் இராம. மலர்விழி மங்கயைர்க்கரசி அவர்களின் 'ஒப்பியல்சமய நோக்கில் திருவருட்பா' என்ற ஆய்வு நூல் வெளிவருவதில் மகிழ்ச்சி அடைகிறேன். இளம் ஆய்வாளரான நூலாசிரியர் மிகவும் ஆழமான சமய தத்துவங்களை மையமாகக் கொண்டு, இராமலிங்க அடிகளாரின் திருவருட்பாவை ஆய்வு செய்து, நூலாக வெளிக் கொணர்வது பாராட்டிற்குரியது.

ஆரம்ப காலத்தில் ஒரு சமயம் மற்றொரு சமயத்தை எளிதாக ஏற்காத சூழல் இருந்ததைச் சுட்டிக் காட்டும் ஆசிரியர், காலப் போக்கில் கிறித்தவம் முதலான சமயங்கள் ஒப்பியல் சமய ஆய்வுக்கு உறுதுணையாக இருந்ததையும், ஒப்பிலக்கியத் துறையும் இத்தகைய ஒப்பீட்டுப் பார்வைக்குத் தம் பங்களிப்பை நல்கியதையும் எடுத்துரைக்கிறார் என்றாலும் ஒப்பியல்சமய ஆய்வில் ஒரு தயக்கமும் தேக்கமும் இருந்ததும், குறிப்பிடத்தக்க ஓர் ஆய்வு நெறிமுறை உருவாக்கப்படவில்லை என்பதும் நூலாசிரியரின் ஆதங்கமாக அமைகிறது.

பதி, குரு, தாய், தந்தை, துணை, நட்பு, அம்மான், தலைவன்,ஆருயிர்த் துணைவன் என்ற சன்மார்க்க நெறியில் இறை-உயிர் உறவு நிலையை திருவருட்பா விளக்குவதைத் தக்க காட்டுகளுடன் நூலாசிரியர் விளக்கியிருப்பது, அவரது ஆழ்ந்த வாசிப்புத் திறனுக்குச் சான்றாக அமைகின்றது. இளமையில் பெற்றோரை இழந்த இழப்பின் பாதிப்பு, இந்த உறவு நிலையில் வெளிப்படக் காரணமாகலாம் என்று இதற்கோர் தீர்வு காண்பதும் ஆசிரியரின் ஆய்வு நோக்கைப் புலப்படுத்தும்.

இறைவனைத் தந்தையாகப் பேசுகிற நிலை கிறித்துவத்திலும் உண்டு; ஆனால் இசுலாத்தில் இல்லை; அங்கு இறைவன் இறைவனாகவே மட்டும் இருக்கிறான்; சூபிசத்தில் மட்டுமே நாயகி-நாயகன் உறவு (இறைவன்-நாயகி; ஆன்மா-நாயகன்) இடம் பெறுகிறது என்று எடுத்துரைக்கும் ஆசிரியரின் ஒப்பீடு பாராட்டிற்குரியது;

இறைவனோடு ஆன்மா கொள்ளுகிற உறவு வார்த்தை மற்றும் வாழ்வியல் நிகழ்வுகளுக்கு அப்பாற்பட்டது. நம்பிக்கையுடன் கூடிய…

உணர்வு ரீதியானது; உள்ளுணர்வு நிறைந்தது; சிந்தனைக்கும் வெளிப்பாட்டுக்கும் இடையே தோன்றுவது; மனித வாழ்க்கைக்குச் சரியான வழிகாட்டுவது என அப்பாலைக் குறியீட்டை விளக்கும் ஆசிரியர், 'அண்டர்கில்' என்பாரின் கருத்தியல் அடிப்படையில், பயணம், திருமணம், உயர்வேதிவினை நிகழ்வு ஆகிய மூன்று நிலைகளில் இராம லிங்கரின் அப்பாலைக் கோட்பாட்டை விளக்குவது எளிமையும் இனிமையும் பயப்பதாக அமைகின்றது.

கிறித்தவர்தம் பயண எல்லை செருசலேம்; இசுலாத்தின் எல்லை மெக்கா; இராமலிங்கருக்குச் சிதம்பரமே எல்லை; இங்குப் பயணம் என்பது இறை அனுபவம்; இறைத்தேடல். இறைவனைப் பற்றிய உண்மையின் தேடலும் ஆன்மீக உலகு பற்றிய சிந்தனையுமேயாகும். இது கவர்தல், ஆழ்தல், எழுச்சி என்ற மூன்று நிலைகளைக் கொண்டது. இதில் மண்ணக மனிதன் தன்னை விண்ணகத்து மனிதனாக எண்ணிக் கொள்கிறான்; ஆதி-அநாதியாகிறது; ஆன்மா கடவுள் நிலை அடைகிறது. தன்னைப் புனிதப் பயணியாகக் கருதலும், இதய அன்பிற்கு ஏங்குவதலும், பரிபூரணத் துணையைப் பெற விழைதலும் உண்டு. இத்தகைய புனிதப் பயணமே இராமலிங்கர் பாடல்களில் வெளிப்படுகின்றது என்கிறார் ஆசிரியர்.

இறைவனோடு ஒன்றுபடுதலையே தென்னிந்தியச் சமயமும் கிறித்துவமும் ஏற்றுக் கொள்வதால் இறைவனை நாயகனாகவும், ஆன்மாவை நாயகியாகவும் பார்க்கும் புனிதத் திருமணம் இராமலிங்கர் பாடல்களில் வெளிப்படுகின்றன. அதோடு ஆன்மீக உயர்வேதி நிகழ்வுகளாக இராமலிங்கர் இரசவாதம் செய்தல், தங்கத்தைக் குறிப்பிடல், மணிக்கற்களை எடுத்துரைத்தல், உலோகங்களைக் காட்டல், கோளங்கள்-அண்டங்களைக் குறிப்பிடல், விலங்கியல் சார்ந்த குறியீடுகளைத் தருதல், மருத்துவக் குறிப்புரைத்தல் முதலானவற்றைக் கொள்கிறார். இவை சாதி, சமயம், தத்துவம், சாத்திரம் கடந்த உயர்வேதி நிலைகளாக அடிகளாரால் குறிப்பிடப்படுபவன என ஆசிரியர் காட்டுவது அவரது ஆழ்ந்த சமயக் கல்வியைக் காட்டுகிறது.

சூபித் தத்துவக் கொள்கையுடன் இராமலிங்கரை ஒப்பிடும் ஆசிரியர், சூபிக் கோட்பாடான தேடல், அன்பு, அறிவு, பற்றின்மை, ஒன்றிப்பு, ஆச்சரியமடைதல், தான் அழிதல் ஆகியவை இராமலிங்கர் பாடல்களில் காணப்படுவதைத் தக்க சான்றுகளுடன் எடுத்துவைக்கிறார். அதோடு சூபித்துவம் குறிப்பிடும் மனிதப் பாகுபாடுகளான வலதுகைத் தோழர், இடதுகைத் தோழர், கடவுளுக்கு அருகே இருப்பவர் - என்ற மூன்று நிலைகளும் அடிகளின் பாடல்களில் வெளிப்படுகின்றன; இவற்றில்

இராமலிங்கர் 'கடவுளுக்கு அருகே இருப்பவர்' என்ற மூன்றாம் மனிதப் பிரிவினைச் சார்ந்தவர் என ஆசிரியர் எடுத்துரைக்கிறார். மேலும் சூபிக்களின் வள்ளன்மை, உள்ளதைக் கொண்டு மன நிறைவடைதல், பொறுமை, மன்றாடுதல், இறைவனை அணுகுதல், இறைவழியில் பயணம் மேற்கொள்ளுதல், ஆகிய ஆறுநிலைகளில் இராமலிங்கர் ஒன்றுபடுவதையும், அவர்களின் (சூபி) நீண்ட அங்கி அணிதல், ஏழ்மையைப் பெருமையாகக் கருதுதல் என்ற இரு நிலையில் இராம லிங்கர் வேறுபடுவதையும் ஆசிரியர் தக்க காட்டுக்களுடன் எடுத்துவைக்கிறார். சூபிக்களின் 'சில்லா' முறை இராமலிங்கரின் 'திருக்காப்பிட்டுக்' கொள்ளலுடன் ஒப்பிடப்படுகிறது. 'சமாதி' வற்புறுத்த லில் கிறித்தவ - இசுலாமியத்துடன் இராமலிங்கர் உடன்படுவதையும் ஆசிரியர் ஒப்பிட்டுக் காட்டுவது பாராட்டிற்குரியது.

சமண சமயக் கருத்துகள் பல இராமலிங்கருக்கு உடன்பாடாக அமைவதை எடுத்துரைக்கும் ஆசிரியர் 'தெய்வமூடம்' பற்றிய கருத்தில் மட்டுமே இராமலிங்கர் வேறுபட்டு நிற்பதைச் சுட்டிக் காட்டுகிறார். இதற்கான அடிப்படைக் காரணம் சமணம் கடவுள் மறுப்புக் கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டது; இராமலிங்கர் கடவுள் ஏற்புக் கொள்கை கொண்டவர் என்பதையும் ஆசிரியர் சுட்டிக் காட்டத் தவறவில்லை.

கிறித்தவம் உணர்த்தும் கீழ்ப்படிதல், சாந்தமும் தாழ்ச்சியும், இரக்கம், கடவுளைச் சார்ந்திருத்தல், பகைவரை மன்னித்தல் முதலானவற்றில் இராமலிங்கர் ஒன்றுபடுகிறார்; கிறித்தவ 10 - கட்டளைகளில் 2, 3-வது கட்டளைகள் இராமலிங்கரிடம் காணப்படவில்லை; 'மது அருந்துதல்' மட்டுமே அருட்பாவில் மறுக்கப்படுகிறது: அதற்கான காரணம் மேலை நாட்டுச் சமூக- புவியியல் சூழல் என்பதை எடுத்துரைக்கிறார்.

இவ்வாறாகச் சைவத்தை மையமாகக் கொண்ட இராமலிங்கரின் சமரச சன்மார்க்க நெறியான 'திருவருட்பா' நெறியை சமணத்துடனும், மேற்கத்திய சமயமான கிறித்துவம், இசுலாம், சூபிசம் ஆகியவற்றுடனும் ஒப்பிட்டு நோக்கும் ஆசிரியரின் ஒப்பீட்டுத்திறன் பாராட்டத் தக்கது; ஆசிரியரின் எளிய - தெளிவான நடை ஆழமான பொருளையும் எளிதாகப் புரிந்து கொள்ளச் செய்கிறது. தமிழ் இலக்கிய மற்றும் ஆன்மீக உலகம் நூலை வரவேற்கும் என நம்புகிறேன். நூலாசிரியருக்கு என் வாழ்த்துகளும் பாராட்டுகளும் உரித்தாகுக. ஆசிரியர் இன்னும் பல நூல்களைத் தமிழ்த் தாய்க்குச் சூட்டுவார் என நம்புகிறேன்.

**அ. இராமசாமி**

பதிவாளர்.

# அறிமுகவுரை

**முனைவர். தே. ஆண்டியப்பன்,**
பேரா. இலக்கணத்துறைத் தலைவர் (ஓய்வு),
மதுரை பல்கலைக்கழகம், மதுரை.

மொழி, இலக்கியம், சமயம் ஆகியவற்றில் ஒப்பியல் பார்வை ஊடுருவும் காலம் இது. அறிவியல் நோக்கில் மொழிகளை ஆராய்வதால் மொழிவெறி நீங்கி, ஒப்புமை உணர்வு ஓங்கிவருகிறது. இருவேறு இனத்தாரின் இலக்கியங்களை ஆராய்ந்து ஒப்பியல் இலக்கியம் மலர்கிறது. இப்போது உலகச் சமயங்களை ஒப்பிட்டு, இறையுணர்வு நெறிகளைக் காண விழைகிறது ஒப்பியல் சமயம். இதுவோர் புதுத்துறை. ஆர்வம் கொண்ட கண்கள் அகல விரிகின்றன. சமயங்களை ஊடுருவிச் சென்று, பொது உண்மைகளை நாடும் வேட்கை மிகுதிப்படுகிறது. "ஒப்பியல் சமய நோக்கில் திருஅருட்பா" என்ற இந்நூல், வள்ளலாரின் சமரச சன்மார்க்க நெறி, பிற சமயநெறிகளோடு எவ்வாறு இயைந்து செல்கிறது என்று ஆய்வு செய்கிறது. பாராட்டுவதற்குரிய நூல்.

நாம் அறிவோம்; சமயங்கள் ஒரு பயிற்சிக்களம் மட்டுமே ஆகும். அதற்கு அப்பாலும் செல்வதே மனிதனின் இலட்சியம். சாதியும் மதமும் சமயமும் காணா ஆதி அனாதியாம் அருள்பெருஞ்சோதியாக மாறுதல் அவசியம். அதற்கு சமயங்கடந்த ஞானநிலை வரவேண்டும். வெறும் சடங்கில் மூழ்கி எழுபவன் ஞானி ஆவதில்லை. சடங்கும் சம்பிரதாயங்களும் சமயம் அல்ல.

சமயங்களில் மனித தன்மைகள் மலிந்துவிட்டன. எங்கள் சமயம் ஒன்றே மெய்ச் சமயம்; பிறயாவும் பொய்ச்சமயம் என்ற பிரச்சாரத்தில் பித்தாகி விட்டோர் பலர். அந்த அறியாமையே சமயங்களின் முதல்கோட்பாடும் முதன்மை கோட்பாடும் ஆகிவிட்டதால் ஆட்களைத் திரட்டும் தேர்தல் சிந்தனையே இருக்கிறது. தெய்வச் சிந்தனை சிறிதுமில்லை. ஒருமுனைப்பட்டு தம்மையே அனைத்திலும் காணும் தவம் இன்று எட்டாக் கனியாகவே இருக்கிறது. தற்பெருமை ஓட்டைக்குள் நுழைவோர் இதயக் கருவறையைத் திறந்து பார்ப்பதில்லை; அக(ல்) விளக்கு எரிவதில்லை. நம்முள் கிடக்கும் தெய்வக் குணங்களைப் பிரகடனப் படுத்தவே இந்த வாழ்க்கை

என்பதைப் பலரும் அறிந்து கொள்ளவில்லை. ஆடி ஓய்ந்த பிறகு அறிகின்ற மந்தநிலையே நம்மிடம் காணப்படுகிறது.

கி.பி. 13-ல் பாரசீகத்தில் வாழ்ந்த ஜலால்உதீன்ரூமி, சிறந்த அனுபூதிமான். சொற்பதம் கடந்த தொல்லோனை நேசித்தவர். 'அவர்க்கு இன்பம் அளிக்கவே காத்திருந்து துன்புறுகிறேன்' என்று மதுர பாவத்தில் நாயகன் நாயகி பாவத்தில் கூறுவார். வள்ளலார் 23 பதிகங்களில் அகப்பொருள் துறையமைத்துப் பாடுவார். அப்பர், சம்பந்தர், திருமூலர், மணிவாசகர் என்னும் தமிழ் உள்ளங்களும் காதல் பரவசத்தைக் காட்டின. தமிழ் இலக்கியம் பாடல் சான்ற புலன்நெறி வழக்கம் என்று போற்றியது. எல்லாத் துறைகளும் அமைத்து கவிக்கோவை பாடியதும் உண்டு.

கிறித்தவ நெறியிலும், சூபி நெறியிலும் காதல் பார்வையில் கடவுளைக் காண்பது உண்டு. அவனே மணமகன் அவனுக்கு ஆட்படல்; அவனுக்காக காத்திருத்தல் என்ற வேட்கை அங்கே மிகுதி. அந்த அன்பில் இன்பம் நிச்சயம் உண்டு. அதில் தன்நலம், சிறுமை, அகங்காரம் என்ற மாசுகள் இல்லை. இறைவனே எழுவாய். நாம் பயனிலை என்ற சரணாகதி வந்து விடுகிறது. இன்பம் ஒன்றைப் பெறுவதில் இல்லை; கொடுப்பதில் உண்டு என்ற கொள்கை பெரியது அல்லவா? அது அன்பு அருளாகும் நிலை. அதனை எல்லா சமய ஞானிகள் வரலாற்றிலும் பார்க்கிறோம். தெய்வீக மையத்தைத் தேடும் ஆர்வமே சிறந்தது என அறிகிறோம். பரம்பொருள் என்ற நிலையில் அனைத்து மதங்களும் ஒன்றுபடுவதை நூல் அழகாகக் காட்டுகிறது. ஒப்பியல் ஆய்வு, சமய நம்பிக்கையுடையாரது ஐயங்களை மாற்றி சமரச உணர்விற்கு வழிகாட்டும் என்பது உண்மையே.

திருப்பதி தேவஸ்தானத்தின் நிதியுதவி பெற்று புத்தகமாக வடிவம் பெறுவது வளர்ச்சி நிலை. அனைவரது உள்ளங்களிலும் இந்நூல் இடம் பெற்று அது ஆர்வத்தைத் தூண்டு மானால் பரிணாமத்தின் இயல்பூக்கம் பயன் அளிக்கும் என்று கூறி வாழ்த்துகிறேன். திருமதி. இரா. மலர்விழி மங்கையர்க்கரசிக்கு எனது பாராட்டு.

இவண்,

**அன்புடன் தே. ஆண்டியப்பபிள்ளை**

# அருளுரை

**அருள்திரு. வி.மீ.ஞானப்பிரகாசம் சே.ச.**
சிறப்பு பேராசிரியர்
கிறித்தவக் கல்விப்பீடம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை-21.

'ஒப்பியல் சமய நோக்கில் திருவருட்பா' என்ற நூல் முனைவர் திருமதி. மலர்விழியின் ஒப்பியல் சமய ஆய்வு நூல்.

இது வள்ளலாரின் மதிப்பிடுகள், பிற சமய மதிப்பிடுகளுடன் ஒன்றுபட்டும் வேறுபட்டும் இருப்பதை விரிவாக, தெளிவாகக் காட்டுகின்றது.

21-ஆம் நூற்றாண்டின் தேவைகளில் ஒன்று பல் சமய உரையாடல் ஆகும். இந்த உரையாடல், ஒவ்வொரு மதத்திலும், கருத்துருவாக்கத்திலும், "உண்மையானவை எவையோ, கண்ணியமானவை எவையோ, நேர்மையானவை எவையோ, தூய்மையானவை எவையோ..." அவற்றை மனத்தில் இருத்தும்; ஒற்றுமையில் வேற்றுமை, வேற்றுமையில் ஒற்றுமை உண்டு என்பதை ஏற்றுக் கொள்ளும்.

இந்நூல் மட்டுமல்ல நூலாசிரியர் வாழ்விலும் பல் சமய உரையாடல் பளிச்சிடுகின்றது. இந்நூலும் நூலின் ஆசிரியரும் புதிய நூற்றாண்டின் பணிக்கு ஏற்ற கருவிகள் எனக் கூறலாம்.

திருமதி. மலர்விழியின் பணி சிறப்புற மனமாற வாழ்த்துகிறேன்.

**வி.மி. ஞானப்பிரசாகம் சே.ச.**

## சிறப்புரை

**முனைவர். தமிழண்ணல்**
முன்னாள் தமிழ்த்துறை தலைவர்
மதுரை பல்கலைக்கழகம், மதுரை.

26.11.99
மதுரை

ஒப்பிலக்கியம் போலவே, ஒப்பியல் சமய ஆய்வும் சென்ற நூற்றாண்டில் தொடங்கி இந்த நூற்றாண்டில் கால்கொண்டு இப்போது புதிய நுண்மாண் நுழைபுல ஆட்சியாக மலர்ந்து வருகிறது. இப் புதிய துறையைத் துணிவுடன் எடுத்துக்கொண்டு, அதற்காகப் பல சமய நுட்பங்களையும் ஆழ்ந்து கற்று, விருப்பு வெறுப்பின்றி இந்நூலைப் படைத்திருக்கும் முனைவர். இராம. மலர்விழி மங்கையர்க்கரசி, தமது புலமைத் திறத்தை நன்றாக வெளிப்படுத்தியுள்ளார்

தமது சமய ஒப்பீட்டிற்கு, அடித்தளமாக இராமலிங்க வள்ளலாரின் திருவருட்பாவை எடுத்துக் கொண்டிருப்பதும் பொருத்தமாகவுள்ளது.

ஆய்வுகளில் நெடுநாட் பழகியபின்தான் ஆய்வின் நுட்பமே புலப்படுகிறது. ஆய்வுக்காக ஆய்வு என்பது, அதற்குரிய பட்டத்தை, ஏதோ உரிமம் போல வழங்கமட்டுமே பயன்படும். பயன்பாட்டு ஆய்வுகளே மதிக்கத்தக்கவை. இவ் ஒப்பியல் சமய நூல், படிப்பவர் மனத்தில் பரந்து விரிந்த சிந்தனையைத் தூண்டுகிறது; சமயங்களிடையே இழையோடும் பொதுமையை நினைவுபடுத்துகிறது; இவை பல இயற்கை வழிப்பட்டவை என்பது புலனாகிறது. சமய நல்லிணக்கம் ஏற்பட வழிவகுக்கிறது.

இறை உயிர் உறவுகளாய்வும், 'அப்பாலை' எனப்படும் பக்தி நெறி வழிப்பட்ட ஆய்வும், சித்தர் நெறிவழிப்பட்ட உயர் வேதியினை ஆய்வும் திருவருட்பாவின் உட்கிடையைக் கற்கவும் கற்றுத் தெளியவும் உதவுகின்றன. திருமணம் என்ற தலைப்பிலான ஆய்வு மிகுந்த சிறப்புடன் திகழ்கிறது. நாயக நாயகி பாவத்தின் உச்சத்தை அதில் காண்கிறோம்.

அகவாழ்விற்கான ஆலோசனைகளையும் வள்ளலார் வழங்குவது வியப்பே. திருமந்திரமும் இதுபோலப் புணர்தல் பற்றிய நெறிமுறைகளைத் தருகிறது. வள்ளலார் கூறும் இயல்பான 'கருத்தடை வழி' மேலும் சிந்திப்பதற்குரியதாகும். ஆன்மிகத்தில் பாலியற் கல்விக்கும் இடமுண்டு என்பது விளங்குகிறது.

இசுலாத்தின் சூபியம் அல்லது சூபித்துவத்தைத் திருவருட்பாவுடன் ஒப்பிடக் கூடியது என எடுத்துக்கொண்ட திறமே போற்றுவதற்குரியதாகும். ஒப்பிட வேண்டுமென்றால், வேற்றுமையிடையே, ஒப்புமை இழையும் ஓடவேண்டுமல்லவா?

சமணத்துடனும் கிறித்தவத்துடனும் ஒப்பிடும் பொழுது, நூலாசிரியர் மிகுந்த விழிப்புடன் எழுதுவது போற்றுதலுக்குரியது. பிற சமயங்களை ஏற்க மறுக்கும் கிறித்தவம், பிறபாடு ஒப்பியலுக்கு வரும்போது, நெகிழ்வு காட்டவேண்டியுள்ளது. சமணம் போற்றிய கொல்லாமை தொடங்கி, வள்ளலார் சிந்தனையுடன் பொருந்திவருவன இவையிவை என மங்கையர்க்கரசி பட்டியலிட்டுக் காட்டுகிறார். .

ஒப்பீடுதற்காக அவர் இசுலாமிய சூபியம், சமணம், பௌத்தம் பற்றி நன்கு கற்றுத் தொகுத்துத் தரும். தரவுகள், இந்நூலை கற்போர்க்கு அவ்வச் சமயங்களின் அடிப்படைகளை அறியப் பெரிதும் உதவுகின்றன

வேற்றுமைகளும் புலப்படுமாறு எழுதப்பட்ட. இந்த நூல் அவற்றிடையேயுள்ள பொதுமையைக் கற்றுத்தரவே நமக்கு உதவுகின்றமை அதாவது அந்த நோக்கிலும் போக்கிலும் எழுதப்பட்டுள்ளமை, இதைத் தகுதி நிறைந்த பயன்பாட்டு நூலாக்கி விடுகிறது.

ஒப்பியல் சமய ஆய்வுகளின் தோற்றம், வளர்ச்சி பற்றிய, முன்னுரை அறிமுகப் பகுதிகளும் பயனுடையன. சாதி, சமயப் பிணக்குகளும் போராட்டங்களும் மீண்டும் தலைதூக்கும் இக் கால கட்டத்தில், இந்நூல் காலத்தேவைக்கு ஈடுசெய்வதாகவும் அமைந்திருப்பதால் பலராலும் படிக்கப்படும், பாராட்டப்படும் என நம்புகின்றேன்.

**முனைவர். இராம. மலர்விழி மங்கையர்க்கரசியின்** முயற்சி, உழைப்பு, புலமைத்திறம், திட்பநுட்பம்யாவும் இந்நூலாக்கம் போல, மேலும் தொடரவேண்டுமெனப் பாராட்டி வாழ்த்துகின்றேன்.

உலகில் குறிப்பாக நம் நாட்டில் சமய நல்லிணக்கம் பரவ, இந்நூல் தன் சிறு பங்களிப்பைத் தருகிறது எனில் மிகையாகாது.

ஏரகம்
சதாசிவ நகர்,
மதுரை - 625020.

**தமிழண்ணல்**

**முனைவர். சு. வேங்கடராமன்**
பேராசிரியர் - தலைவர் - ஒருங்கிணைப்பாளர்,
தமிழியற்புலம். மதுரை காமராசர் பல்கலைக் கழகம்,
மதுரை - 625 021.

## அணிந்துரை

சமயம் மனிதன் தன்னை அறிந்து கொள்ளவும் இறைவனை அறிந்துகொள்ளவும் இறைவனின் படைப்பான உலகத்தையும் உலக மக்களையும் நேசிக்கவும் நல்லிணக்கம் கொண்டு வாழவும் கற்றுத்தருகிறது. ஒழுக்கமுடன் அறநெறிகளைப் பின்பற்றி, கூடி வாழக் கற்றுத்தருகிறது சமயம். இதனையே, 'ஒழுக்கமுடன் இம்மைப் பிறப்பில் இருவாதனை அகற்றி, மும்மைப் பெருமலங்கள் மோசித்து...., ஆயும் பழைய அடியாருடன் கூட்டி...' என்று குமரகுருபரர் கந்தர் கலி வெண்பாவில் பாடுகிறார். மனிதநேயம், மனிதர்கள் அனைவரும் வேறுபாடு ஏதுமின்றி இணக்கமுடன் கூடி வாழ்தல் என்பவற்றைச் சமயங்கள்யாவும் காலங்காலமாக வற்புறுத்தி வந்துள்ளன. 'கூடியிருந்து குளிர்ந்து 'என்று வைணவம் இதை வலியுறுத்தும். சமரச சுத்த சன்மார்க்கம் என்று அருட்பிரகாச வள்ளலார் இதை வலியுறுத்துவார். தனித்தனியே தன்னளவில் நிகழ்ந்துவந்த சமய ஆய்வுகள், மாக்ஸ்முல்லர் காலத்திற்குப்பின் சமயங்களை ஒப்பிட்டும் உறழ்ந்தும் காணத்தலைப் பட்டன. தன்னுடைய உயர்வு என்று பார்ப்பதைவிடுத்து, மனித குல ஒட்டுமொத்தமான மேன்மை, இணக்கமாக ஒன்றிணைந்து வாழ்வது, மனிதநேயம் என்பவற்றை அடிப்படையாகக் கொண்டு, சமய வரலாறு, ஒப்பீடு, சமயக் கோட்பாடு என்ற மூன்றையும் உள்ளடக்கி ஒப்பியல் சமயம் என்னும் புதியதுறை தோன்றியது.

ஒப்பியல் சமயம் அடிப்படையில் வள்ளலாரின் அருட்பாவை ஆராய்ந்து அவரின் ஆளுமையை, சமரச மனப்பாங்கை, ஈரநெஞ்சை வெளிப்படுத்துகிறது இந்தநூல். வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடிய அருள் உள்ளமும், பசித்த மானுடர் அனைவருக்கும் உணவளித்த சத்திய தருமஞானச் சபை தந்த கருணையும் சமரச சுத்தநெறிமூலம் மனிதர்கள் அனைவரையும் இணைத்த அரவணைப்பும் கொண்ட அருட்பிரகாச வள்ளலாரை, வாழையடி வாழையென வந்த திருக்கூட்டத்தில் ஒருவராக சூபிக்கொள்கை தந்த இசுலாம். சமணம், கிறித்தவம் ஆகிய சமயக் கொள்கைகளோடு ஒப்பிட்டுக் காட்டக் கூடியவராக நிறுவுகிறது இந்தநூல். நூலாசிரியர் இரா. மலர்விழி மங்கையர்க்கரசி, சமயப் பிடிப்பும், சமய தத்துவங்களில் ஆழமான பார்வையும், சலியாத உழைப்பும், புதிய துறைகளில் விருப்பமுடன்

துணிந்து ஈடுபட்டுத் தேடிக் கண்டடையும் முயற்சியும் உடைய நல்ல ஆய்வாளர். பொதுவாகச் சமய இலக்கியங்கள், சமய தத்துவங்கள் பற்றி அறிந்து கொள்வதில் ஆர்வமும், அவற்றில் நூல் இயற்றுதற்குத் துணிவும் வேண்டும். இளம் ஆய்வாளர்கள் பலரும் சமயத்துறை என்றால், பின்வாங்கும் காலகட்டத்தில், புதிய துறையான ஒப்பியல் சமயத்தை விரும்பித் தேர்ந்து கடுமையாக உழைத்து, பாராட்டுதலுக்குரிய சிறப்புடைய நூலாக வருவது மகிழ்வையும் மனநிறைவையும் தருகிறது.

இறை - ஆன்மா என்பவற்றோடு தொடர்புபடுத்தி உறவுநிலைச் சிந்தனை வளர்ந்து வந்துள்ளது. இறை - உயிர் உறவுநிலை, தாய், தந்தையர்க்கும் மகனுக்குமான உறவாகச் சுட்டப்படுகிறது. இறைவனைத் தந்தையாகக் கருதும்போக்கு, வள்ளலாரிடமும் கிறித்தவத்திலும் காணப்படுவதாக நூலாசிரியர் காட்டுவது நுட்பமானது. கடவுளைப் பெற்றோராக எண்ணி வழிபடுவது. வைதிகச் சமய இலக்கியங்களில் தொடர்ந்து இடம்பெற்று வந்துள்ளது. ஆழ்வார்களும் நாயன்மார்களும் பாடிய அதே மரபைத்தான் வள்ளலாரும் பின்பற்றியுள்ளார். வாக்கு, மனம் கடந்த சொற்களால் சொல்ல முடியாத இறைவனுடன் உயிர் கலந்த அனுபவத்தைக் காட்சிபோலக் காட்டுவதற்கு அருளாளர்கள் குறியீடுகள், உருவகங்கள் போன்றவற்றைப் பயன்படுத்துகின்றனர். இவை, அப்பாலைக் குறியீடுகள் எனப்படும். அப்பாலைநிலைக் குறியீடுகளில் ஒன்றாகப் பயணம் இடம் பெறுகிறது; அது வள்ளலாரிடமும் கிறித்துவத்திலும் இடம் பெறுகிறது என்று காட்டும், நூலாசிரியர், பயணம் என்பது உயர்நிலை அடைவதைக் குறிப்பாகச் சுட்டும் என்று கூறுவது மிகுந்த பாராட்டிற்குரியது.

இறைவனுடன் உயிர் கலத்தலை நாயக, நாயகி பாவ அடிப்படையில் (Bridal & Mysticism) திருமணம் நிகழ்வதாகக் காணும் மரபு அருளாளர்களிடையே உண்டு. இம்மரபு வைதிக சமயங்களிலும் கிறித்தவத்திலும் உண்டு; நாயகி பாவ நிலை வெளிப்பாட்டைச் சூபியிசத்திலும் காணலாம். அருளியல் அனுபவங்களைச் சொல்ல, இருண்மையைச் சொல்ல, பலவகைக் குறியீட்டு நிலைகளை வள்ளலார் பயன்படுத்தியுள்ளதைக் காட்டி, அவை அவருடைய ஆழ்மன அனுபவ நிகழ்வுகளாகும் என்று நூல் ஆசிரியர் பொருத்தமாகக் கூறுகிறார். தம்முடைய அனுபவ நிலைகளைக் குறியீடுகளாக வள்ளலார் தருகிறார். அக்குறியீடுகள் உயர்ந்த அருள் அனுபவங்களின் நிலைக்களன்களாகும். இந்த நிலைக்களன்களில்தான் சாதி, சமயம், சாத்திரம் என்பவைகளுக்கு எதிரான மறுமலர்ச்சி சிந்தனைகள் தோன்றுகின்றன என்று ஆசிரியர் கூறுவது நுட்பமான சிந்தனையாகும். இந்த மறுமலர்ச்சிச் சிந்தனைதான் வள்ளலாரைச் சமய மறுமலர்ச்சியாளராக - மனிதநேய வாதியாக அடையாளங் காட்டியது என்பதை நாம் அறிய வேண்டும்.

சூபிதத்துவம் தந்த சூபிகள், இராமலிங்க வள்ளலாரைப்போலவே, வாழையடி வாழையாக வந்த திருக்கூட்ட மரபினர் ஆவார். மனிதப் பாகுபாடுகளில் கடவுளுக்கு அருகே இருப்பவர் என்ற நிலையில் வள்ளலாரும் சூபிக்களும் இருப்பதை ஆசிரியர் நுட்பமாகக் காட்டியுள்ளார். சூபிகளின் சில்லாமுறை, வள்ளலார் கூறும் சித்தவளாகத்தில் திருகாப்பிட்டுக் கொண்ட செயலுடன் ஒப்புமையுடையது என்பதும் நுட்பமான கருத்தாகும். ஊன் உண்ணாமை, கொல்லாமை, அனைத்து உயிர்களிடமும் அன்புகாட்டும் சீவகாருணியம் என்பவை சமணத்திலும் வள்ளலாரிடமும் காணப்படும் ஒன்றுபட்ட கூறுகளாகும். தவம், ஒழுக்க நெறி, முத்தியடையும் நெறிகள், உயர்ந்த குறிக்கோள் என்பன மகாவீரரிடமும் வள்ளலாரிடமும் காணப்படுகின்ற ஒற்றுமைக் கூறுகளாகும் என்று ஆசிரியர் கூறுவது பாராட்டத்தக்க கருத்தாகும். மகாவீரரும், வள்ளலாரும் சீவகாருண்ய அடித்தளத்தில் மனிதனின் மேம்பட்ட வாழ்க்கைக்கு ஏற்ற கருத்துக்களைத் தருகின்றனர் என்று நுட்பமாகக் கூறுகிறார். மனிதனை நல்வழிப்படுத்தி வாழ்வாங்கு வாழச்செய்து மேன்மையடையச் செய்யும் மனிதநேயம் வளரச் செய்யும் மதிப்புகள் பலவற்றைக் கிறித்தவமும் வள்ளலார் நெறியும் கூறுகின்றன. வாழும் மனிதர்கள் அனைவருக்கும் வயிற்றுக்குச் சோறிடும் அன்னதானத்தை வள்ளலார் நெறியும் கிறித்தவமும் வலியுறுத்துவதும் மனிதநேயத்தை வலியுறுத்தும் சமரச சகோதர உணர்வினால்தான் என்று இதனால் அறியலாம்.

சிறந்த, இத்தகைய கருத்துக்கள் இன்று மிகவும் தேவையானவையாகும். மனித நேயத்தையும், சகோதர உணர்வையும், இணக்கமிக்க கூடிவாழும் முறையையும் பேதங்களற்ற ஒருமைப்பாட்டு உணர்வையும் ஒப்பியல் சமய ஆய்வின்வழி தந்துள்ள நூல் ஆசிரியர் முனைவர் இரா.மலர்விழிமங்கையர்க்கரசி பெரிதும் பாராட்டிற் குரியவர். புதிய துறையான ஒப்பியல் சமயத்துறைக்குப் பெருமை சேர்க்குமாறு தமிழில் வந்துள்ள இந்தநூல் பாராட்டத்தக்க அரியபணியாகும். இன்றைய காலத் தேவைக்கு ஏற்ற, மனிதர்களை இணைக்கும் **ஒப்பியல் சமயநோக்கில் திருவருட்பா** நூலைத் தமிழ் கூறு நல்லுலகம் ஏற்றுப் போற்றி, வரவேற்பதாக என்று நான் வாழ்த்துகிறேன். நூலாசிரியர் இதுபோன்ற அரிய ஆய்வு நூல்களைத் தொடர்ந்து உருவாக்கவேண்டும் என்று வாழ்த்துகிறேன். அதற்கு அவருக்கு அருட்பெருஞ்சோதியின் தனிப்பெருங்கருணை துணை கூட்டுவதாக.

**சு. வேங்கடராமன்**

மதுரை - 21.
21.11.99

**டாக்டர். பீ.மு.அஜ்மல்கான்**
பேராசிரியர் & தலைவர்
இஸ்லாம் மற்றும் இஸ்லாமியத் தமிழியல் துறை
மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை- 625 021.

# கருத்துரை

ஆன்மீகக் கொள்கைகள் உலகில் வெவ்வேறானதாக இருப்பினும் இவை அனைத்தின் அடித்தளமும், நோக்கமும் மிக நெருக்கமான உறவினைப் பெற்றிருப்பதை அறிய முடிகிறது. இதற்குச் சான்றாக, உலகில் தோன்றியுள்ள வெவ்வேறான சமயக் கோட்பாடுகளிலும் பலவிதமான பொதுமைக் கருத்துகளைச் சுட்ட முடியும்.

இவ்வகையில் இஸ்லாம் சமயத்தின் சூபித் தத்துவக் கோட்பாடுகள், ஆன்மீகத்தின் பொதுமைக் கூறுகளை உள்வாங்கி உருவான ஆன்மீக அனுபூதி நிலை என்று கூறலாம். சூபித் தத்துவக் கோட்பாடுகளுக்கு முன்னோடியாகத் திகழ்ந்தவர் பெருமானார் நபிகள் நாயகம் (சல்) என்றே கூறவேண்டும்.

எல்லாம்வல்ல இறைவனின் பேரன்பினை அடைவதற்கான மார்க்கமே இஸ்லாம் சமயத்தின் சூபித்துவம் என்பதை பெருமானார் நபி (சல்) காலம் முதல் இறைநேசச் செல்வர்களான வலிமார்கள் வரையில் நிரூபணம் ஆகி இருப்பதை இஸ்லாம் சமய வரலாறு நமக்கு உணர்த்துகிறது. சூபித்துவத்தின் பல்வேறான படி நிலைகளை விரிவாக எடுத்துரைத்து அதன் சாரங்களை இராமலிங்க சுவாமிகளின் திரு அருட்பாவுடன் ஒப்பிட்டுக் காட்டுவதே 'சூபிக் கொள்கையும் திருஅருட்பாவும்' என்னும் இயலாகும்.

அண்மைக் காலத்தில் சமய நல்லிணக்கத்தை நோக்கமாகக் கொண்டு வளர்ந்து வரும் புதிய துறையே ஒப்பியல் சமய ஆய்வுத் துறையாகும், இவ் அடிப்படையில் இறைவனின் பேரன்பினைப் பெறுவதற்கான பாதையில் சூபித்துவமும் திருவருட்பாவும் ஆன்மீகத்தின் அடிப்படையில் ஒருங்கிணைந்திருப்பதை இந்நூலாசிரியர் நன்குணர்த்தியிருப்பதைப் பாராட்டுகின்றேன்.

**டாக்டர். பீ.மு.அஜ்மல்கான்**

# மதிப்புரை

**முனைவர். ந.முத்துமோகன்,**
தலைவர், குருநானக் ஆய்வகம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை-21.

சர்வதேச அளவிலும் இந்திய அளவிலும் சமயங்கள் புத்துயிர்ப்பு பெற்று வருகின்றன. சமய ஆய்வுகளும் புது உற்சாகம் பெற்று வருகின்றன. நவீனத்துவத்தின் (Modernity) இலட்சியங்கள் பலநெருக்கடியை ஒட்டி வருவதால் அந்த நெருக்கடியை ஈடுகட்ட சமய மற்றும் ஆன்மீகக் கருத்துகள் முன்கை எடுத்து வருகின்றன. இன்னொருபுறம் சமயங்களின் புத்துயிர்ப்போடு, சமயங்களுக்கிடையிலான மோதல்களும் மறு உயிர்ப்பு பெற்று வருகின்றன. வரும் யுகம் கலாச்சாரங்களுக்கிடையிலான மோதல்களின் யுகம் என்று ஹன்டிங்டன் என்ற அறிஞர் கூறியுள்ளார். இதனை உண்மையாக்கும் வகையில் சமய மற்றும் கலாச்சார அடையாளங்கிடையிலான சண்டைகளும் சச்சரவுகளும் சமீப காலங்களில் அதிகரித்து வருகின்றன.

நவீனத்துவத்திற்கு மாற்றாக ஆன்மீக உணர்வை வளர்க்கப் போகிறோம் என்று கூறிக் கொண்டு புறப்படும் மதங்கள் வழியிலேயே தத்தமது சொந்த அடையாளங்கள் குறித்த சர்ச்சைகளில் மாட்டிக் கொண்டு அழிவுப் பாதைக்குத் திரும்புகின்றன. அடையாளங்கள் குறித்த பிரச்சினை ஆன்மீகப் பிரச்சினையா, அதிகாரம் குறித்த பிரச்சினையா என்று சிந்திக்க வேண்டியுள்ளது.

மதங்கள் ஒவ்வொன்றும் இறை அனுபவம் என்ற ஆதாரத்தின் மீது கட்டப்படுவதால், மதங்கள் இறைவனின் பெயரால் மக்களை அழைப்பதால் மத இயக்கங்கள் மிகவேகமாகவும் உக்கிரமாகவும் வன்முறையில் ஈடுபடத்துவங்கி விடுகின்றன. சமீப காலங்களில் மத வன்முறைகளால் ஏற்பட்டுள்ள அழிவுகள் ஏராளம்.

இம்மாதிரிச் சூழல்களில் கல்வியாளர்கள் சமூகப் பொறுப்போடு சமய ஆய்வுகளில் ஈடுபடவேண்டியது அவசியமாகிறது. ஆசிய, ஆப்பிரிக்க, அரேபிய நாடுகளில் சமய ஆய்வுகளில் கல்வியாளர்களின் பங்களிப்பு மிகக் குறைவாகவே இருந்து வருகிறது. ஆனால் சமய ஆய்வுகளில் கல்வியாளர்களுக்கு ஏராளமான வாய்ப்புக்கள் உள்ளன. சமயங்கள் குறித்த பன்முகப்பட்ட ஆய்வு அணுகுமுறைகள் கல்வியாளர் களின் வசம் உள்ளன. சமூகவியல், உளவியல், மெய்யியல், குறியியல் (Semiotics) உரையியல் (Hermeneutics) எனப் பல்வேறு அணுகுமுறை களின் முழு ஆற்றலும் சமய ஆய்வுகளில் பயன்படுத்தப்பட வேண்டும்.

இத்தகைய பின்புலத்தில் டாக்டர். இரா. மலர்விழி மங்கையர்க்கரசியின் "ஒப்பியல்சமய நோக்கில் திருஅருட்பா" எனும் நூல் வெளிவருவது மகிழ்வைத் தருகிறது.

வள்ளலார் இராமலிங்கர் தமிழின் மிகச்சிறந்த சிந்தனையாளர். ஜீவ காருண்யம் எனப்படும் உயிரிரக்கக் கோட்பாட்டின் பார்வையில் இறைவனை அருள் வடிவாகக் கண்டவர். இராமலிங்கரது இறை உயிர் கோட்பாடு, அவர் அனுபூதி மற்றும் அப்பாலை நிலையைச் சித்தரிக்கப் பயன்படுத்திய குறியீடுகள் ஆகியவற்றைப் பிற சமயங்களோடு ஒப்பிட்டு ஆய்வுகள் நடத்தியுள்ளார். ஆன்மீகத் தேடலைக் காணா உலகம் நோக்கிய பயணமாகவும் அனுபூதி உறவைத் திருமணமாகவும் இராம லிங்கர் உருவகித்து உள்ளமை பிற சமயக் குறியீடுகளோடு பொருத்திக் காட்டியது சிறப்பாக அமைந்துள்ளது. அனுபூதி அனுபவ நிலையில் இராமலிங்கர் அடையும் அடிப்படை மனமாற்றம் (இரச வாதம்) அவரால் வெவ்வேறு உருவகங்களாகச் சித்தரிக்கப்பட்டுள்ள விதத்தினையும் டாக்டர். மங்கையர்க்கரசி விரிவான ஒப்பியல் ஆய்விற்கு ஆட்படுத்தியுள்ளார்.

நூலின் பிற்பகுதியில் இஸ்லாமியச் சூபியம், சமணம், கிறித்துவம் ஆகிய சமயங்களோடு வள்ளலாரின் கருத்து நிலைகளை ஆழ ஒப்பிட்டுள்ளார். சூபியம் குறிப்பிடும் ஆன்மீகப்படி நிலைகளும் வள்ளலார் பயணம் செய்த பாதையும் ஒத்திருந்தன என்பது சுவாரசியமானது. சமணத்தின் உயிர் இரக்கக் கொள்கை, மற்றும் அதன் தத்துவ நிலைகள் வள்ளலாருடன் ஒப்புமை பாராட்டி நிற்பது சுவையானது. கிறித்துவ சமய மதிப்புகள் பல இராமலிங்கரின் மனிதநேயத்துடன் ஒத்து நிற்பதுவும் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. ஒப்பீட்டு ஆய்வின் போது சமயப் போக்குகளுக்கிடையில் உள்ள சில வேறுபாடுகளையும் டாக்டர். மங்கையர்க்கரசி சுட்டிக் காட்டத்தவறவில்லை.

மீண்டும் சமய ஆய்வுகளில் கல்வியாளர்களின் செல்வாக்கு அதிகமாக வேண்டும் என்பதையே வலியுறுத்த விழைகிறேன். கல்வியாளர்களின் அறிவு, சுதந்திரம், சமூகப் பொறுப்பு ஆகியவை முழு ஆற்றலுடன் சமய ஆய்வுகளில் வெளிப்பட வேண்டும். நமது காலத்தின் நெருக்கடிகளைச் சந்திக்கக் கல்வியாளர்கள் முன்வர வேண்டும்.

டாக்டர். மங்கையர்க்கரசியின் இந்நூல் மேற்கூறிய நோக்கத்தை முன்னிறுத்தியதாக அமைந்துள்ளதால் இந்நூலையும் நூலாசிரியரையும் வாழ்த்துகிறேன். தொடர்ந்து அவரது ஆய்வுகள் சிறக்க விரும்புகிறேன்.

அன்புடன்

**ந.முத்துமோகன்**

# நன்றியுரை

பாலகாண்டத்திலேயே அருட்பா பயிற்றுவிக்கப்பட்டது. "எல்லா உயிர்களும் இன்புற்று வாழ்க! கொல்லாவிரதம் குவலயம் எல்லாம் ஓங்குக! உண்மையும் நன்மையும் ஓங்குக உலகினில்! சற்குருநாதா சற்குருநாதா சன்மார்க்க சங்கம் தழைக்க அருள்தாதா!" எனக் குடும்பகோசமாகக் கூறும்போது ஓர் உணர்வு நெகிழ்வு ஏற்பட்டது. இலக்கியநுகர்வே வாழ்வியல் என்றானபின் பக்தி இலக்கியத்தைச் சட்டெனமனம் பற்றிக் கொண்டது. இராமலிங்கரின் திருவருட்பாவே இப்பிறப்பின் இலக்கு எனத் தெளிந்து நின்றது. அத்தெளிவின்பின் தொடங்கிய தேடுதலில் ஒரு குறிப்பிட்ட வரையறையின் கீழிருந்து மட்டுமே காண வேண்டிய அருள் அனுபவப் பாடல்கள் அவையல்ல என்ற உறுதியும் பிறந்தது. அனைத்துச் சமயங்களையும் ஒருகுடைக்கீழ் கொண்டு வருவதற்கு வள்ளலார் கண்ட பரந்த சிந்தனா விளைவே "அருட்பெருஞ்சோதி ஆண்டவர்", "சன்மார்க்கம்" என்பன, எனவே அவரது பாடல்களைப் பிறசமயக் கருத்துகளுடன் ஒப்பிடவேண்டும் என்ற முனைப்பின் விளைவே இந்நூல்.

கடந்து வந்த பாதையில் காலடியெடுத்து வைக்கக் கற்றுத்தந்த தந்தைக்கும், கைபிடித்த காலந்தொட்டும் கலந்துதவும் துணைவர்க்கும் என்நன்றி என்றும் உரியது. நூலாக்கத்திற்கு வழிகாட்டியாக அமைந்த முனைவர். தே. ஆண்டியப்ப பிள்ளை அவர்களுக்கு என் நன்றியறிதலைக் காணிக்கையாக்குகிறேன். சமய நல்லிணக்கம் குறித்ததா எனக்கேட்டு ஆர்வமுடன் வாழ்த்துரை வழங்கிய பல்கலைக்கழகத் துணைவேந்தருக்கு நன்றி. தமிழார்வம் மிக்குடைய பதிவாளர் முகமலர்ச்சியுடன் பாராட்டுரைமட்டுமல்லாது அணிந்துரையாகவே வழங்கினார்; அவர்கட்கு நன்றி! ஒப்பிலக்கிய ஆய்வில் தனித்துவம் பெற்று விளங்கும் தமிழண்ணல் ஐயா இந்நூலுக்கு வழங்கிய மதிப்புரை யான் பெற்றபேறு; அவர்க்குப் பணிவான நன்றி! சமய இலக்கிய ஆய்வில் ஆழ்ந்த தோய்வுடைய தமிழியற்புல ஒருங்கிணைப்பாளர் திரு. சு. வேங்கடராமன் அவர்கள் தேர்வுரை இந்நூலுக்கு நல்ல அடையாளந் தேடித்தருவதற்குத் துணை நிற்கும். அன்னார்க்கு என் இதயந்நிறைந்த நன்றி! கிறித்தவ சமயக் கருத்துகள் குறித்து விளக்கம் அளித்தும் அருளுரையும் வழங்கிய அருள். திரு. ஞானப்பிரகாசம் அவர்களுக்கு நன்றி! இஸ்லாமிய சமய நூல்கள் தந்தும் கருத்துரை வழங்கியும் சிறப்பித்த முனைவர். பீ.ஜ. அஜ்மல்கான் அவர்களுக்கு நன்றி! சமய ஆய்வுகள் குறித்தான சீரிய விமர்சகரான முனைவர். ந. முத்துமோகன் அவர்களுக்கும் என் நன்றி உரியது. வடலூர் சென்றபோது உண்டி, உறையுள், கருத்துரை தந்துதவிய சன்மார்க்க ஆராய்ச்சி நிலையத் தலைவர் தவத்திரு. ஊரனடிகள் ஐயா அவர்களுக்கு என் நன்றி என்றும் உரியது. ஆதரவும் அன்புரையும் வழங்கிவரும் தமிழியற்புலப் பேராசிரியர் அனைவர்க்கும் நன்றி.

நூலாக்கத்திற்குப் பொருளுதவி நல்கிய திருப்பதி தேவஸ்தானத்திற்கு நன்றிக்கடப்பாடுடையேன். நூல்வடிவம் பெறுதற்குத் தோன்றாத் துணையாக நின்ற அத்துணை நல்உள்ளங்களுக்கும் என் நன்றி. நூலைச் சிறந்த முறையில் அச்சிட்டு வழங்கிய பாண்டியன் கணினி அச்சகத்தார்க்கு நன்றி.. நூலை ஏற்றுக் கருத்து வழங்கும் தமிழ்கூறு நல்லுலகத்தார்க்கும் என்நன்றி.

அன்புடன்,

இராம. மலர்விழிமங்கையர்க்கரசி.

# ஒப்பியல்சமய நோக்கில் திருவருட்பா

## 1. ஒப்பியல்சமயம்-அறிமுகமும் விளக்கமும்

ஒப்பியல்சமயம் என்பது சமயங்களை ஒப்பிட்டு அறிதல், வேறுபட்ட சமயங்களை அல்லது சமய இலக்கியங்களை ஒப்பீட்டு முறையில் ஆய்ந்து ஒப்புமைகளையும், உறழ்வுகளையும் எடுத்துக்கூறும் ஆய்வு முறையே ஒப்பியல்சமயம், இலக்கியங்களை ஒப்பிடுதல் எவ்வாறு ஒப்பிலக்கியமாயிற்றோ அதுபோலவே சமயங்களை ஒப்பிட்டு அறிதல் ஒப்பியல்சமயமாகும்.

### ஒப்பியல்சமயம்-வழங்கப்படும் விதம் :

ஒப்பியல்சமயம் (Comparative Religion) என்ற பதத்தைப் பின்வருமாறும் வழங்குகின்றனர்.

"சமயங்களின் வரலாறு (History of Religions)

உலகச் சமயங்கள் (World Religions)

சமய ஆய்வுகள் (Religious studies)

சமயங்களில் ஆய்வுகள் (Studies in Religion)"

(Merciea Eliade Encyclopedia of Religions. Vol-3. P-578)

என்பனவாக வழங்கப்படினும், அதன் உள்ளார்ந்த விளக்கம் ஒரே கருத்து பற்றியதுதான். எனவே சமயங்களைப் பற்றிய ஒப்பீட்டியல் ஆய்வே (Comparative Study of Religions) ஒப்பியல் சமயம் எனக் கொள்ளலாம்.

### ஒப்பியல்சமய ஆய்வு தோன்றியதற்கான காரணங்கள் :

சமயங்களைப் பற்றிய தகவல்களின் தொகுப்பான சமயக் கலைக்களஞ்சியம் பின்வரும் காரணங்களைக் குறிப்பிடுகிறது.

1. பிறநாட்டுச் சமய மரபுகளை அறியும் ஆர்வம்.

2. மேலைநாட்டு மரபின் மீது எழுந்த பற்று அந்நாட்டு சமயத்திலும் தனதிடத்தை பிடித்தது.
3. உலக மதங்களின் தொழிற்படுநியதியை அறிகின்ற ஆர்வம்.
4. அனுபூதியை அப்புறப்படுத்திப் பிற விதிகளைக் காணும் முயற்சி.
5. பல நூற்றாண்டுகளாக உலகின் பல்வேறுபட்ட சமய நம்பிக்கைகள், சடங்குகள் இவற்றையெல்லாம் அறியும் ஆர்வத்தினால் பெறப்பட்ட தகவல் திரட்டுகள்

என மேற்குறித்த காரணங்களே ஒப்பியல்சமய ஆய்விற்கு அடிப்படையாயின என்கிறார் எலியாத். அதனோடமையாது அவற்றைக் கண்டறிந்து மனித குலத்திற்கு வெளிக்காட்டியதன் பின்னர் எழுந்த மனமாற்றமும் காரணமாயிற்று. எல்லாவற்றையும் அறிந்து கொள்ள வேண்டுமென்ற பரந்துபட்ட அறிவு அதனை மேலும் வலுவூட்டியது.

**சமயம் - ஒப்பியல்சமயம் - விளக்கங்கள் :**

*அர்னால்டு டாயின்பி* : **(Arnold Toynbee)**

"உலகத்தின் உருவாக்கம் விரிவு எதனால் என்பது மர்மமாகவே உள்ளது. அதனை விளக்கும் திறவுகோலாக அமைவது சமயம்" (Comparative studies of Religion, P-1)

*கஸ்டவ் மென்சிங்* : **(Gustave Mensching)**

"சமயம் என்பது என்னவெனில், கடவுளிடம் மனிதனுக்கு ஏற்படும் ஒரு தொடர்பு" (Structures and Patterns of Religion P-5)

*மெர்சியா எலியாட்* : **(Mercia Eliade)**

"இரு சமயங்களுக்கிடையே அல்லது பல்வேறு சமயங்களுக்கிடையே நிகழும் ஒப்பீட்டுக் கல்வியே ஒப்பியல் சமயம்" (Encyclopedia of Religion)

*சாமுவேல் மாக்கேயுலி ஜாக்ஸன்* **(Samuel Macauley Jackson)**

"சமய வரலாறு, ஒப்பீடு, சமயக் கோட்பாடு எனும் மூன்றையும் உள்ளடக்கியதே ஒப்பியல் சமயம் (Comparative Religion)" (Encyclopedia of Religious Knowledge. P-190)

*ஜீடன். ஏ.எஸ்.*

"ஆய்வு வரலாற்றின் ஒப்பியல் ஆய்வுகளில், சமயங்களைப்பற்றி நிகழ்கின்ற ஒப்பாய்வுகள் தனக்கென ஓர் உயரிய இடத்தைக் குறுகிய கால அவகாசத்திலேயே தக்க வைத்துக் கொண்டன." (Comparative Religion. P-9)

**பிராண்டன் மேட். எஸ்.ஜி. எப். (Brandon Madd. S.G.F.)**

"பல்கலைக் கழகக் திட்டத்தில், மனிதவியல் சார்ந்த பாடப்பகுப்புகளில் ஒப்பியல் . சமயப் பாடமானது தற்போது விரிவாக்கம் பெற்றுவருகிற முக்கியமான பாடமாகும். ஒப்பியல் சமயம் என்பது மிகவும் பிரபலமாகிவிட்ட, சொல்லுவதற்கு வசதியான, அங்கீகரிக்கப்பட்ட ஒரு கல்வித் துறையாக கடந்த ஒரு நூற்றாண்டுக்கும் மேலாக விளங்குகிறது. ஆயினும் அது தன் தனித்துவத்தைத் தக்க வைத்துக் கொள்ள மெதுவாகவே செயல்படுகிறது." (A dictionary of Comparative Religion, P-1)

என்கிறார் பேராசியர் பிராண்டன் மேட் என்பவர். அவர் மான்செஸ்டர் பல்கலைக் கழகத்தின் ஒப்பியல் சமயத்துறைத் தலைவராக விளங்கியுள்ளார். முதன் முதலாக ஒப்பியல் சமயம் குறித்துத் தனியானதொரு அகராதியையும் தொகுத்து வெளியிட்டுள்ளார்.

**ஜீவான்ஸ். எப்-பி. (Jevons. F.B.)**

"கால ஆராய்ச்சியின் முடிவுகளிலிருந்து உலகம் முழுவதுமாகச் சமயங்களின் எண்ணிக்கை பல்கிப் பெருகி இருந்தது என்பதனை அறியமுடிகிறது. அவை ஒவ்வொன்றும் மற்றதனிலிருந்து வேறுபட்டுள்ளன. அதே சமயத்தில் ஒன்றில் மற்றொன்றின் பிரதிபலிப்பு ஏதாவது ஒரு பரிமாணத்தில் வெளிப்படத்தான் செய்கிறது. அது ஏனெனில் அவற்றுக்கிடையே காணப்பட்ட ஒப்புமைக் கூறுகளும், வேற்றுமைக் கருத்துக்களுமேயாகும். அவையே அவற்றை ஒப்பிடுவதற்கான ஏதுக்களை வழங்கின. அவ்வேதுக்களின் மூலங்களை அறியும் முயற்சியில் உருவானதே ஒப்பியல் சமயம் அல்லது சமயங்களுக்கிடையே நிகழ்ந்த ஒப்பாய்வு" (Comparative Religion, P-1)

என்கிறார் ஜீவான்ஸ். அதே நேரத்தில் அது ஆபத்தானது என்று எச்சரிக்கையும் விடுக்கிறார்.

**பாய்குயுட். ஏ.சி. (Bouquet. A.C.)**

"ஒப்பியல் சமயம் என்பது உலகில் உள்ள புனிதமான, மிகச் சிறந்த சமயங்களைப் பற்றிய தரவுகளையும் ஒப்புமைகளையும் தரக்கூடிய உயராய்வு" (Comparative Religion, P-16)

**கேதார் நாத் திவாரி (Kedar Nath Tiwari)**

"ஒப்பியல் சமயம் என்பது ஓர் அறிவியல் ஆய்வே" (Comparative Religion Nature Aims and Objectives, P-4)

மேற்குறித்த விளக்கங்களினின்று, சமயங்களைப் பற்றிய ஒப்பு ஆய்வு என்பதன் சுருங்கிய வடிவமே ஒப்பியல் சமயம், சமயங்களுக்கிடையே அல்லது பல்வேறு சமயங்களுக்கிடை நிகழும் ஒப்பீட்டுக் கல்வி எனவும் கொள்ளலாம்.

## ஒப்பியல்சமயம் - அறிவியலாகுமா?

ஆரம்பகாலத்தில் ஒப்பியல் சமயத்தைச் சமய விஞ்ஞா (The Science of Religion) என்றும் அழைத்துள்ளனர். தற்போ ல் எழுதியுள்ள கேதாரிநாத் திவாரியும் அதனை அடியொற்ற அறிவியல் ஆய்வே சமய ஆய்வு என்றும் குறிப்பிடுகிறார். ஆன இவ்வாறு அழைக்கலாமா என்பது குறித்துப் பல்வேறு கருத்து வழங்கி வந்தன. அவற்றுள் அறிவியலாளர்கள் கூறும் மூ தமான கருத்துகள்.

மொழிநிலையில் ஒப்பியல் சமயம் என்பது பழமையான

இதுதான் விஞ்ஞானம் என்று சமயத்திற்கும் சொல் பேராசை.

புனிதமான ஒன்றை அறிவியல் எனக்கூறி ஆய்வதை ஏ தில்லை.

அறிவியல் அறிவு என்பது பூரணமானதன்று, சரிபார்த்தலு டியது. முறையான ஒழுங்குபடுத்தப்பட்ட கல்வியே அறிவி கல்வியை அனுபவித்த அளவே விஞ்ஞானத்தில் இயலு அறிவியல் என்பது எதனையும் ஏனென்று கண்டறி ஆராய்ச்சிக்குத் தடை விதிக்காததால் அதனைச் சமய ஆய்விற் பித்துக் கொண்டனர். ஒப்புக்கொள்ளப்பட்ட மெய்மைகளு ன் (Varified facts) அடிபணியும். எனவே சமய ஒப்பி என்பதை விடச்சமய அறிவியல் என்றே கூறவேண்டும். அத றுக் கொள்ளக் கூடிய காலம் வரவேண்டும் என்று ஒப்பி சமயத்திற்கான மாதிரி முன்வரைவைத் தந்த சாமுவேல் மாக்செ க்ஸன் என்பவர் குறிப்பிடுகிறார். 1909-ல் அவர் எழுதிய 2-ல் கேதார்நாத் திவாரியும் அது ஓர் அறிவியல் ஆய் எனக் குறிப்பிட்டதால் வலியுறுத்துவதாகக் கொள்ள முடியு

புலன்களுக்கு அப்பாற்பட்டவைகளாகச் சிலபோது சமயங் ளங்கினாலும் கூட ஆராய்ச்சியின்போதாவது அறிவி ர்வை வேண்டும். சமய விசாரணையில் அறிவியல் பூர்வம முறைகளை (Scientific methods)க் கொண்டுவருவதாக ஆய்வ ளங்க வேண்டும். அப்போதுதான் சமய ஆய்வுகளும் அறிவி ய்வுகளுக்கான உயரிடத்தைப் பெற முடியும்.

## ஒப்பியல் சமய ஆய்வு வரலாறு

ஒப்பியல் சமய ஆய்வு எந்தக் காலகட்டத்தில் தோன்றியது என்பது ஆய்விற்குரியதே. ஆனால் மாக்ஸ்முல்லர் காலத்தில்தான் தோன்றியிருக்கக் கூடும் என்று ஒப்பியல்சமய ஆய்வாளர்களும், நூலாசிரியர்களும் கருதுகின்றனர்.

ஒப்பியல் சமயம் என்றால் எவ்வாறிருக்கவேண்டும் என்று மாதிரி வரைவினை வழங்கியது புதிய ஸ்காவ்ஃப் ஹெர்ஜோக் கலைக்களஞ்சியம். சமயங்கள் குறித்த அறிவைப் பெருக்குவதற்காகத் தொகுக்கப்பட்ட அக்கலைக் களஞ்சியத்தில் சாமுயேல் மாக்கேயுலி ஜாக்ஸன் என்பவர் பின்வருமாறு கூறுகிறார்.

"ஒப்பியல் சமயம் (Comparative Religion) என்பது புதியதுறை. மாக்ஸ்முல்லரின் இறுதிக் காலத்தில் அவரது நினைவைப்பொருத்த வரை கிறித்தவமும், ஜீடாயிஸமுமே ஒப்பியல் சமயம் என நினைத்தார். கிரேக்க, ரோமர்களின் சமயங்களைப் புராணங்கள் எனத் தள்ளிவிட்டனர். பிறசமயங்களைப் பற்றி அறிந்திருக்கவில்லை.

எலிசபெத் காலத்தை (Elizabethan Era) நெருங்கும் போதுதான் முகமதியச் சிந்தனைகள் தலையெடுக்கத் தொடங்கின. போர்களின் பயனாக அடுத்தவரின் தெய்வ நம்பிக்கை குறித்து ஆய்ந்தனர்.

## தேவைகளும் தடைகளும்

ஒப்பியல் சமய ஆய்வுகளுக்கு வருமுன்னர் அதற்கவசியமான இரு தேவைகள் உள்ளன.

1. பல சமய நம்பிக்கைகளைப் பற்றிய அறிவுவேண்டும்.
2. பல மதங்கள் இருப்பது தெரியவரவேண்டும், அவை மதங்கள் என்று மக்களால் அறிந்து கொள்ளப்பட்டிருக்கவேண்டும். என்பவையே அவை.

அத்தேவைகளின் நிறைவேற்றமானது பல நாட்டுமக்களைக் கண்டு பழகி அறிவதனாலேயே சாத்தியமடைய முடியும். உலக நாடுகளுக்கிடையே பயணமும், சுழற்சியும் நிகழ்ந்தால்தான் சமயக் கண்டுபிடிப்புகள் நடைமுறைச் சாத்தியமாகும். 15-ம் நூற்றாண்டில் கொலம்பஸின் பயணம்தான் அவற்றை உலகிற்கு வெளிக்கொணர ஏதுவாயிற்று. உலக மக்களின் கலாச்சாரப் பண்பாட்டுக் கூறுகள் காலதேச வர்த்தமான எல்லைகளைக் கடந்து வெளிஉலகுக்குத் தெரிய ஆரம்பித்தது. மற்றக் கூறுகளைப் போல சமயத்தின் மீதும் மக்களின் ஆர்வம் ஏற்படத் தொடங்கியது.

வரலாற்று முறையில் அவற்றை நுணுகி ஆராய்ந்து அறிதல் அவசியமாகிறது. ஆனால் அதற்கும் இருவகைகளில் தடை ஏற்படுகிறது. பிடிவாதப்போக்கு, போதிய வசதியின்மை எனும் இவையே ஒப்பியல் சமய ஆய்வு வளர்தற்குத் தடையாயின.

"15-ஆம் நூற்றாண்டிலிருந்து மூன்று நூற்றாண்டுகள் தகவல் சேகரிப்பிலேயே (Data Collection) கழிந்தது. என்றாலும் அதன் முக்கியத்துவத்தை யாரும் ஒத்துக்கொள்ளவும் இல்லை. கண்டுகொள்ளவும் இல்லை.

ஒரு சமயத்தின் சொந்த இயல்பு அயலாருக்கு ஏற்கவியலாததாகவே விளங்கியது. கிறித்தவர்கள் உயிர்த்தெழுதல் என்பது மற்றவரிடம் இல்லை என்பர். மற்ற சமயங்களில் உள்ள உயரிய பண்புகளை வைத்து எண்ணாது தனது சமயத்தின் கூறுகளைவைத்தே விளக்கமளிப்பது என்ற போக்கு இருந்தது.

கிறித்தவம் மற்ற சமயங்களை ஏற்பதில்லை என்பதற்கு இருசான்றுகள் :

1. கிறித்தவரல்லாதாரின் சமயங்களில் நிகழும் சிறுமைகளைக் கேலிசெய்தல்.
2. பிரான்க் என்பவர் "இந்து சமய உண்மை" என்ற நூலை மிஷினரிக்கு அனுப்பினார். அதற்கு "மிஷினரியில் இருந்து கிறித்தவத்தைப் பரப்புவதற்கு அனுப்பினோமே தவிர இந்து பற்றிப் படிக்க அல்ல" என்று வந்தது பதில்.

கிறித்தவத்தில் உள்ள உயர்பண்புகளை மற்ற மதங்களும் கொண்டுள்ளன என்பதைக் கூறும்போது ஏற்றுக்கொள்ள இயலாத நிலையே மேற்குறித்த செயல்களுக்கான காரணமாகும். அதனால் உடன்பாடு, எதிர்மறை என்ற இருபக்கங்களிலும் இருந்து கண்டனம் எரிச்சல் என்ற உணர்வுகளே எழுந்தன.

"கடவுளின் குரல் கேட்கப்பட்டது" என்ற வாசகம் தனது சமய நூலில் குறிப்பிட்டிருப்பதைப் பரவசத்துடன் நம்பினர். அதே மனம், கடவுளின் குரல் ஒருசில இடங்களில் மட்டுந்தான் கேட்கப்பட்டதா? என வினவப்படும்போது தடுமாறுகிறது. தங்கள் சமயத்தார் வசிக்கும் இடந்தவிர வேறு இடங்களில் கடவுள் இருக்கிறார், பேசினார் என்றபோது காதுகளை அடைத்துக் கொள்ளும் போக்கினை உடையராகின்றனர்.

"உண்மைச்சமயம் - பொய்ச்சமயம்" என்ற நூல் வெளியானதி லிருந்தே கிறித்தவர்களின் அந்த எண்ணப்போக்கு வெளிப்பட்டது (Encyclopedia of Religious Knowldege. P-191)

மேற்கண்ட கருத்துக்கள் ஆரம்ப காலகட்டத்தில் ஒருசமயம் மற்றொரு சமயத்தை எளிதில் ஏற்கவில்லை என்பதையே நமக்கு விளக்குகிறது. ஆனால் அதே கிறித்தவசமயத்தவரே ஒப்பியல் சமய ஆய்வு வளர்தற்கும் உறுதுணையாகவும் விளங்கினர் என்பது குறிப்பிடத்தக்கது.

**ஆரம்பகாலச் சாயல் :**

"ஒப்பியல் சமயம் ஆரம்பகாலத்தில் ஒப்பிலக்கணத்துறையின் சாயலைப் பெற்றே வளர்ந்தது. அவ்வாறு அதன் வளர்ச்சி அமைந்ததற்கு இருகாரணங்கள் வழங்கின.

1. இந்து சமயத்தின் முக்கியமாகக் கருதப்பட்ட நான்கு வேதங்களின் செய்திகளும், இந்தியச் சமயங்களின் செய்திகளும் உலகிற்கு வெளிவருதற்குச் சமஸ்கிருதத்தைப் பற்றிக் கண்டறிய வந்த மொழிநூல் அறிவே காரணமாயிற்று.
2. ஜெண்டாவஸ்தா என்ற நூலின் மொழி நடை இந்து, பார்சி, கிரேக்கர், ரோமர், ருடாயினிக் என்பவர்களின் தொடர்புடைய மொழிகளின் நடையாக இருந்தது என்று கூறப்பட்டது என்பார் சாமுவேல்.

அவையே ஒப்பியல் சமய ஆய்விற்கு ஓரளவு ஒத்துப்போகும் இயல்பைத் தந்தன. தொடர்புடைய மொழிகளைப் பேசியவர்கள் தொடர்புடைய கடவுளை வணங்கினர் என்ற நம்பிக்கையைத் தந்தது. அந்நம்பிக்கையே ஒப்பியல் சமய ஆய்விற்கு பின்வரும் பரிணாம வளர்ச்சிகளுக்கு அடிப்படையாக அமைந்தது.



## மாக்ஸ்முல்லரும் அப்போதைய வளர்ச்சியும்

ஒப்பியல் சமய வரலாற்றிலே இடம்பெற்ற அனைவரையும் விடக் கூடுதலான புகழ் மாக்ஸ்முல்லரையே சாரும் என்பது குறிப்பிடத்தக்கது.

"ஒப்பியல் சமயச் சொற்பொழிவுகள்" என்ற நூலில் ஸ்பீபனோஸ் நிர்மலெண்டு என்பவர் பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

"ரிக்வேதத்தைப் பற்றிய 3000 ஆண்டு காலக் கல்வியானது "கீழ்த்திசையின் புனித நூல்கள்" (The Sacred Books of the East) என்று மாக்ஸ்முல்லரால் 50 தொகுதிகளாக எழுதப்பட்டதன் பின்னரே ஒப்பியல் சமய ஆய்வு உலகின் கவனத்தையும், முக்கியத்துவத்தையும், வளர்ச்சியையும் பெற்றது எனக் கூறலாம். அதன்பின்னரே அனேக ஒப்பியல் சமய இருக்கைகள் தோன்றின. பல்வேறு நாடுகளிலும் உள்ள பல பல்கலைக் கழகங்கள் ஒப்பியல் சமய ஆய்வை அறிவியல் பூர்வமாக மேற்கொள்ள விழைந்தன" (Lectures on Comparative Religion, P-6)

என்ற வாசகங்கள் ஒப்பியல் சமய ஆய்வின் தொடக்கம் மாக்ஸ்முல்லரில் இருந்துதான் ஏற்பட்டது என்பதை வலியுறுத்துகின்றன.

"1653-ல் அலெக்சாண்டர் ரோஸ் என்பவர் லண்டனில் உலகச் சமயங்கள் (The Religions of the world) என்ற நூலை எழுதினார். அதில் கிறித்தவர்கள் கிறித்தவம் அல்லாத பிற சமய நூல்களையும் படிக்கவேண்டும் என்று வலியுறுத்தினார். அதேவேளை மற்றவையெல்லாம் பொய்மைச் சமயங்கள் (False Religions) என்ற கருத்துப்படவே நூலினை முடித்துள்ளார்.

1733-34-ல் பி.பிக்கார்ட், ஜே.எப். பெர்னாட் என்பவர்கள் (ஜெர்மன் மொழியில் ஆம்ஸ்டர்டாம் என்பவரால் ஒன்பது தொகுதிகளாக 1723-43-ல் எழுதப்பட்ட நூலை) மொழிபெயர்ப்பு நூல் ஒன்றினை வெளியிட்டனர். உலகநாடுகளில் நடைபெறும் சமய நிகழ்வுகளும் பழக்கவழக்கங்களும் (Ceremonies and Religious Customs of the .... World) என்ற அந்நூல் ஆறுதொகுதிகளின் மொழிபெயர்ப்பாக மட்டுமே அமைந்தது. அத்தொகுதிகளில்தான் உலகமக்களிடையே பிறசமயங்கள், பழங்குடி மக்களின் நம்பிக்கைகள் போன்றவை நெகிழ்ந்து வந்ததைக் குறிப்பிட்டுக் காட்டினர். அதன்பின்னரே ஒப்பியல் சமய ஆய்வின் விரிவு நன்முறையில் தொடங்கியது எனலாம்.

ஜே.ஜி. வான்ஹெர்டர் என்பவர் 1784-91-ல் மானுடவியல் கூறின் அடிப்படையில் விரிவான ஆய்வு நிகழ்த்திய லெய்பிக்ஸ் என்பவரது நூலை மொழிபெயர்த்து வெளியிட்டார். அது கோட்பாடுகளுக்கு எதிரான வரலாற்று உணர்வினை வளரச் செய்தது.

அதன் பின்னரே ஹெர்பர்ட் ஸ்பென்ஸர், டெய்லர் என்பவர்கள் எல்லாச் சமயங்களையும் இயற்கைவழிபாடு எனும் ஒரே அடிக்கருத்தின்கீழ் கொண்டு வரமுடியுமா என ஆராய்ந்தனர். அதன்பின்னரே பழைமை, ஆதிகாலச் சமயச் சிந்தனைகளின்பால் கவனம் ஏற்பட்டது. ஜி. டபிள்யூ. வான் ஹெகல் என்பவரும் அதே பாதையில் தனது ஆய்வை நிகழ்த்தினார். 1832-ல் அவரது ஆய்வுகள் நிகழ்ந்தன.

1849-1874-ல் ரிக்வேத சம்ஹிதா (Rig Veda Samhita) என்ற நூலானது 6 தொகுதிகளாக மாக்ஸ்முல்லரால் வெளியிடப் பட்டது. அதுவே வேத்த்தினை ஆய்வின்பொருட்டு அணுகிய முதல் நூல்.

சி.பி. டையல் (C.P.Tiele), சி, டிலா சாயுஸ்யி (C. Dela Sausaye) என்ற ஹாலந்து நாட்டைச் சேர்ந்தவர்களும் பிரான்ஸைச் சேர்ந்த ஹெர்பர்ட்ஸ்பென்சர், இ.பி.டெய்லர், ஜே.ஜி. பிரேசர் போன்றோரும், இங்கிலாந்தைச் சேர்ந்த ஆன்ட்ருலாங் (Andrew Lang) என்பவரும், அமெரிக்காவைச் சேர்ந்த டி.ஜி. பிரிண்டன், (D.G. Brinton) ஜேம்ஸ் ஃப்ரீமேன் க்ளார்க் (James Freeman Clarke) என்பவர்களும், குறிப்பிடத்தக்க பங்களிப்பினைச் செய்தனர்.

மாக்ஸ்முல்லரின் சீரிய ஈடுபாட்டினாலும், மேற் குறித்தோரின் ஆழ்ந்த ஆய்வுப்பணிகளினாலும் ஒப்பியல் சமய ஆய்வு இருவிதப் பகுப்புகளாகப் பிரிந்து வளரத்தொடங்கியது. அவை மிகவும் சிறப்புடைய இரு கருத்தியல் பள்ளிகளை (School of Thoughts) உருவாக்கி வளர்த்தன. அவை.

1. மொழியியற் பள்ளி (Linguistic School)
2. மானுடவியற் பள்ளி (Anthropologycal School)

மொழியியற் பள்ளியினர் சமயத்தின் தோற்றத்தை அறிவதில் மாத்திரமே அக்கறை கொண்டனர். சொற்களின் மாற்றங்கள், மொழியமைப்புகளின் மாற்றங்கள், வடிவங்கள் என்பனவற்றுக்கே முதன்மை தந்தனர். சொல், அமைப்பு, திரிபு என்பனவற்றில் கவனம் செலுத்தியதனால் சமயங்களைப் பற்றிய பிறசெய்திகளை அவை புறக்கணித்தன என்றே கூறலாம். மொழியியல் செய்திகளை

வலிந்து விளக்குவதாகவே அமைப்பு முறையும் அமைந்தது. எனவே காலப்போக்கில் ஆர்வம் குறைந்து ஈடுபாடுடையோரும், மொழியியல் அறிவுடையோரும் மட்டுமே பங்குகொள்வதாக விளங்கிற்று.

மானுடவியற் பள்ளியினர் வரலாற்றுத் தரவுகளை அடிப்படையாக வைத்து விளக்கினர். உளவியல் ஒப்பாய்வு, மானுடவியல் ஒப்பாய்வு என்பவைகளின் அடிப்படையில் ஒற்றுமை வேற்றுமைகளைக் கண்டறியும் போக்கு உருவானது. மதம், பயிற்சி, மூலம் என்பவைகளையும் ஆர்வமுடன் ஆய்வு செய்தது. மானுடவியற் பள்ளியினரே சமயவிஞ்ஞானம் என்ற சிந்தனையையும் ஏற்படுத்தினர். அதன் வளர்ச்சி இவர்தம் கைகளிலேயே திகழ்ந்தது. இவ்விரு பள்ளிகளின் சிந்தனைப் போட்டி பின்னர் பரிணாமக் கோட்பாட்டுக்கும் அடிப்படையாக அமைந்தது.

## 19-ம் நூற்றாண்டின் வளர்ச்சி நிலை :

இந்நூற்றாண்டில் கூறப்பட்ட சமய அறிவியல் (Science of Religion) உலக மதங்களின் தரவுகளை வைத்து அவற்றின் பழமை புதுமைகளைப் பாகுபடுத்தி ஆராய்ந்து வந்தது. அந்த பாகுபாட்டாய்வில் ஒருமை காண்பதே சமய அறிவியலின் செயல்பாடாகவும் விளங்கியது. சீர்மை (Regularity), மாதிரியமைத்தல் (Pattern), பொருந்தவைத்தல் (Application) எனும் கூறுகள் சமய அறிவியலுக்கு வலிமை சேர்த்த சிறப்புக் கூறுகள்.

பலநூற்றாண்டுகளாக உள்ள பல்வேறுபட்ட சமய நம்பிக்கைகள், சடங்குகள் ஆகியவற்றை அறியும் ஆர்வம் அதனால் எழுந்தது. மேலும் நிரம்பத் தகவல்கள் பெறப்பட்டன. 19ம் நூற்றாண்டின் பிற்பகுதியில்தான் எல்லாரும் ஏற்றுக் கொள்ளக்கூடிய விரிவான கோட்பாட்டை (Comprehensive Theory) மேலை நாடுகள் உருவாக்கத் தொடங்கின. அதுவே வளர்ச்சிக் கோட்பாடு (Theory of Evoluation Progress or Development) அந்தச் சொற்பிரயோகத்தை காம்டே (Compty) என்பவரும், ஸ்பென்ஸரும் (Spencer) பயன்படுத்தினர். பரிணாம வளர்ச்சியோடு உலகளாவிய கோட்பாட்டை நிறுவ ஒப்பியல் சமயம் முயற்சி செய்ய விழைந்தது.

இந்த நூற்றாண்டில்தான் ஒப்பியல் (Comparative) என்ற சொல் செல்வாக்கும் பெறத்தொடங்கியது. "ஒப்பீட்டு இலக்கியம் என்னும் தனித்த துறை பன்னாட்டு அறிஞர்களால் ஒத்துக் கொள்ளப்பட்டு உருவாக்கப்பட்டது. முன்னர் புராணங்கள்,

தத்துவம், மொழியியல் ஆகிய துறைகளில் தான் அதிக ஒப்பிடுதல் மேற்கொள்ளப்பட்டு வந்தது". (Comparative Literature and Literary Theory)

புராணங்கள், தத்துவம் என்பன சமயஞ் சார்ந்த ஒப்பியலையே சுட்டி நிற்கின்றன. கடந்த ஒரு நூற்றாண்டுக் காலமாக ஒப்பிலக்கியம் ஆராய்ச்சிப் பொருளாக மேலைநாடுகளில் ஏற்றுக் கொள்ளப்பட்டபோதும் ஒப்பியல் சமயம் என்ற பதத்தை யாரும் பயன்படுத்தவில்லை. மாக்ஸ்முல்லர் மட்டுமே ஆரம்ப காலந்தொட்டு சமய ஒப்பீட்டில் தயக்கம் இருப்பதைச் சுட்டிக் காட்டினார், ஒப்பியல் சமய ஆய்வில் குறிப்பிட்ட முறை என்பது இன்னும் உருவாகவில்லை.

## ஒப்பியல் சமயப் பீடங்களின் வரலாறு :

1870 - 90-ல் இருவிதச் சிந்தனை மரபுகள் நிலவின என்பதை முன்னரே கண்டோம். அவ்விருவிதச் சிந்தனை மரபுகளான மொழி, மானிடவியல் சிந்தனை வீச்சுகள் உலகளாவிய நிலையில் தனது தாக்குரவுகளைச் செய்யத்தொடங்கின. அம்மரபினரின் இருநெறிகளிலும் உலகநாடுகளின் பல்கலைக் கழகங்கள் ஒப்பியல் சமயப் பீடங்களை அமைத்தன.

ஜெனிவா - 1873-ல் உருவானது.

ஹாலந்து - 1877

பிரான்ஸ் - சோர்போனி (Sorbonne) 1886.

ஸ்வீடன்- (தன் சமயத்திற்கு ஆதரவாக வாதம் செய்யும் பீடம் (Old chair of apologetics) என்பது ஒப்பியல் சமயத்திற்குத் திசை திரும்பியது.) 1901.

இங்கிலாந்து - மான்செஸ்டர் பீடம் 1904.

ஜெர்மனி - சமய வரலாற்றுப்பள்ளி (History of Religion School) என்று இருந்தது. அங்கெல்லாம் விரிந்த அளவில் ஒப்பியல் சமய ஆய்வுகள் நிகழ்வதில் ஆர்வம் காணப்படவில்லை. புதிய ஏற்பாடு, பழைய ஏற்பாடு என்பவற்றையே புரட்டிக் கொண்டு இருந்தனர். அதற்கப்பால் பரந்த எண்ணத்துடன் சென்று ஆய்வில் கவனம் செலுத்தவில்லை.

ஸ்காட்லாந்து - இயற்கை இறையியல் (Natural Theology) பற்றிய கிஃப்போர்டு உதவித்தொகை (Gifford Lecturship) 1887-ல் இருந்தது. அதன் பின்னர் ஸ்காட்ஸ்மான் (Scotsman), ஜேம்ஸ் ஹேஸ்டிங்ஸ் (James Hasting) என்பவர் 1908-1926ல் அறம்

மற்றும் சமயக் கலைக்களஞ்சியம் (Encyclopedea of Religion and Ethics) உருவாக்கினர். இருப்பினும் ஒப்பியல் சமயப் பீடம் (Chair) உருவாகவில்லை.

அமெரிக்க ஐக்கிய நாடு - ஜேம்ஸ் பிரிமேன் கிளார்க்கி (James Freeman Clarke) என்பவர் 1867ல் ஹார்வர்டு டிவினிட்டி பள்ளிக்குப் பேராசிரியராகப் பொறுப்பேற்றார். இயற்கை சமயமும், கிறித்தவமறையும் (Natural Religion and Christian Doctrine) எனும் துறையினைச் செம்மை செய்தார். அதேபோன்று 1973-ல் பாஸ்டன் பல்கலைக் கழகத்தில் ஏற்படுத்தப்பட்டது. பின்னர் 1891-ல் இயற்கைச் சமயத்துறைக்கு ஜார்ஜ் ஃபூட்மூர் (George Foot Moore) என்பவர் பேராசிரியராகப் பொறுப்பேற்றார். பின்னர் சிகாகோ பல்கலைக் கழகத்தில் 1892-ல் தனித்துறை நிறுவப்பட்டது. பல வகையான சமய இதழ்களும், கலைக்களஞ்சியங்களும் ஒப்பியல் சமயம் என்பதில் ஆர்வம் கொள்ளத் தொடங்கின.

இறையியலை அடிப்படையாகக் கொண்ட கலைக் களஞ்சியங்கள் (1909 - 1913)ல் தொடராக வெளிவரத் தொடங்கின.

அகில உலக சமய அறிவியல் கூட்டம் (International Congress of the Science of Religion) 1897ல் ஸ்டாக்ஹோமில் (Stockholm) துவங்கியது. வரலாறு, உளவியல், சமூகவியல், சமய நிகழ்வியல் (Phenomenology of Religion) என்றெல்லாம் தனித்தன்மைகள் உருவாகின. வரலாற்று உத்திகளைப் பயன்படுத்தத் தொடங்கினர். முன்னர், பரிணாமம் (Evalution) பற்றிய கருத்து இருந்தது. பின்னர் மதிப்பியல் தீர்வும் (Value judgement) இடம் பெறத்தொடங்கிற்று.

உளவியல் (Psychology), சமூகவியல் (Socialogy), பொருளியல் சூழலியல் (Ecology) என்பவற்றின் அடிப்படையில் விவாதித்தனர். அப்போதெல்லாம் ஆராய்ச்சி முறையில் (Methodological) நிச்சயமற்ற தன்மையும் சிதறல்களும் பல்கிஇருந்தன. ஒப்பியல் சமயம் என்பது வேறுபெயரிலும் வேறு பொருளிலும் வழங்குவ தாயிற்று. சமயங்களின் வரலாறு, உலகச் சமயங்கள், சமய ஆய்வுகள், சமயத்தில் ஆய்வுகள் என்பனவற்றைச் சான்றாகக் கூறலாம்.

ஒப்பியல் சமயம் என்பது அறிஞர்களிடையே மிகவும் அரிதாகவே வழக்கில் இருந்தது. ஆய்வு முறைகளில் ஏற்பட்ட காரசாரமான விவாதங்களைப் பார்க்கும் போது 1960-க்கு மேல் பழைய பரிணாமக் கோட்பாட்டிற்கு அப்பால் எந்தவித வளர்ச்சியும் ஏற்படவில்லை என்று தெரிகிறது.

## 20-ம் நூற்றாண்டும் இப்போதைய நிலையும் :

20-ஆம் நூற்றாண்டில் ஒப்பிலக்கியச் சிந்தனைக் கருத்துக்கள் உலகெங்கிலும் பரவின. அதே கண்ணோட்டத்துடனே ஒப்பியல் சமய ஆய்வுகளும் வளரத் தொடங்கின. முன்னர் சமயங்களிடையே இருந்த இறுக்கமானது சற்றே நெகிழ்ந்துள்ளது. சமய உரையாடல் அமைப்புகள் (Inter Religious Dialogues) உலகெங்கும் மக்கள் மனத்தில் சமய நல்லிணக்கத்தை வளர்க்க முனைப்புடன் செயல்பட்டு வருகின்றன. விவேகானந்தரின் சிகாகோ சொற்பொழிவை நினைவுறுத்தும் வகையில் நூற்றாண்டு விழா கொண்டாடப்பட்டது. அவ்விழா உலகில் உள்ள மதங்களையெல்லாம் இணைத்து ஒரே கருத்தரங்கில் காணும் வாய்ப்பைத் தந்தது. ஒப்பியல் சமய எண்ணத்தை அவ்விழா மீட்டுருவாக்கம் செய்வதில் முக்கிய பங்காற்றியது.

உலக நாடுகளின் பல்கலைக் கழகங்களைப் போன்று இந்தியப்பல்கலைக் கழகங்களும் சமயப்பீடங்களை அமைத்துள்ளன. ஆனால் அவை தனிச்சமயப்பீடங்களாக உள்ளன. திருப்பதியில் உள்ள வெங்கடேஸ்வரா பல்கலைக்கழகம் வைணவத்தையும், மைசூர் பல்கலைக்கழகம் சமணத்தையும் (Department of Jainology) மதுரை காமராசர் பல்கலைக்கழகம் சைவ இஸ்லாமியம், சீக்கியம் கிறித்தவம் சித்தாந்தம், (Guru Nanak Chair) .ஆகியவற்றுக்கென தனித்த பீடங்களை உருவாக்கி உள்ளன. அவை அவ்வச்சமயக் கருத்துக்களை எடுத்துரைப்பதில் செவ்வனே பணியாற்றுகின்றன.

இவ்வாறு வளர்ச்சிநிலையில் சமய ஆய்வுப்பீடங்கள் உருவாகின்ற நேரத்தில் ஏற்கனவே இருந்தவைகள் மூடப் படுகின்றன என்ற செய்தியும் கிடைக்கின்றது. ஆய்வாளரால் இவ்வாய்வு மேற்கொள்ளும்போது (1989-ல்) ஒப்பியல் சமயத்துறை (Department of Comparative Religion) ஜெர்மன் நாட்டில் ஹீடல்பர்க் பல்கலைக்கழகத்தில் செயல்பட்டு வந்தது. அத்துறையில் இருந்து ஆய்வுக்காக நூல்களின் பிரதிகளைப் பெற்றார். ஆனால் (1994-ல்) அத்துறை மூடப்பட்டுவிட்டது என்ற செய்தி அங்கு பணியாற்றும் பேராசிரியர். டாக்டர். கு.தாமோதரனாரின் (Department of Asian Studies) கடிதம் மூலம் கிடைக்கப் பெற்றது.

அதே நேரத்தில் மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் தனித்தனியாக இயங்கிவந்த சமயப்பீடங்கள் அனைத்தும் ஒருங்கிணைந்து செயல்பட்டுவருகின்றன. அத்துறை 95 -

கல்வியாண்டு முதல் முதுகலைப் பாடத்தினை (M.A., M.Phil) ஒப்பியல் சமயத்தில்லைகளில் துவங்கி இருக்கிறது. மாணவர்களும் அதிக ஆர்வத்துடன் பயின்று வருகின்றனர். தமது ஒருங்கிணைந்த சமயத் துறையின் சார்பாக கருத்தரங்கங்களை மிகச் சிறப்பாக நடத்தியும் வருகின்றது.

உலகின் ஓரிடத்தில் ஒப்பியல் சமய ஆய்வு தளர்ச்சியடைந்த நிலையை எய்தினாலும் மற்றோர் இடத்தில் அது வளர்ச்சியெனும் நோக்கிலேயே காணப்படுகிறது. அதன் ஆய்வியல் முன்னேற்றங்களைக் கருத்தில் கொண்டு 20-ம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்த லூயி. H. ஜோர்டன் என்பவர் பின்வருமாறு கருத்துரைத்தார்.

"எண்ணற்ற உலக மதங்களை அருகருகே வைத்து, ஒப்பிட்டு, உறழ்ந்து பார்த்து நம்பத் தகுந்த மதிப்பீடுகளை உருவாக்குவதே ஒப்பியல் சமய ஆய்வு" என்ற எலியாத்தின் கருத்துமிக்க வரவேற்பைப் பெற்றது. அவ்வாறு செய்யப்பெறும் ஆய்வுகளால் தான் உருவத்தை வரையறுக்க முடியும் என்பது அவரது நம்பிக்கை. லூயியின் கருத்துப்படி நோக்குமிடத்து,

1. உலக மதங்களை அருகருகே வைத்தல்.
2. ஒப்பிட்டும் உறழ்ந்தும் பார்த்தல்.
3. நம்பத்தகுந்த மதிப்பீடுகளை உருவாக்குதல்
4. உருவத்தை வரையறுத்தல்.

என்ற ஆய்வுநிலைகள் புலனாகின்றன.

அந்நிலைகளை அடியொற்றியே இந்நூல்களன்களை அமைத்துக் கொண்டுள்ளது. "திருவருட்பா" எனும் பக்தி இலக்கியத்தில் கூறப்பட்டுள்ள கருத்துக்களை, உலகின் பிற சமயங்களான கிறித்தவம், சூபித்துவம், சமணம் என்பவற்றின் அருகில் வைத்து, ஒப்பிட்டும் உறழ்ந்தும் பார்த்து, அவற்றுக்கு இடையே உள்ள ஒப்புமைக்கூறுகளையும், கருத்துமுரண்களையும் மதிப்பீடு செய்து வழங்கியுள்ளது.

டாக்டர். பகவான்தாஸ் என்பவர் 1960-ல் அனைத்துச் சமயங்களின் ஒருமைப்பாட்டுக்கான அவசியம் (Essential Unity of All Relegions) என்ற நூலினை எழுதினார். அந்நூல் எழுதத் தூண்டு கோலாக அமைந்த காரணத்தையும் விளக்குகிறார். 1930 டிசம்பர் மாதம் நடைபெற்ற கருத்தரங்கமே இந்த நூலை எழுதத்தூண்டியதாக குறிப்பிடுகிறார். அப்போது அவர் வாசித்தளித்த கட்டுரைத் தலைப்பு "ஆசியச்சிந்தனைகளின்

ஒருமைப்பாடு" (The unity of Asiatic thoughts) என்பது, அந்தக் கட்டுரையின் விரிவான வடிவமே இந்நூல் என்கிறார். ஆசியச் சிந்தனைகளின் ஒருமைப்பாடு காண விழைந்ததன் வளர்ச்சி உலகச் சமயங்களின் ஒருமைப்பாடு காண வழிவகுத்தது. அந்நூலின் முன்னுரைப் பகுதியில் செய்திகளின் இறுதியில் அவர் கூறுவது,

**ஓம்! ஆமீன்! ஆமென்!**

**(AUM) (AMIN) (AMEN)**

என்பதாகும். அதுவே சமயங்களை ஒப்புநோக்கும் பான்மை.

**ஒப்பியல் சமய ஆய்வின் இன்றியமையாமை :**

உலகம் முழுவதிலும் உள்ள மக்களுக்குத் தன்னைப்பற்றி அறியும் எண்ணமும் ஆவலும் உள்ளது. அவ்வாறு எழுந்த எண்ணத்தின் விளைவாக ஊஅர்னால்டு டாயின்பி என்பவர், மனிதனின் வரலாறு (World History of Man) என்னும் நூலினைப் பத்துத் தொகுதிகளாக எழுதியுள்ளார். அவரது கருத்துப்படி வரலாற்றின் நடுமையாக அமைவது சமயம். உலகத்தின் உருவாக்கம், விரிவு எதனால் என்பது மர்மமாகவே உள்ளது. இதனை விளக்கத்திறவு கோலாக அமைவது சமயம் 19 என்றும் அவர் கூறுகிறார். எனவே சமயத்தைப்பற்றிய ஆய்வு தன்னைப் பற்றிய ஆய்வாக அமையுமாயின், சமயங்களைப் பற்றிய ஒப்பாய்வு மனித சமூகம் குறித்த ஒப்பாய்வாகவே மாறும்.

ஒப்பியல் சமய ஆய்வின் மூலம் மனித மனவேறுபாடுகள், சமயப் பூசல்கள், சமூகங்களுக்கிடையேயான உணர்வு இறுக்கங்கள் போன்றவைகளுக்கு எதிராக வலுப்படும் எண்ணங்களை ஒன்று திரட்டி ஆக்கப்பூர்வமாக முறையில் ஒரு சமரச வடிவம் உருவாக்கப்படுகிறது.

"இந்தியர்கள் பெருமைப்படும் வகையில் உலகிலேயே முதன்முதலில் சமயங்களை ஒப்புமை நோக்கில் ஆராய்ந்தவர் 16ம் நூற்றாண்டில் வாழ்ந்த அக்பர். 1579-ல் எழுதப்பட்ட தமது ஊதீன இலாஹி" எனும் நூலில் இந்துசமயம், ஜொராஸ்ட்ரியனிஸம், ஸிடோயிஸம், கிறித்தவம், இஸ்லாம் எனும் ஐந்து சமயங்களைப் பற்றி ஒப்பாய்வு செய்து விளக்கினார். அது ஒரு புதிய சமரச சமயத்தையே தோற்றுவித்தது. அதன்பெயர் "தீன் இலாஹி" என்கிறார் எலியாத்.

அவ்வாறு தோற்றுவிக்கப்பட்ட சமய நல்லிணக்கம் மீண்டும் கிளர்ந்து எழுதற்கு ஒப்பியல் சமய ஆய்வுகள் இன்றியமையாதன.

2 நடுநிலையுடன் ஏற்படக்கூடிய பொதுநோக்கு வளரும்

3 பிறமதங்களின் மீது நம்பிக்கை தோன்றும், நல்லெண்ணம் ஏற்படும்

4 பிறமதங்களில் உள்ள பெரியார்களை காண்கின்ற போது குறுகிய சிற்றுணர்ச்சிகளைக் கடந்த ஒரு நோக்கில் காணுதல் நிகழும்.

5. நாடுகளிடையே சமயத்தின் பெயரால் நிகழும் போர்கள் மறையும்.

6 மனிதநேயப்போக்கு மானுடசமுதாயம் முழுவதையும் சென்றடையும்.

7 தான் தன்சமயம் என்ற எல்லை அழிந்து அனைவரும் அனைவருடைய சமயங்களும் என்ற எண்ணம் விரியும்

8 ஆய்வு வரலாற்றில் புதுவகையான ஆக்கப்பூர்வமான விளைவுகள் கிடைக்கும்.

9. மதங்களுக்கிடையே ஏற்பட்ட உண்மையான தாக்கம், பாதிப்பு என்பவை மனித வரலாற்றில் ஏற்படுத்திய மாற்றங்களை அறிய முடியும்

10 சமயவளர்ச்சியின் சீரமைப்பைப் பற்றிய புதிய கருதுகோள்களை வழங்க ஒப்பியல் சமய ஆய்வு பயன்தரும்.

## 2. இறை - உயிர் உறவுநிலை

இறை உயிர் உறவு என்பது ஆன்மீகத்துடன் நெருங்கிய தொடர்பு கொண்ட உயர் இலட்சிய மெய்ந்நிலை ஆகும். ஆன்மீக வாழ்வின் தொடக்கமே அவ்வுறவு வலுப்பெற்றவுடன்தான் ஏற்படுகிறது. "விலங்குகள் தம் இயல்பான நாட்டங்களைத் திருப்தி செய்வதிலும் உடலின்பங்களை அடைவதிலும் நிறைவு காண்கின்றன. ஆனால் மனிதன் இந்த வகையான இன்பங்களுடன் நிறைவு பெறாமல் மேலும் மேலும் ஏதோ ஒரு தேவை கருதித் தவிப்பே அடைகிறான். இத்தவிப்பை நிறைவு செய்ய முறையாக அமைக்கப்படும் நெறியே சமயம் எனப்படும். இத்தவிப்பை நிறைவு செய்வது எதுவோ அதுவே கடவுள் என்றும் குறிப்பிடப் படுகின்றது. (விஞ்ஞான சமயம் - ப-14) அவ்வாறு கடவுளுக்கும் மனிதனுக்கும் ஏற்பட்டுள்ள ஆன்ம உறவு திருஅருட்பாவில் எடுத்தாளப்பட்டுள்ள பான்மையினை அறிவதே நோக்கமாகும்.

அவ்வுறவு பிற சமயங்களில் அரும்பி வளர்ந்த போக்கினையும், ஆளுமை பெற்ற நிலையினையும் பொருத்திக் காட்டவும் வாய்ப்பு உள்ளது. திருஅருட்பாவில் அவ்வுறவு நிலைப் பரிமாணம் பற்றி ஆய்வதும் பிற சமயங்களுடன் ஒப்பிடுவதும் அவசியமாகிறது. கிறித்தவ, இஸ்லாமிய சமயங்கள் இறை உயிர் உறவை வற்புறுத்துகின்றன.

### உறவுச் சிந்தனை :

இறைவனை ஏற்றுக் கொண்ட உலகச் சமயங்கள் இறை - உயிர் உறவுகளைப் பற்றிப் பலவாறு சிந்திக்கின்றன. இறை - உயிர் - உலகம் என்ற மூன்றின் சுழற்சி நிலை பல சமயங்களின் அடிப்படைப் பிரச்சினை ஆகிறது.

கிறித்தவ, இஸ்லாமிய சமயங்கள் இறை உயிர் உறவை வற்புறுத்துகின்றன. பௌத்த சைனர்கள் இறை கோட்பாட்டிற்குள் வரவில்லை அதனால் உலகம், உயிர் என்னும் உறவினை மட்டுமே பேசினர்.

வேதாந்திகள் இறை, உயிர் எனத் தனியாகக் கருதவில்லை. அனைத்தும் இறையின் தோற்றம் என்றனர். உயிரும் அவ்வாறே என்பர். ஆயினும் ஒருமித்த கருத்து இல்லை. தோற்றம் பற்றி விளக்கும் போது மூவகைக் கோட்பாட்டில் விளக்குகின்றனர்.

**அவச்சேதவாதம் :**

எல்லையற்ற பரம்பொருள் ஒரு வரையறைக்கு உட்படும்போது உயிர் உலகம் ஆகியவை தோன்றும், விரிந்து பரந்த ஆகாசம் குடத்துள் அடங்கும்போது "குடத்து ஆகாசம்" என்று அமைவது போலக் கட்டுப்பட்டு நிற்கும் பிரம்மம்.

**பிரதிபிம்ப வாதம் :**

இறைவன் அவித்தையில் (அறியாமை) பிரதிபலிக்கும் போது ஈஸ்வரானவும், அந்தகரணங்களில் பிரதிபலிக்கும் போது ஜீவனாகவும் தோன்றுகிறான் என்பது பிரதிபலிப்புவாதம்.

**ஆபாசவாதம் :**

ஆபாச வாதம் என்பது பிரதிபலிப்புக் கோட்பாட்டிலிருந்து பெரிதும் வேறுபடுவதில்லை. பிரதிபலிப்பு ஒருப்போல் அமையாமல் விகாரம் (ஆபாசம்) பெற்று விளங்கும் (Vasaspatis Contribution of Advida, P-48) என்பர்.

இறைவன் நிர்க்குணத்தான். அவித்தை காரணமாக ஈஸ்வரன் உயிர் எனக் தோற்றமளிப்பான். ஈஸ்வரனுக்குப் பிறவிச் சுழற்சி, சம்சார பந்தம் இல்லை. ஆனால் உயிர்களுக்கு உண்டு. அந்த அடிப்படையில் அத்வைதம் இறைநிலையையே வற்புறுத்தும். சைவ சித்தாந்தம் இறை உயிர் உலகு மூன்றையும் உள்பொருளாக எண்ணும். எனவே, பதி பசு பாசம் என்ற முப்பொருள் உண்மையைப் பேசுகிறது. அங்கு எண் குணத்தானாக இறைவன் காட்டப்படுகிறான்.

இராமலிங்கரும் தொடக்க காலத்தில் சைவ நெறியில் பயின்று வளர்ந்ததால் அவரிடமும் இறை, உயிர், உலகு என்ற அடிப்படைச் சிந்தனை உண்டு.

இறை உயிர் உறவு பற்றிய வலுவான சிந்தனை பிற நாடுகளிலும் தோன்றியிருந்தது.

**உறவின் அடித்தளங்கள் :**

சமயக் கோட்பாடுகளை விட அச்சமயஞ் சார்ந்த நடத்தைகளே இறைமனித உறவினைப் பெரிதும் அமைக்கின்றன. அவை எல்லாரிடமும் ஒரே விதமாக ஒரு ஒழுங்குமுறையின் கீழ் இருக்காது. மனிதனுக்கு மனிதன் மாறுபடக்கூடியது. அதற்கான அடித்தளங்களை நான்காகப் பாகுபடுத்தலாம்.

தனிமனித நடத்தை :

யாரையும் சாராமல் தன் விருப்பம் போல் இறைவனிடம் ஈடுபட்டு நிற்றல்.

சமுதாய நடத்தை :

ஊர்மக்கள் விரும்பும் திருவிழா, சடங்கு ஆகியவற்றைப் புறக்கணிக்காமல் பங்கேற்று சமுதாய உறவோடு இறைவனை வழிபடல். இதில் உறவு தனிப்பட்டு நில்லாது ஒரு கூட்டுறவாகச் செயல்படும்.

சமயக் கொள்கை வழி :

சமய நூல்கள், சட்ட திட்டங்களையே தினமும் வழுவாமல் பேணி வாழ்தல். கிறித்தவர் பரிசுத்த வேதாகமத்தைப் பின்பற்றுவர். இஸ்லாமியர் புனித குர்ரானை ஆராதிக்கின்றனர். சைவ சமயத்தினர் தேவாரம் திருவாசகம் போன்ற சைவத் திருமுறைகளைப் போற்றி நடப்பர். வைணவர்கள் ஆழ்வார்களின் வாழ்வையும், நாலாயிர திவ்யப் பிரபந்தத்தையும் அடியொற்றி வாழ்வர். சீக்கிய சமயத்தவர் குருகிரந்தத்தைப் புனிதமாகக் கொண்டு வழி நடத்துகின்றனர். அவ்வாறு சமயநூற் கருத்துகளை வழிகாட்டியாகக் கொள்வதே சமயக் கொள்கை வழி நடத்தலாம்.

நடைமுறைக் கொள்கை வழி :

இறைவன் ஒருவனை ஏற்றுச் சமய வேறுபாடு இன்றி வாழ்தல், சமயக் காழ்ப்புணர்வற்ற ஒரு கூட்டத்தாரால் நடைமுறைப் படுத்தப்படும் வழியாகும். சமய வேறுபாடின்றி கோயிலுக்கும், சர்ச்சுக்கும், மசூதிக்கும் சென்று வரக் கூடியவர்களும் உண்டு. அவர்கள் அவ்விடங்களிலெல்லாம் ஒரே கடவுளைக் காண்கின்ற பக்குவத்தை ஏய்துகின்றனர். அத்தகு மனப்பக்குவம் சிறுபான்மையாகவே நடைமுறையில் உள்ளது. அவ்வெண்ணம் பல்கி வளர வேண்டும்.

சமயக் கொள்கைகள் மதிப்பிழக்கும்போதும், அவற்றின் காரணம் புரியாமல் போகின்றபோதும் தனிமனித சமுதாய நடத்தைகள் மாறுபடும். அந்நேரம் சமயக் கொள்கைகள் மதிப்பிழந்து போலியாக மாறுவதால் நடைமுறைக் கொள்கை ஆளுமை பெறத் தொடங்கிவிடும். அத்தகைய மதிப்பிழத்தல் சூழலில்தான் சமயக் கொள்கைகளைப் புறத்தே தள்ளிவிட்டு சன்மார்க்கக் கொள்கை இராமலிங்க அடிகளாரால் நடைமுறைக்குக் கொண்டு வரப்பட்டது. தனிமனிதம், சமுதாயம், சமயக்

கொள்கைகள், நடைமுறைக் கொள்கைகள் இவை உறவின் அடித்தளங்களாகின்றன. சமயக் கொள்கைகள் மதிப்பிழக்கும் போது சமய நடைமுறைக்கொள்கைகள் தோன்றுகின்றன.

**உறவுநிலைக் கோட்பாடுகள் :**

சமயத் தோற்றம் பற்றி ஆராய்வோர் உறவுநிலைக் கோட்பாடுகளை மூன்று நிலைகளில் விளக்குகின்றனர்.

"1. தேவைநிலைக்கோட்பாடு

2. தந்தை நிலைக் கோட்பாடு

3. தனித்தலைமைக் கோட்பாடு" (The Social Psychology of Religion. P-180)

என்று மூவித நிலைகளில் உயிரின் உறவான இறையுடன் தொடர்புபடுத்திக் கோட்பாடாக உருவாக்கப்பட்டுள்ளது.

**தேவைநிலைக் கோட்பாடு :**

மிகுதியும் உளவியலைச் சார்ந்தது. சமயக் கண்ணோட்டங் களும், நம்பிக்கைகளும் அறிவாற்றலுடன் கூடிய தேவையைப் பூர்த்தி செய்யும் என எண்ணினர். இதில் பெரும்பாலும் தேவை நிவர்த்தி அடங்கும். இதுவேண்டும் அது வேண்டும் என்று மன்றாடி நின்று வணங்கும முறை இங்கு காணப்படும். அது ஒரு இயற்கையான ஆசையும் நோக்கமும் ஆகும்.

தேவை நேர்கின்ற போது மட்டும் கொள்கின்ற உறவாகவும் சிலவிடங்களில் காணப்படுகிறது. தேவையெனில் வழிபடுவது அல்லாதவிடத்து விலகுவது உறவின் அடிப்படையில் எழுந்த எண்ணமாக இருக்கமுடியாது

உயிர் வாழ்வதற்குத் தேவையென உணவு, உடை, இருப்பிடம் என்பன குறிக்கப்படுகின்றன. எனினும், ஆன்மீக வாழ்வு அத்தேவைகளை மறுத்து, மற்றொரு தேவையையே அடிப்படைத் தேவையெனக் கணிக்கிறது. அத்தேவையை இறைச்சிந்தனை வழி இறையிடம் கொள்ளும் உறவு.

**தந்தைநிலைக் கோட்பாடு :**

தந்தை என்று உறவு கொள்ளும் நிலையானது தேவையை அடுத்து நிகழக் கூடியது. ஒருவரிடம் உறவு கொள்ள வேண்டும் என்ற தேவையும், உறுதியும் முதலில் ஏற்பட வேண்டும். அதன்பின்னரே எந்தவகை உறவு என்ற நிர்மானத்திற்கு வரமுடியும்

அவ்வகையில் ஆன்மீக வாழ்வின் பொருட்டு இறையுடன் உறவு கொள்ளவேண்டும் என்று உயிர் எண்ணத் தலைப்பட்ட பின்னர் எவ்வகை உறவு எனத் தீர்மானிப்பதில் உறுதிகொள்கிறது.

தாச மார்க்கம் எனப்படும் அடிமை நிலை, சற்புத்திர மார்க்கம் எனும் மகன் நிலை, சக மார்க்கம் எனும் தோழமை நிலை, சன்மார்க்கம் எனும் கலப்பு நிலை என்று உறவுநிலைகள் கூறப்பட்டுள்ளன. இதில் மற்றைய நிலைகளை விட மகனாக உயிர் உள்ள நிலையே அதிகமாக வழக்கில் உள்ளது.

தன்னை மகவாக ஏற்றுத் தகுதியளித்து மெய்ந்நெறிக்குவழி காட்டுமாறு வேண்டி அமைவதே தந்தைநிலைக் கோட்பாடு. தந்தையின் செயற்பாடுகள் மகனுக்கும் எய்தப் பெறுவதாக எண்ணுவது பண்பாட்டு நோக்குடையது.

## தனித்தலைமைக் கோட்பாடு :

தன்னை மையமிட்டது. தான் என்ற எண்ணம் மீதூறப்பெற்றது. அது அகம்பாவத்தினால் அன்று. தனக்கு அருள் புரியவேண்டும் என்ற ஆசை முந்துவதினால் ஏற்படுவது. இதில் மனசாட்சியே முதன்மை பெற்று நிற்கும். தாம் செல்லும் பாதை சரியானதா, தாம் செய்யும் செயல்களனைத்தும் நேர்மையானவையா, எண்ணுகின்ற எண்ணங்கள் மெய்ம்மைக்குப் புறம்பானவையா என்றெல்லாம் சிந்தனைகள் மேம்பட வழி ஏற்படும்.

அப்போது ஆசைக்கும் ஒழுக்கத்திற்கும் இடையே ஏற்படும் மோதலில் தன்னை உயர்நெறி நிறுத்துமாறு வேண்டுதல் அமையும். ஆசை, ஒழுக்கம் என்ற இரண்டுமே ஒன்றையொன்று நேரடியாகத் தாக்குரவு செய்வன. ஆசையினால் ஒழுக்கமிழந்தவனும், ஒழுக்கத்திற்காக ஆசையைத் துறந்தவனும் சமூகத்தில் ஏராளம். ஆயின், இருநிலையுமே தன்னை முன்னிறுத்துதலே ஆகும். எனவே, இறைவனால்தான் எல்லாம் ஆகும் என்ற எண்ணத்தைப் புறத்தே தள்ளி, தன்னைத் தலைமைப்படுத்தி அமைகின்ற கோட்பாடு தனித்தலைமைக் கோட்பாடாகிறது.

## உறவின் வகைப்பாடுகள் :

இறைவன் எல்லா உறவுக்கும் நிலைக்களன். மனித உறவுகளில் எவ்வுறவையும் இறைவனோடு மேற்கொள்ள முடியும். அவ்வாறு மனிதன் இறைவனோடு கொள்ளும் உறவுகள் ஒன்பான் உறவுகளாக உள்ளன. அவை,

1. தந்தை மகன் உறவு,

2. காப்பவன் காக்கப்படுபொருள் உறவு
3. ஆண்டான் அடிமை உறவு
4. தலைவன் தலைவி அகக் கற்பித உறவு
5. அறிபவன் அறியப்படுபொருள் உறவு
6. சொத்துக்குடையவன் சொத்து எனும் உறவு
7. தாங்குபவன் தாங்கப்படுபொருள் உறவு
8. ஆன்மா உடம்பு எனும் உறவு
9. நுகர்பவன் நுகரப்படுபொருள் உறவு"

(ஆழ்வார் பாடல்களில் அகம். ப. 294)

என்ற வகைப்பாடுகள் இறை உயிர் உறவு குறித்து முன்னரே எழுந்த சிந்தனையின் வெளிப்பாடுகள்.

## திருஅருட்பாவில் உறவு நிலைகள் :

திருஅருட்பாவில் இறை உயிர் உறவு நிலைகள் பலவாறாகச் சுட்டப்பட்டுள்ளன. பதி, குரு, தாய், தந்தை, துணை, நட்பு, அம்மான், நாயகன், தலைவன் ஆருயிர்த் துணைவன் எனப் பல உறவு நிலைகள் இடம்பெறுகின்றன.

அவற்றுள் மேலாண்மை பெற்ற உறவுகளாக, குடும்ப அமைப்பில் அமையும் உறவுகளான தாய், தந்தை உறவுநிலைப் பாடல்கள் மட்டும் முதலில் ஆய்வு செய்யப்பெறுகின்றன. அவை,

1. தாய், தாய்மைப் பண்புகள் மட்டும் குறிப்பன,
2. தந்தை, தந்தையின் செயல்களை. மட்டும் சுட்டுவன.
3. தாய் தந்தை இருவரையும் இணைத்துக் கூறும் பெற்றோர் தன்மையில் அமைவன

எனும் மூவகைப் பகுப்பினுள் இடம்பெறும். அவை விளக்கமாக ஆராயப்படும். உறவுகளின் தேவைகுறித்து எடுத்தியம்புவனவாக விளங்குகின்றன.

## தாய்நிலை :

அன்பின் தோற்றுவாய் தாய். அருளின் தோற்றுவாய் இறை. அன்பின் வளர்ந்த நிலையே அருள். வள்ளுவரும், 'அருள் என்னும் அன்பீன் குழவி' எனக் குறிப்பிட்டு இருப்பது ஈண்டு ஒப்புநோக்கக் கூடியது. அருளின் வடிவத்தை இனம் காண்பதற்கு அன்பு அடையாளப் பொருளாகிறது. அவ்வகையில் அன்பின் உருவான தாயினை அடையாளப் பொருளாக்கி இறையென்னும்

'அன்னையில் பெரிதும் இனியஎன் அரசே'

'நாடுந் தாயினும் நல்லவம்' (ஆர்ப்பித்து இரங்கல்)

'தாயினும் பெருந்தயவுடையன் நந்தலைவன்'

'தாயிற் பெரிய கருணையினாற்'

'தாயில் இனியார் தற்பரனார்' (தரிசனப்பதிகம்)

'அன்னையினும் தயவுடையாய்' (திருப்புகற்பதிகம்)

'அன்னையினும் அன்புடையாய்' (அருட்பிரகாச மாலை)

'என்னை உற்றுப்பெற்ற நற்றாயினும் இனியானே' (திருவருண் முறையீடு)

எனவரும் இடங்களில் வேறுபடுத்திக் காட்டவிழைந்த பான்மையை அறியலாம்.

அற்பனாகிய தன்னை ஆட்கொண்டது இறையருள் என்றால் அது பெற்றெடுத்த அன்னையின் அன்பைக் காட்டிலும் உயர்ந்ததே. இறைவன் கருணை, இனிமை, தயவு, என்பனவற்றில் அன்னையைக் காட்டிலும் அதிகம் உயர்ந்தவன். அன்னையானவள் ஆவி சோரத் தன்னை ஈன்ற பொழுதைத் தனயன் மறக்கலாமா? எனில் மறந்தவனிடம் மனிதப்பண்புகள் இல்லையென்றுதான் சமூகம் உரைக்கும். அவள் ஈன்றெடுக்கப்பட்டக் கஷ்டங்களையும் நன்றியுடன் எண்ணிப்பார்க்கும் இராமலிங்கர், அதன் பின்னரே இறைவனைக் குறிக்கிறார். எனை உற்றுப்பெற்ற நற்றாய் என்று நாட்டமுடன் எடுத்துரைக்கிறார். எனினும் அவளைக்காட்டிலும் இனியனாக இறைவன் விளங்குகிறான் என வேறுபடுத்தியுங் காட்டுகிறார்.

## உறவின் செயற்பாடு உரைத்தல் :

தாயினைக் காட்டிலும் இனியளாக இறைவன் விளங்குகிறான் என்பதனை அவனது செயற்பாடுகளின் மூலமே அறிய முடியும். ஈன்ற தாய்போல இறைவன் செயல்பட்டதற்கும் திருஅருட்பா சான்றுரைக்கிறது.

## பசியறிந்து சோறூட்டல் :

பிள்ளைப் பசியை தாயன்றி யாரறிவர். பிள்ளை அழுகை ஒவ்வொன்றுக்கும் காரணம் இன்னதென அறியும் பேரறிவின் அகராதி வடிவம் தாய். பசித்து அழும் பிள்ளையின் பசியறிந்து சோறூட்டுகிறாள் தாய். அதனையே,

"ஊட்டுந்தாய் போல் உவந்துன்றன் உற்றியூர் வந்துற
நினைவு காட்டும் கருணை செய்ததற்கோர் கைமாறு அறியேன்"
(ஆனந்தப் பதிகம்)

என்றதனால் பசியறிந்துசோறூட்டல்செயல் சுட்டப்பட்டுள்ளது என அறிகிறோம்.

## பிழைபொறுத்தல் :

பிழைபொறுத்தல் என்பதும் தாய்மையின் செயல்களில் ஒன்று. சிலபோது இச்செயலின் தன்மை கூடுகின்ற விடத்து சேய்களின் தவறான போக்கிற்கும் தாயே காரணமாகி விடுகிறாள். செல்லம் கொடுத்துச் சேய்களைத் தவறிழைக்கவும் செய்ய வைக்கிறது தாய்மையின் செயல் என்ற குற்றச்சாட்டும் உண்டு. எனினும் பிழை பொறுப்பவளே தாய். அச்செயலினை,

"சேய் செய்த பிழையெலாம் தாய் பொறுப்பது
போல சிந்தைதனில் எண்ணிடாயோ" (ஆனந்தத் திருநடனப்பதிகம்)

என்ற பாடல் உணர்த்துகிறது. தாயைப் போல நான் செய்த பிழையைப் பொறுத்தருள வேண்டும் என்ற வேண்டுதலும் உட்பொதிந்து உள்ளது. இனி அப்பிழை பொறுத்தல் செயலின் எல்லை, எதுவரை செல்லக்கூடும் என்பதனையும் இனிவரும் பாடல்வரி எடுத்துரைக்கும்.

"ஆயாது நான் செயும் குற்றங்களைக் கண்டறியில்
பெற்ற தாயாயினும் பொறுப்பாள் அல" (கலிவெண்பா)

என்று தாயும் பொறுமையிழக்கின்ற இடமும் உண்டு என்பதையும் சுட்டுகிறார் இராமலிங்கர்.

மேற்குறித்த பாடல்கள் பிழைபொறுத்தல், பொறுமையிழத்தல் எனும் செயல்பாடுகளை எடுத்துக்காட்டுகின்றன.

## விட்டுப்பிரிதல் :

"வளங்கன்று மாவனத்துஈன்ற தன்தாயின்றி வாடுகின்ற
இளங்கன்றுபோல் சிறுவாழ்க்கையில் நின்அருள் இன்றி
அந்தோ உளங்கன்று நான் செய்வதென்னே" (திருவருண் முறையீடு)

என்று புலம்புவதனால் விட்டுப்பிரிதல் என்ற செயல் காட்டப்பட்டுள்ளது.

**முப்பரிமாணம் காட்டல் :**

*ஒரே பாடல் வரியில் தாயின் முப்பரிமாணச் செயல்களையும் இனங்காட்டியுள்ளார் இராமலிங்கர்.*

*"முகத்தில் பிறங்கு கையைச் சேய்முடிக்கொண்டு*

*நற்பாற் கழக் கண்டுந்திகழ் முலையைத்தாய்*

*முடிக்கொள்ளுவதுண்டோ அருளுக" (திருவருண் முறையீடு)*

*என்றவிடத்துப் பாலூட்டல், தாயின் இயல்பு, அன்பின் வெளிப்பாடு என்ற செயல்கள் இனங்காட்டப்பட்டுள்ளன.*

**அன்பு மீதூறல் :**

*"இளங்கன்றழத் தாய்ப்பசுக் காணின் மடிப்பால் வருமே*

*முலைப்பால் வருமே பெற்றபாவைக்குமே" (திருவருண் முறையீடு)*

*என்ற பாடலில் அன்பின் மீதூறிய நிலையில், பிரவாகமாக வெளிப்படும் செயலும் கூறப்பட்டுள்ளன.*

*அவ்வாறாகப் பசியறிந்து சோறூட்டல், பொறுமையிழத்தல், பிழை பெறுத்தல், விட்டுப்பிரிதல், பாலூட்டல், அன்பு மீதூறல் ஆகியன செயல்பாடு உரைத்தல் என்னும் பகுப்புள் அமைகின்றன.*

**உயர்வு கூறல் :**

*உறவினைச் சுட்டிக்காட்டி, ஒப்பிட்டு, வேறுபடுத்தி, செயல்பாடு உரைத்தனோடு அமையாது உயர்வு கூறல் நிலையிலும் தாய்நிலை உறவு அமைகின்றது.*

*'தாயின் தாயின் மேவிய தற்பரமே' (திருமுல்லை வாயில் திருவிண்ணப்பம்)*

*'அன்னையினும் சால அருள்வோய்' (திருப்புகற்பதிகம்)*

*'ஈடில்பெருந்தாயில் இனியாய் நின் தண்ணருள்' (முறையீட்டுக் கண்ணி)*

*'தயவுடைய பெருந்தலைமைத் தனிமுதல் எந்தாயே' (அபராத மன்னிப்பு மாலை)*

*என்றவிடங்களில் அருளிலும் தயவிலும் உயர்வு நிலையில் கூறப்பட்டுள்ளமையை உணரமுடிகிறது.*

**அருளியல் தாய் :**

*மேற்குறிப்பிட்ட தாய்நிலைக் கூறுகள் எல்லாம் அருட்பாவின் முதல் ஐந்து திருமுறைகளிலும் ஆறாந்திருமுறைப் பாடல்கள்*

சிலவற்றிலும் காணப்பட்ட கூறுகளாகும். ஆறாம் திருமுறையில் இடம்பெறுவதாகச் சுட்டப்பெறும் 'அருட்பெருஞ்சோதி அகவலில்' மட்டுந் தனித்த நிலையில் தாய்மைக் கூறுகள் காணப்படுகின்றன. பிறவற்றில் குறிப்பன எல்லாம் உலகியல் தாய்நிலைக் கூறுகளோடு இணைந்தனவாகக் காணப்படுகின்றன. அகவலில் குறிப்பிடப்படும் தாய்நிலைகள் மாறுபட்டு, சிறப்பு நிலையுடன் எடுத்தாளப்பட்டுள்ளன. சான்றாக,

> "சீருறு அருளாம் தேசுற அழியாய் பேருறப் பெற்றநிலை
> அருட்பெரும் போகம் உறபெருந் தயவால் பெற்றநிலை
> ஆன்ற சன்மார்க்கம் அணிபெற ஈன்ற முதளித்த நிலை
> எய்ப்பெலாந தவிர்த்த இன்பநிலை
> துய்ப்பினில் அனைத்தும் சுகம்பெற அளித்தநிலை
> சித்திகள் எல்லாம் தெளிந்திட சத்திஅளித்த நிலை
> விரும்பிய விளைவெலாம் அளித்து இன்புசெய்தநிலை
> இளமை தளித்து இறவாத்திறல் புரிந்து வளர்க்கின்ற நிலை
> கனவினும் நனவினும் பிரியா கலப்புநிலை" (அருட்பெருஞ்சோதி அகவல் - 1071 - 1114)

எனப் பல படிநிலைகள் இராமலிங்க அடிகளால் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளன. தம்மைப் பரிபக்குவப்படுத்துவதற்கு உதவியதாகக் குறிப்புகள் காணப்படுகின்றன. தெரியாத போது தளர்ச்சி போக்கியமை, தூக்கம், சோம்பல், துன்பம், அச்சம், ஏக்கம், இவற்றையெல்லாம் நீக்கிய தனித்தாயே என்றும் குறிப்பிடுகிறார் இராமலிங்கர்.

எனவே, அருட்பாவில் உலகியல் தாய், அருளியல் தாய் என்ற இருநிலைகளில் சுட்டி, ஒப்பிட்டு, வேறுபடுத்தி, செயல்பாடு உரைத்து, உயர்வு கூறல் நிலையிலும் தாய்நிலை உறவு எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

## தந்தை நிலை :

கனிவு என்பது தாய்மையில் கலந்துவிடும். கண்டிப்புடன் கூடிய அன்பே தந்தையிடம் இணைந்து வரும். ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே சான்றோனாக்குதல் தந்தைக்குக் கடனே என்பது காலந்தோறும் தந்தையின் கடமை உணர்த்தும் கூற்று. வாழ்க்கையின் அர்த்தங்களைப் புரியவைப்பது தந்தையே. உழைப்பை உறுதியை உயர்வை உணர்த்துவதும் தந்தைதான். இந்நூற்றாண்டுத் தாயும் அப்பணியை ஏற்று நடக்கிறாள். அத்தகு

சிறப்புடைய தந்தைநிலை உறவு அருட்பாவில் கூறப்பெற்றுள்ள பாங்கினை இனி ஆராயலாம்.

**உறவு சுட்டல் :**

'என் அப்பா' (சிறுவிண்ணப்பம்)

'தந்தையே' (உய்கைத் திருப்பதிகம்)

'எந்தையே' (சந்நிதி முறையீடு)

'என்றன் அப்பா' (பெரு, சிறுவிண்ணப்பம்)

'எனை ஈன்றவனே' (கொடைமடை விண்ணப்பம்)

'என் அப்பனே'

என வரும் குறிப்புகள் தந்தையின் உறவு சுட்டுவனவாக வருகின்றன.

**ஒப்புமைப்படுத்தல் :**

'அப்பனெனத் திகழ்கின்றோனே' என்றவிடத்து ஒப்புமை நிலையில் அமைந்துள்ளதை உணரமுடிகிறது. மற்றோர் இடத்து,

"தூக்கங்கெடுத்தான் சுகங்கொடுத்தான் என்னுளத்தே
ஏக்கந் தவிர்த்தான் இருள்அறுத்தான் - ஆக்கமிகத்
தந்தான் எனைஈன்ற தந்தையே என்றழைக்க
வந்தான் என் அப்பன் மகிழ்ந்து" (ஆளுடைய அரசுகள் அருண்மாலை)

எனக் குறிப்பதனால் எல்லாம்வல்ல இறைவனைத் தந்தையே என்றழைக்கக் காரணங்களைக் காட்டுகிறார் என்பது தெளிவு.

**உரிமையுரைத்தல் :**

தந்தைக்கும் தனக்கும் உள்ள உரிமை நிலையைக் காட்டுவதாகப் பின்வரும் கூற்றுகள் அமைகின்றன.

'நீயே என் தந்தை' 'என்னருமைத் தந்தையே'

'என்உரிமைத் தந்தையே' (விண்ணப்பக் கலிவெண்பா)

"விடயக் காட்டில் ஓடித்திரிந்த வெள்ளை நாயினேன்
விடையாய் நினக்கு மிகவும் சொந்தப் பிள்ளை ஆயினேன்" (மெய்யருள் வியப்பு)

என்னும்போது உரிமையும், உயர்வும், உறுதிப்பாடும் தோற்றம் பெற்றிருக்கின்றன.

### கண்டிப்பு நிலை சுட்டல் :

தந்தை என்பவன் தவறு செய்தபோது கண்டிப்பவன் என்ற உலக நடப்பினையும் சுட்டிக்காட்டியுள்ளார் இராமலிங்கர்.

*"தடித்த ஓர் மகனைத் தந்தை ஈண்டடித்தால் ..............*

*அடித்ததுபோதும் அணைத்திடல் வேண்டும் அம்மையப்பா -*

*இனி ஆற்றேன்" (பிள்ளைச் சிறு விண்ணப்பம்)*

என்றவிடத்துத் தந்தையின் கண்டிப்புத் தன்மையினைச் சுட்டிக்காட்டியுள்ளமை தெளிவு.

### தந்நிலை விளக்கல் :

தந்தையின் கண்டிப்புக்கு ஆளாகும் தனயன் தன்னிலை விளக்கம் தரவேண்டும். தனது செயலுக்கு ஏதேனும் காரணம் கூறிச் சரிக்கட்டவேண்டும். அவ்வகையில்,

*"தந்தை நீ அலையோ தனயன் நான் அலனோ"*

*(பெற்ற பேறினை வியத்தல்)*

என்று உரிமை கூறி அரற்றினாலும் கூட,

*"தந்தையர் வெறுப்ப மக்கள்தாம் பயனில் சழக்குரையாடி*

*வெங்காமச் சிந்தையாகித் திரிகின்றார் உலகில்*

*நானோ ஒருதினமேனும் எந்தைநின் உள்ளம் வெறுப்ப*

*நின்பணிவிட்டு இவ்வுலகியலில் அவ்வாறு தெந்தனென்றே*

*திரிந்ததுண்டோ" (பிள்ளைப் பெருவிண்ணப்பம்)*

எனக் கேட்டுத் தன்நிலை விளக்குகின்ற சாமர்த்தியமும் புலனாகிறது.

### கடவுள் தன்மை பெற விழைதல் :

*"தடுத்தெனை ஆட்கொண்ட தந்தையரே" (உண்மைகூறல்)* என விளித்து,

*"தந்தை தன்மையே தனையன் தன்தன்மை*

*என்று சாற்றுதல் சத்தியம் கண்டீர்" (தனித்திரு அலங்கல்)*

எனக் கடவுட் தன்மை பெற விழையும் ஆதங்கத்தையும் வெளிப்படுத்துகின்றார் இராமலிங்க அடிகள். மற்றோர் இடத்தில்,

*"சிருட்டிமுதல் ஓர் ஐந்து தொழிலும்*

*செய் என்றென்னை செல்வப் பிள்ளையாக்கி" (மெய்யருள் வியப்பு)*

என்று கடவுள் தன்மை பெற்றதோடு, மட்டுமின்றி கடவுளின் செயற்பாடுகளையும் பெற்றதைக் குறிப்பிடுகிறார்.

**மருட்டுதல் :**

"தொடுத்தொன்று சொல்கிலேன் சொப்பனத்தேனும்
தூயநும் திருவருள் நேயம் விட்டறியேன்
விடுத்திடில் விடுப்பன் என்உயிரை..." (உண்மை கூறல்)

என மருட்டுகின்ற இடமும் உண்டு.

**கண்டு கலத்தல் :**

"எந்தையைக் கண்டேன் இடரெல்லாம் நீங்கினேன்
சிந்தை மகிழ்ந்தேன் சித்திகள் பெற்றேன் என்று உந்தீபற" (திருஉந்தியார்)

எனக் கண்டு அன்பில் கலந்து சித்திகள் பெற்ற நிலையினையும் அறியமுடிகிறது.

**ஈன்றபொழுதினும் பெரிதுவத்தல் :**

"நின்சேயே என என்பெயர் எங்கும் சிறந்ததன்றே"
"சிந்தா நலமும் பலமும் பெற்றுத் தேக்குகின்றேன்
அந்தா மரையான் நெடுமாலவன் ஆதிவானோர்
வந்தார் எனை வாழ்த்துகின்றார் இங்கு வாழ்க என்றே" (உலப்பில் இன்பம்)

எனக் குறிப்பது ஈன்றபொழுதில் பெரிதுவக்கும் பேறு பெற்ற தன்மையினைச் சுட்டுவதாகவே கொள்ள முடிகின்றது.

**பண்படுத்துதல் :**

ஆன்மீக வாழ்வுக்கேற்ற மகனாகத் தம்மைப் பண்படுத்திய கருத்துக்களையும் பகர்கிறார் இராமலிங்கர். அடிப்படைத் தேவைகள் நிறைவேற்றப்பட்ட தாய்நிலை கடந்து ஆன்மீகத் தேட்டம் நிறைவேற்றப் பட்டதைத் தந்தைநிலைப் பாடல்கள் உணர்த்துகின்றன. சதுரப் பேரருள் தனிப்பெருந் தலைவனாகிய இறைவனை எதிர் அற்று ஓங்கிய தனது தந்தை எனப் பீடுற அழைத்து, அவன் அருளான்மத் தேட்டத்தை நிவர்த்தி செய்து பண்படுத்திய செயல்களைப் பின்வருமாறு கூறுகிறார்.

1. "துக்க நிவர்த்தி" என்பது அனைத்துச் சமயங்களிலும் இடம் பெறுகின்ற கூறாகும். அதனைத்

"துன்பம் தவிர்த்து இன்பமும் எல்லா நன்மையும் அளித்த

எல்லாமவல்ல சித்தான தனித்தந்தை" (அருட்பெருஞ்சோதி அகவல்)

என்று எடுத்துக்காட்டி நிறுவுகிறார்.

2 குறிக்கோள் அற்றுக் கிடந்த வாழ்க்கையைச் செம்மைப் படுத்திய தன்மையினை,

அ) "உடுத்த ........... அமர்த்தி நகைத்தருளிய என்ஆண்டவனே" (திருநடப்புகழ்ச்சி)

ஆ) "எட்டிரண்டறியா எனைத்தனிஏற்றிப் பட்டிமண்டபத்தில் பதித்த மெய்த்தந்தை

துரியவாழ்வுடனே பெரிய வாழ்வளித்த தனிப்பெருந்தந்தை" (அருட்பெருஞ்ஜோதி அகவல்)

இ) "முனைப்பள்ளி பயிற்றாதென்தனைக் கல்வி பயிற்றி

முழுதுணர்வித்துடல் பழுதெலாம் தவிர்த்தே

எனைப் பள்ளி எழுப்பிய அருட்பெருஞ்சோதி என்னப்பனே" (திருப்பள்ளி எழுச்சி)

என வரும் பாடற்பகுதிகள் விளக்கி நிற்கின்றன.

3 அறிவளித்துப் பிறிவிலாதமர்ந்த பேரருள் தந்தையாகிய இறைவன் தனக்கு அளித்த பேறுகளைப் பட்டியலிட்டுக் காட்டுகிறார் இராமலிங்க அடிகள்.

"தங்கோல் ............. தலைமைத் தந்தையே" (அ. அகவல்)

"அடியன் .......... அடிகள் ஆக்கிக்கொண்டாய்" (மெய்யருள் வியப்பு)

"கடுத்த மலத்தைக் கெடுத்து நலத்தைக் கொடுத்த

கருணைத் தந்தையே (சிவபோகம்)

அருட்பெருஞ்சோதி ........

பதியை அடைந்த பிள்ளை" (தத்துவ வெற்றி - 4834 - 53)

"பேருலகெல்லாம் மதிக்கத் தன்பிள்ளை என்றென்னைப் பெயரிட்டழைத்தே சீருறச் செய்தது பாரீர்" (ஜோதியுள் ஜோதி)

"பிறந்தேற்கென்றும் இறவாது பிறவாதோங்கும் பெருமை தந்து

சிறந்தே சிற்றம்பலவர் நின் செல்வப்பிள்ளை ஆக்கினையே
(செய்பணி வினவல்)

"என் மகனே இங்கிதனைத் தாங்கு என்று ஒன்றெனது
நடங்கை தனிற்கொடுத்து மரணமற்று வாழ்க
எனத் திருவார்த்தை அளித்தாய்" (அருட்பிரகாச மாலை)

மேற்குறித்த பாடல்களின்றும், செங்கோல் செலுத்தெனச் சொல்லியது. இறைவடிவு செயப்பெற்றது, பெருநிலை அடைந்தது, பிறவாநெறி பெற்றது, அடியன், பிள்ளை, நேயன், அடிகள் என உறவில் வளர்ச்சி கண்டது, மலங்கெடுத்து நலம் பெற்றது, அருட்பெருஞ்சோதி ஆண்டவன் பெருமையினால் ஈன்றது, செல்வாக்குப் பெற்றது, ஆண்டவன் தாண்டவங் கண்டமர்ந்தது, சுத்த சிவ சன்மார்க்கம் பெற்றது, அருளமுதுண்டு அருள் நிலைமேல் அமர்ந்தது, பூரணர்க்கு அன்பான பொருளானது, அருட்பெருஞ்சோதிப் பதியை அடைந்து, இறைவனால் பிள்ளை என அழைக்கப்பட்டு சிறப்பெய்தியது, மரணமில்லாப் பெரு வாழ்வடைந்தது எனப் பலவகையான பேறுகளையும் இறைவன் தந்தைநிலையில் தனக்கு அளித்ததாகக் கூறுவதை அறியமுடிகிறது.

அவ்வகையில் உயர்வளித்த இறையே "தாயிற் பெரிதும் தயவுடையத் தந்தை" (அகவல்) என இனங்காட்டுகிறார் இராமலிங்க அடிகள்.

## தந்தைநிலைக் கோட்பாடு :

இறைவனைத் தந்தையாகக் காண்கின்ற போக்குக்குச் சமயத்தின் தொடக்கம் மற்றும் சமூகச் செயல்பாடுகளைக் காரணமாக்கினர். அதுவே தந்தைநிலைக்கோட்பாடு என வழங்கப்பட்டது. அக்கோட்பாடே

1. "பெற்றெடுத்த தந்தையுடன் நாம் வைத்திருக்கும் உறவு எந்த அளவு தீவிரமாக உள்ளதோ அந்த அளவு கடவுட் தந்தையிடம் உண்டு.
2. கடவுள், தந்தையின் மறுவடிவம்" (The Social Psychology of Religion. P-184)

என்ற கருத்துக்களை வழங்கிய கோட்பாடாகும்.

## கிறித்தவம் :

அதன்வழிக் கிறித்தவத்திலும் கடவுளைத் தந்தை நிலையில் வைத்துக் காண்கின்ற போக்கு வலுவாக உள்ளது. அப்பா

பிதாவே என வழிபாட்டின் போது அழைக்கும் போக்கும் காணப்படுகிறது.

"மண்ணுலகில் ஒருவரையும் தந்தை என்று கூறவேண்டாம் ஏனெனில்

விண்ணுலகில் உள்ளவர் ஒருவரே உங்கள் தந்தை"

(பரிசுத்த வேதாகமம்-மத்தேயு - 23-9)

என்று பரிசுத்த வேதாகமம் இறைவனே உலகின் தந்தை என்பதனை எடுத்துக்காட்டுகிறது.

**இஸ்லாமியம் :**

இஸ்லாமிய சமயம் இறைவனை இறைவனாக மட்டுமே காண்கிறது. பிற உறவு நிலைகளில் வைத்துப் பேசும் போக்கு அங்கு இல்லை.

"அல்லாஉற்வைத் தவிர வேறொரு நாயகன் இல்லை"

"புகழ் அனைத்தும் அல்லாஹ்வுக்குரியதே! அவனுக்கு யாதொரு சந்ததியும் இல்லை. அவனுடைய ஆட்சியில் அவனுக்குக் கூட்டாள் ஒருவருமில்லை. அவன் பலஹீனனாக இருக்கிறான் என்று கூறுவதற்குமில்லை. அவனுக்கு உதவியாளன் ஒருவனுமில்லை. ஆகவே அவனை மிக மிகப் பெருமைப்படுத்திக் கூறுவீராக! " (அல்லாமா-ப-351) என்று குர்ஆன் குறிப்பிடுகிறது.

பாகிஸ்தானைச் சார்ந்த பெண்மணியான ஷீக்பெல் குவிஸ் (Madam Sheek BilQuis) என்பவர் குர்ஆனைப் பலமுறை படித்தவர். தாம் எழுதிய சுயசரிதையில் "இஸ்லாமிய சமயத்தில் இறைவனைத் தந்தையாகக் காண்கின்ற நிலை இல்லாததாக மிகவும் வருந்தியுரைக்கிறார் " (The Social Psychology of Religion- P-184) அவ்வாறில்லாது கிறித்தவம் தந்தையாகக் காணுவதால் அதன்பால் தமக்கு ஈர்ப்பு ஏற்பட்டதாகவும் உரைக்கிறார். எனவே இத்தகைய உறவுநிலைக் கட்டுப்பாடு சிலவிடத்து மதமாற்றத்திற்கு ஒரு காரணமாக அமைந்துவிடுகிற அபாயமும் உள்ளது.

ஆனால் கடவுளைத் தந்தையாகக் கருதும் போக்கு மேலைநாட்டு நாகரிகத்துடன் இணைந்த ஒன்றாகவும், விளங்குகிறது. அதனையே சமயப் பாரம்பரியமாகவும் ஏற்றனர் என்பதையும் அறிய முடிகிறது சான்றாக,

"பரலோகத்தில் உள்ள தந்தை" புனிதத் தாய், புனிதக் குடும்பம், என்னும் கூற்றுகள் வழிபாட்டின் போது வழக்கில் வந்தவை என்று வார்னர் குறிப்பிடுகிறார். இதுவரை தாய், தந்தைநிலை

உறவு நிலைகள் குறித்து ஆராயப்பட்டது. இனி பெற்றோர் நிலை உறவு குறித்து ஆராயலாம்.

### பெற்றோர் நிலை :

தாய்தந்தை என இருவரையும் தனித்தனி நிலையில் குறிப்பிட்ட போதிலும் இணைத்துப் பெற்றோர் நிலையிலும் கூறுகின்ற போக்கு அருட்பாவில் காணப்படுகின்றது. அப்போது தம்மைச் சேய் நிலையில் வைத்து எண்ணுகிறார் இராமலிங்க அடிகள்

### இணைத்துக் காட்டுதல் :

*"அம்மை அப்பன்" (கழிபகற்கிரங்கல்)*

*"என்றாதையாகி எனக் கன்னையுமாய்" (அன்புமாலை)*

*"ஈன்றுகொண்ட என்தந்தையும் தாயும்*
*யாவும்நீ என எண்ணி" (கழிபகற்கிரங்கல்)*

*"நீயே என் தந்தை அருளுடையாய் எனை*
*நேர்ந்து பெற்ற தாயே" (திருவருண் முறையீடு)*

என தாய் தந்தை இருவரையும் இணைத்துக் காட்டும் நிலை காணப்படுகிறது.

### சேய்நிலை :

*"தன்உணர்வோன் எனினும் மகன்தனை ஈன்றோர்*
*புறம்பாகத் தள்ளர் அன்றோ" (தனித் திருவிருத்தம்)*

என்ற பாடலில் பெற்றோராக இறைவனையும், சேயாகத் தன்னையும் குறிப்பிட்ட நிலைப் புலப்படுகிறது.

### உறவுத் தொடர்ச்சி :

*"என்றாதையாகி எனக் கன்னையுமாய் நின்றே*
*எழுமையும் என்றனை ஆண்டஎன் உயிரின் துணையே" (அன்பு மாலை)*

என்று பிறவிதோறும் அவ்வுறவு நிலைத் தொடர்வதாக வலியுறித்துகிறார்.

### பெற்றோர் செயல் :

*"யான் மயங்குந்தோறும் அன்னை எனப்பரிந்தருளி*
*அப்போதைக்கப்போது அப்பன் எனத் தெளிவித்தே*

"இங்கெனக்குப் பேசிய தந்தையும் தாயும் நீயலையோ
...... புனிதநீ ஆதலால் என்னை அடித்ததுபோதும்
அணைத்திடல் வேண்டும் அம்மையப்பா இனி ஆற்றேன்"
(பிள்ளைச் சிறுவிண்ணப்பம்)

என வரும் பகுதிகளில் பரிந்தருளல், தெளிவித்தல், அணைத்தல் ஆகிய செயல்கள் உணர்த்தப்பட்டுள்ளன.

## பிறவற்றில் பெற்றோர் நிலை :

தாய், தந்தை, சேய் என்ற அந்நிலை உறவுகள் குடும்ப அமைப்பிற்குள் கடவுளை அடக்கும் கருதுகோளுக்கு (Family projection hypothesis) இட்டுச் செல்கின்றன. கடவுளைப் பெற்றோராக நினைத்து வழிபடும் முறை சமயப் பாரம்பரியத்தில ஒன்றாக இருப்பதனால் ஒவ்வொரு தனிமனிதனும் அதனை வெகு சுலபமாகக் கற்றுக் கொள்ள முடிகிறது. தென்னகத்துச் சமயப் பாரம்பரியத்திலும் அத்தகைய போக்கு காணப்பட்டுள்ளது ஆழ்வார்களிடத்தும், நாயன்மார்களிடத்தும் இப்பாரம்பரியக் கூறுகள் கிடக்கின்றன.

"அம்மையே அப்பா ஒப்பிலா மணியே"

என்ற மணிவாசகரது அருள் அனுபவ வெளிப்பாடும்.

"ராஜன் ராஜகுமாரன்"

என்ற உறவினை சிவஞானபோதம் உணர்த்துகின்ற வரிகளும்,

"தாய் நினைந்த கன்றே யொக்க என்னையும்
தன்னையே நினைக்கச் செய்து
தானெனக்காய் நினைந்தருள் செய்யும் அப்பன்" (சினவில்)

என்ற திருமங்கையாழ்வாரின் பெரியதிருமொழியும் சான்றுகளாகும்

## சமூக உளவியலாளர் பார்வையில் பெற்றோர் நிலை:

உலகந் தழுவிய நிலையில் குடும்பஅமைப்பு என்பது தனிமனித சமுதாய அடிப்படையில் அமைகிறது. எனவே "பெற்றோர் உருவாக்கம்" (Parental image) என்பதும் ஒத்துப் போகின்றது.

"கடவுளைப் பற்றி முதன்முதலில் அறிமுகம்செய்து வைப்பதே பெற்றோர் தான்" (The Social Psychology of Religion - 180) என்ற மைக்கேல் ஆர்க்கரியின் கருத்தும் நினைவு கூறத்தக்கது.

"நம்பிக்கையால் எழுந்த கோட்பாடு என்பது தனிமனிதனால் உருவாக்கப்பட்டது அல்ல. ஒரு தலைமுறையில் இருந்து அடுத்த

தலைமுறைக்கு வழிவழியாக் (Transmit) கடைப்பிடிக்கப் பட்டது" (மேலது) என்கிறார் ஸ்பைரோ என்பவர்.

அவ்வாறு காண்கின்ற போது இராமலிங்க அடிகளிடமும் தலைமுறை, பாரம்பரியம் என்பனவற்றின் மூலம்தான் குடும்பஅமைப்பு உறவு நிலைகள் இடம்பெற்றிருக்க வேண்டும்.

பெற்றோர், கடவுள் (Parental Image and Deity Image) உருவாக்கத்திற்கு உளவியல் அடிப்படையில் இரு காரணங்கள் கூறப்படுகின்றன.

"1. இறைவனோடு உறவுகொள்ளும் மனப்பான்மைபால் மாறுபாடாகவே அமைகிறது.

2. தாய் தந்தை இருவரில் யாரேனும் ஒருவரிடம் மட்டுமே சலுகைக் கொள்வதைப் போலவே கடவுளையும் கருதும்நிலை."

என்பவையே அவை. அவ்வாறு நோக்குகின்ற போது இராமலிங்க அடிகள் தாய் தந்தையை பிள்ளைப்பருவ முதலே இழந்து விட்டதாகவே வாழ்வியல் நிகழ்வுகள் காட்டுகின்றன. எனவே பெற்றோரிடம் பெற்ற சலுகையை அவ்வாறு கடவுளையும் கருதத்தூண்டியது எனக் கொள்வதற்கில்லை: மாறாக இழப்பு அவரை அதைப் பற்றி மிகவும் பாதிக்கச்செய்து சிந்திக்கச் செய்திருக்கும். அதன் வெளிப்பாடாக அத்தகைய நிலைகளைப் பாடல்களில் காட்டியிருக்கிறார் எனக் கருதுதற்கு வாய்ப்பு உள்ளது.

## திருஅருட்பாவில் உறவின் வளர்ச்சி நிலைகள் :

பெற்றோர் நிலையில் இறைவனைக் குறிப்பிட்டாலும் அவை ஆரம்பநிலையே என்பது அவரது பிற பாடல்கள் மூலம் உணர்த்தவரும் செய்தியாகும்.

"தாயாகித் தந்தையுமாய்த் தாங்குகின்ற தெய்வம்
தன்னைநிகர் இல்லாத தனித்தலைமைத் தெய்வம்"
(பரசிவநிலை)

எனத் தனித்துத் தலைமை ஏற்றிக் காட்டும் போக்கும் காணப்படுகின்றது.

தந்தை, தாய், குரு, தெய்வம் என்ற வரிசைக்கிரமச் சிந்தனையும் தெரிகின்றது.

"தாயானைத் தந்தையென காயினானைச் சர்க்குருவுமானானை"
(கண் கொள்ளாக் காட்சி)

"தாயும் தந்தையும் செல்வமும் குருவும் தாங்குகின்றதோர்
தலைவனும்.... அனைத்தும் நீ

தாயும் தந்தையும் சற்குரு நாதனும் ஆயும் தெய்வமும் நீ"
"தந்தையும் தாயும் குருவும் யான் போற்றும் சாமியும்"
(திருப்புகழ்ச்சி, தனித்திருவிருத்தம், திருவருள் விழைதல்)

என்ற பாடல் வரிகள் இறைவனின் உறவுப் பரிமாண வளர்ச்சியில் தாய் தந்தை நிலை அடிப்படையாக அமைந்தது எனக் கூறி நிற்கின்றன. பின்னர் இடம்பெறுவனவாகத்

"தனிப்பெருஞ் சோதித் தலைவனே" (பிள்ளைப் பெருவிண்ணப்பம்)

"ஆடையிலே எனை மணந்த மணவாளா"
(அருள் விளக்கமாலை)

"என் கணவர் பெருந்தன்மை என்னுடைய தனிக்கணவர்
என்னை மணமாலை யிட்டார்" (அனுபவ மாலை)

"என்னுயிரில் கலந்து கொண்டார்" (பாங்கி தலைவி பெற்றி உரைத்தல்)

என வரும் நிலைகள் நாயக நாயகி நிலையினை அடைந்த பாங்கைக் காட்டி நிற்கின்றன. இறைவனோடு அமைகின்ற உறவு பால் மாறுபாடாகவே அமையும் என்ற உளவியல் கருத்து இராமலிங்கரைப் பொருத்தமட்டில், பெற்றோர் தன்மைக்குப் பொருந்தாது தலைவன் தலைவி என்னும் கலப்பு நிலைக்கே பொருந்துகின்றது.

## திருஅருட்பா காட்டுகின்ற பிற உறவுநிலைகள் :

திருஅருட்பாவில் தாய், தந்தை, பெற்றோர், சேய், நாயக நாயகி போன்ற உறவுநிலைகள் மட்டுமல்லாது வேறுசில உறவுநிலைகளும் குறிக்கப்பட்டுள்ளன. அவை -

**துணை :**

1. உணவு கொடுத்துண்ணச் செய்வித்தே பசியை
போக்கி அருள்புரிந்த என்றன் புண்ணியு நற்றுணையே-4137.2
2. என் உயிருக்கு இசைந்த பெருந் துணையே. - 4105.3
3. ஏங்கிய போதென்றன்னைத் தாங்கியு நல்துணையே. - 4092,
4. செம்மாந்த சிறியேனைச் சிறுநெறியில் சிறிதும்
செலுத்தாமல் பெருநெறியில் செலுத்திய நற்றுணையே. - 4165
5. கருவில் கலந்த துணையே. - 4626.2
6. அன்பெலாந்தவிர்த்த துணை. - 4395.1

7. தூங்கியிகப் புரண்டுவிழத் தரையில் விழாதெனையே தூக்கி
எடுத்தணைத்துக் கீழ்க்கிடத்திய மெய்த்துணை. 4134.2
8. பற்றயர்ந்தஞ்சிய பரிவு கண்டணைந்தெனைச் சற்றும் அஞ்சேல்
எனத் தாங்கிய துணையே. - 4615.1165
9. தளர்ந்த அத்தருணம் என் தளர்வெலாம் தவிர்ந்துட்
கிளர்ந்திட எனக்குக் கிடைத்த மெய்த்துணையே. - 4615.1167
10. துறையிது வழியிது துணிவது நீசெயும்
முறையிது எனவே மொழிந்த மெய்த்துணையே. - 4615.1169
11. வேண்டிய வேண்டிய விருப்பெலாம் எனக்கே
ஈண்டிருந்தருள் புரி என்னுயிர்த் துணையே. - 4615.1173.

## நட்பு :

1. அயர்வற எனக்கே அருட்டுணைஆகி என்
உயிரினும் சிறந்த ஒருமைஎன் நட்பே.
2. அன்பினில் கலந்தென தறிவினில் பயின்றே
இன்பினில் அளைந்தஎன் இன்னுயிர் நட்பே
3. உள்ளமும் உணர்ச்சியும் உயிரும் கலந்துகொண்டு
எள்ளுறு நெய்யில்என் உள்ளுறு நட்பே.
4. சவலை நெஞ்சகத்தின் தளர்ச்சியும் அச்சமும்
கவலையும் தவிர்த்தெனைக் கலந்த நல்நட்பே.
5. செற்றமும் தீமையும் தீர்த்து நான்செய்த
குற்றமும் குணமாகக் கொண்ட என்நட்பே.
6. குணங்குறி முதலிய குறித்திடாதெனையே
அணங்கறக் கலந்த அன்புடை நட்பே.
7. பிணக்கும் பேதமும் பேயுலகோர் புகல்
கணக்கும் தீர்த்தெனைக் கலந்த நல்நட்பே. - 4615! 1177-1192.

## துரை :

1. இச்சையுற்ற படியெல்லாம் எனக்கருளும் துரையே. 4092!3
2. இனியமொழிமாலை தொடுத்திடச் செய்து
அணிந்துகொண்ட துரையே. - 4183.3
3! கையறவு தவிர்த்தருளிக் காத்தளித்த துரையே. 4158.3
4. பயந்தபொழுதெல்லாம் என்பயந்தவிர்த்த துரையே. 4092.2.

5. பாட்டாளர் பாடுந்தோறும் பரிசளிக்கும் துரையே. 4103.2
6. தூங்காதே விழித்திருக்கும் சூதறிவித்தெனை ஆண்ட துரையே. - 5341.1.

## பெருந்தகை :

1. சாவாத வரம் எனக்குத் தந்த பெருந்தகை. - 4635.1.
2. செய்யாத பேருதவி செய்த பெருந்தகையே. - 4143.4

## வள்ளல் :

1. மருட்பெரும்பகை தீர்த்தென்னை ஆட்கொண்ட வள்ளலே - 5321.3.
2. மிகு கருணை வள்ளலே - 4193.4
3. மாதயவுடைய வள்ளலே - 4170.4
4. வலிந்தெனைக் கலந்த வள்ளலே - 4197.4
5. அன்பிலாக் கருணை மாநிதி எனும் என் வள்ளல் - 3965.4.

## உயிர் உறவு :

1. களைப்பறிந்தெடுத்துக் கலக்கம் தவிர்ந்தெனக்கு
   இளைப்பறிந்துதவிய என்உயிர் உறவே.
2. தன்னைத் தழுவுறு தாஞ்சிறிதறியா
   என்னைத் தழுவிய என்உயிர் உறவே.
3. துன்னும் அனாதியே சூழ்ந்தெனைப் பிரியாது
   என் உறவாகிய என்உயிர் உறவே.
4. மனக்குறை நீக்கி நல் வாழ்வளித்தென்றும்
   எனக் குறவாகிய என்உயிர் உறவே - 4615 : 1193 - 1200.

மேற்குறித்த உறவு நிலைகளில் சமூகச் செயற்பாடுகளும், அன்பின் வெளிப்பாட்டு நிலைகளும் புலப்படுகின்றன. இறுதியில் உயிர் உறவு எனக் குறித்ததனால், அவ்வுறவு, துணை, நட்பு, துரை, பெருந்தகை, வள்ளல் என்பவற்றுக்கெல்லாம் மேலானது என்பது தெளிவு. அவ்வுறவு இறைவனைத் தலைவனாகக் கொண்ட உன்னத உறவாகவே இருக்க முடியும். திருவருட்பாவின் இறுதிப்பாடலான அனுபவ மாலையும், அவ்வுறவை வலியுறுத்தும் வகையில் தான் பாடல்களைக் கொண்டிருக்கிறது.

# 3. அப்பாலைக் குறியீடுகள்

இராமலிங்கரின் அனுபவ வெளிப்பாட்டுக் களமாகத் திருஅருட்பா விளங்குகின்றது. அவ்வனுபவ வெளிப்பாடுகள் அனைத்தும் எளிதில் விளங்குவனவாக இல்லை. உருவகங்கள், தொடர் உருவகங்கள், குறியீடுகள் என்ற வடிவங்களில் அவை வெளிப்பட்டு நிற்கின்றன. குறியீட்டியத்தின் வளர்ச்சியில் இராம லிங்கர் பெறும் இடத்தை அப்துல்ரகுமான் பின்வருமாறு குறிப்பிடுகிறார்! "பிரான்சில் குறியீட்டு இயக்கம் நிகழ்ந்த அதே காலகட்டத்தில் தமிழில் இராமலிங்கர் கடப்பியக் குறியீட்டியத்தைக் கையாண்டார்." (புதுக்கவிதையில் குறியீடு)

இவ்வியல் இராமலிங்கரின் அனுபவ வெளிப்பாடுகள் குறியீட்டு நிலைகளில் அமைந்து இருப்பதை விளக்க முற்படுகின்றது. அதற்குத் துணைசெய்வதாக முதலில் மிஸ்டிஸிஸம், கடப்புநிலை, அப்பாலையநிலை என்பன விளக்கப்படுகின்றன.

## அப்பாலை நிலை விளக்கம்

"மியூஇன் (Muein) என்ற கிரேக்கப் பதமே மிஸ்டிஸிஸம் என்பதற்கு வேராக அமைந்தது. அதன் பொருள் அமைதியில் இருத்தல் (to remain Silence) என்பதாகும். (The Encyclopedia of Religion - P.245) கிறித்தவர்களும் அந்தப் பொருளிலேயே மௌனமாக இருக்கும் ரகசியத்தைக் கற்பிப்பது என்று ஏற்றுக்கொண்டனர்.

இந்தியச் சமயச் சிந்தனையிலும் மிஸ்டிஸிஸம் என்பது அதே பொருளில் சொல்லற்ற தியானம், 'சும்மாயிரு சொல்லற' என்ற கருத்துப்படிவங்களால் வழக்கில் இருந்தமை தெரிய வருகிறது. தமிழில் மிஸ்டிஸிஸம் என்பதற்குப் பல விளக்கங்கள் தரப்படுகின்றன. அனுபூதி என்பது ஒரு விளக்கம். "இறை இணைவுப்பான்மை" (ஒப்பிலக்கியம் ஓர் அறிமுகம்) என்று சச்சிதானந்தம் விளக்கம் தருகிறார். மனப்புலம் கடந்த நிலை, கடப்புநிலை, கடப்பியம், அப்பாலைய நிலை, அப்பாலை உணர்வு என்றும் விளக்கங்கள் தரப்படுகின்றன. அன்றாட வாழ்வியல் நிகழ்வுகளுக்கு அப்பால், வார்த்தை வெளிப்பாடுகளுக்கு அப்பால், மனம் வாக்கு என்பவைகளுக்கு அப்பால் இறையோடு இரண்டறக் கலந்த நிலையைப் பல்சமய அருளாளர்களும் சுட்டிச் செல்கின்றனர். சிந்தனைக்கும் வெளிப்பாட்டுக்கும் இடையே ஒரு காட்சி போல அவை விளங்குவதால் அப்பாலை நிலை என்ற சொற்றொடரே இவ்வாய்வேட்டில் பயன்படுத்தப்படுகிறது

அப்பாலை நிலை குறித்து லேலாண்டி (Lalande) என்பவர், "அடிப்படை இறைத்தன்மையோடு மனித ஆன்மா நெருக்கமாகக் கொள்ளுகிற உறவு, அவ்வுறவு ஏறக்குறைய எப்போதும் நம்பிக்கையுடன் கூடியதாக, உணர்வு ரீதியாக, உள்ளுணர்வு நிறைந்ததாக ஆகிவிட்டது" என்கிறார்.

ஆர். கார்கோ லாங்கரன்ஞ் (R. Garrigou Lagrange) என்பவர், "அப்பாலைய அருளியல் வாழ்வு என்பது அசாதாரணமான ஒரு பூரண வழி என்பதை விட மனித வாழ்விற்குச் சரியான வழி எனக் கூறுதல் வேண்டும்." (Metaphysics and Mysticism, Vol. 17, P-65) என்கிறார்.

மேற்குறித்த விளக்கங்களினின்றும் பின்வரும் செய்திகள் பெறப்படுகின்றன.

1. இறையோடு ஆன்மா கொள்ளுகின்ற உறவு, 2. வார்த்தை வெளிப்பாடுகளுக்கு அப்பாற்பட்டது. 3. வாழ்வியல் நிகழ்வுகளுக்கு அப்பாற்பட்டது. 4. நம்பிக்கையுடன் கூடியது. 5. உணர்வு ரீதியானது. 6. உள்ளுணர்வு நிறைந்தது. 7. சிந்தனைக்கும் வெளிப்பாட்டுக்கும் இடையே தோன்றுவது. 8. மனித வாழ்விற்குச் சரியான வழி, என்பன.

அவ்வாறெல்லாம் விளக்கம் பெறுகின்ற அப்பாலை நிலையை உளவியல், இறையியல், குறியீட்டில், மந்திரவியல் ஆகியவற்றுடன் இணைத்துப் பார்க்கும் போக்கு உள்ளது. அவ்வகை அப்பால் நிலை அனுபவங்களை அண்டர்ஹில் என்பார், குறியீட்டியல் நோக்கில் பகுத்துக் காட்டுகிறார். அவை மூவித குறியீட்டியல் வகைப்பாடுகளின் கீழ் அடக்கிக் கூறப்பட்டுள்ளன. அவற்றை "பயணம், திருமணம், உயர்வேதிவினை நிகழ்வு" 'Journey, Travel, Voyage,' (Evelyn Underhill, Mysticism, (Mysticism and Symbolism), P.129 Three kinds of Temperament... as their characteristic forms of symbolic expression the mystic quest, the Marriage of the soul, and the 'Great Work' of the Spirtiutal Alchemists.) என்று பேரிட்டுக் கூறியுள்ளார். அம்மூன்று குறியீட்டு நிலைகளையும் முறையே திருவருட்பாவில் ஒப்பிட்டு ஆராய்வதாக இவ்வியல் அமைகிறது.

## பயணம்

பயணம் என்கின்ற குறியீடு குறித்து அண்டர்ஹில் என்பார் விளக்கும் மிஸ்டிஸிஸக் கருத்துக்களோடு, திருஅருட்பாக் கருத்துக் களை ஒப்பிட்டு நோக்கும்முயற்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## பயணம் என்பதன் விளக்கமும் வரையறையும்

பயணம் என்ற சொல் யாத்திரை, பிரயாணம் என்றவாறு இடம் விட்டு மாறிச் செல்லுதல் எனும் பொருளில் வழங்கி வருகின்றது. தீர்த்த யாத்திரை என்பது புண்ணிய தலங்களுக்குச் சென்று வழிபடுதல் என்ற பொருளில் குறிப்பிடப் படுகிறது. "பயணமுடன்... ஆருர் தொழுது (சேரமான் நாயனார். 129)" (Tamil Lexicon) என்று சைவ சமய நூலான பெரியபுராணம் குறிப்பிடுகின்றது. ஆனால் சமயஞ் சார்ந்த விளக்கங்களை அகராதிகள் தரவில்லை. தமிழ்ப் பேரகராதி என்ற ஆங்கில விளக்கங்களைத் தந்துள்ளது. அவற்றின் தமிழ் விளக்கங்களிலும் சிறுதொலைப்பயணம், சுற்றுப்பயணம், பயணம், நீள் பயணம், கடற்பயணம், நீர்வழிப்பயணம் என்று வழிமுறை விளக்கங்கள் மட்டுமே தரப்பட்டுள்ளன. "மரணம் என்பதும் ஒரு பயணமே" (Death as a Journey) என்ற விளக்கத்தையும் பேரகராதியில் காண முடிகிறது. ஆனால், இறையனுபவமும் பயணமே என்ற கருத்தை அப்பாலை நிலை அருளாளர்தாம் (மிஸ்டிஸிஸவாதிகள்) முன் வைத்தனர். சமயக் கலைக்களஞ்சியம் பயணம் என்பதை விளக்குமிடத்து, "See Ascension Descent into the under world, Flight pilgrimage, Quest" என்று குறிப்பிட்டுள்ளது. அவ்வாறு கூறப்பட்டுள்ள இணைப்பொருள் கூறுகளில் இருந்து பயணத்திற்கான வரையறை கண்டறியப்பட வேண்டும். "அவ்இணைப் பொருள் கூறுகளின் தமிழ் வழி விளக்கங்களினின்றும்" [ஏ. சி. செட்டியார் - ஆங்கிலம், தமிழ் அகராதி, Ascenion - ஏறுதல், எழுந்து செல்லல், விண்ணேறுதல் (ப.50) Descent - இரங்குதல், இறக்கம், கீழ்நோக்கிய செலவு, கீழ்நோக்கிய சாய்வு, சரிவு, மரபுவழி வருகை (290) Flight - பறத்தல், வான்செலவு, எட்டா அவா, உயர்வு, வரம்பு கடந்த சிந்தனை உயர்வு (394) Pilgrimage - யாத்திரை, வாழ்க்கைப் பயணம், யாத்திரை செல் (737) Quest - தேடும் பொருள், நாடிச்செல், தேடித் திரி, தேடிக்காண், தேடு (798) Journey - பயணம் (553)] ஏற்றம் பெறுவதற்காக மரபு வழியில் இருந்து வரம்பு கடந்த சிந்தனை உயர்வினால் உணர்வு வழியாக இறையருளைத் தேடிக்காண முற்படுகின்ற யாத்திரையே பயணம் . என்ற வரையறையைப் பெற முடிகிறது.

கிறித்தவ அப்பாலை நிலை (மிஸ்டிஸிஸம்) பயணம் பற்றிக் குறிப்பிடுகிறது. இறைவனைப் பற்றிய உண்மையின் தேடலும், ஆன்மீக உலகு பற்றிய சிந்தனையுமே, அதில் இடம்பெறுகிறது. அக்கருத்துக்கள் ஆழமானவை. சமயத்தின்பால் நம்பிக்கை

அப்பாலை நிலை குறித்து லேலாண்டி (Lalande) எ
"அடிப்படை இறைத்தன்மையோடு மனித ஆன்மா நெருக்
கொள்ளுகிற உறவு, அவ்வுறவு ஏறக்குறைய எப்
நம்பிக்கையுடன் கூடியதாக, உணர்வு ரீதியாக, உள்
நிறைந்ததாக ஆகிவிட்டது" என்கிறார்.

ஆர். கார்கோ லாங்கரன்ஞ் (R. Garrigou Lagrange) எ
"அப்பாலைய அருளியல் வாழ்வு என்பது அசாதாரணமா
பூரண வழி என்பதை விட மனித வாழ்விற்குச் சரியான வழ
கூறுதல் வேண்டும்." (Metaphysics and Mysticism, Vol. 17
என்கிறார்.

மேற்குறித்த விளக்கங்களினின்றும் பின்வரும் செ
பெறப்படுகின்றன.

1. இறையோடு ஆன்மா கொள்ளுகின்ற உறவு, 2. வா
வெளிப்பாடுகளுக்கு அப்பாற்பட்டது. 3. வாழ்வியல் நிகழ்வு
அப்பாற்பட்டது. 4. நம்பிக்கையுடன் கூடியது. 5. உ
ரீதியானது. 6. உள்ளுணர்வு நிறைந்தது. 7. சிந்தனை
வெளிப்பாட்டுக்கும் இடையே தோன்றுவது. 8. மனித வாழ்
சரியான வழி, என்பன.

அவ்வாறெல்லாம் விளக்கம் பெறுகின்ற அப்பாலை நி
உளவியல், இறையியல், குறியீட்டில், மந்திரவியல் ஆகியவற்
இணைத்துப் பார்க்கும் போக்கு உள்ளது. அவ்வகை அ
நிலை அனுபவங்களை அண்டர்ஹில் என்பார், குறியீட்
நோக்கில் பகுத்துக் காட்டுகிறார். அவை மூவித குறியீட்
வகைப்பாடுகளின் கீழ் அடக்கிக் கூறப்பட்டுள்ளன. அ
"பயணம், திருமணம், உயர்வேதிவினை நிகழ்வு" 'Journey, '
Voyage,' (Evelyn Underhill, Mysticism, (Mysticism and Symb
P.129 Three kinds of Temperament... as their characteristic fo
symbolic expression the mystic quest, the Marriage of the sou
the 'Great Work' of the Spirtiutal Alchemists.) என்று பேர்
கூறியுள்ளார். அம்மூன்று குறியீட்டு நிலைகளையும் மு
திருவருட்பாவில் ஒப்பிட்டு ஆராய்வதாக இவ்வியல் அமை

## பயணம்

பயணம் என்கின்ற குறியீடு குறித்து அண்டர்ஹில் எ
விளக்கும் மிஸ்டிஸிஸக் கருத்துக்களோடு, திருஅருட்பாக் கரு
களை ஒப்பிட்டு நோக்கும்முயற்சி மேற்கொள்ளப்பட்டுள்ள

உயிர், தெய்வம் - மனிதம் என்ற இரண்டினிடத்தும் ஏற்படும் அன்பின் பிணைப்பு முதல் உபகரணமாகச் சொல்லப்படுகின்றது. புனித அகஸ்டஸின் கூற்று கிறித்தவத்தில் உள்ள ஆன்ம அனுபவப் பிணைப்பினைக் காட்டும் வகையில் அமைந்துள்ளது. "நீ எங்களை உனக்காகவே படைத்தாய். உன்னுள் அன்றி எங்கள் இதயம் அமைதி காணாது" என்பதே அக்கூற்று. அதேபோன்று கருத்தமைப்புடன் திருஅருட்பாப் பாடல் விளங்குகின்றது.

"எல்லாம் உடையாய் நின்செயலே எல்லாம் என்றால்

என்செயல்கள் எல்லாம் நினது செயல் அன்றோ" (அடியார்பேறு)

எனும்போது என்செயல் - நின்செயல், நின்செயல்-என்செயல் என்ற ஒருங்கிணைப்பு வெளிப்பட்டு நிற்பதை உணர முடிகின்றது.

## ஆழ்தல்

இறைவனை நோக்கிய பயணம். இறைவனில் பயணம் என்பதாக ஆழ்தல் என்ற இரண்டாவது உபகரணம் விளக்கம் பெறுகின்றது. கவர்ச்சி என்பது கூட எளிதாக வரலாம். காண்டல், கேட்டல் என்ற ஆரம்ப நிலைகளிலேயே முதல் உபகரணத்தைப் பெற்றுவிட முடியும். ஆனால் உற்றுணர்தல் எனும் ஆழத்தில் வருவதே ஆழ்ந்த அன்பு, அவ்வன்பே அடைக்குந் தாழின்றிப் பெருகி இறைவனைப் பற்றிய பூரண அறிவைப் பெற்றுத் தருகின்றது.

"தான்நான் என்று பிரித்தற்கரிய தரத்து........ முன்னே நான்

செய்தவத்தில் எனக்குள் முளைத்த நேயனே" (மெய்யிருள்வியப்பு)

என்ற அருட்பாவின் மூலம் இராமலிங்கர் உயிரும் இறையும் பிரித்தற்கரியது என்ற ஆழ்ந்த நிலையினை வெளிக்காட்டியுள்ளார்.

உயிரின் வருத்தத்தைப் பாராது தாங்கிக் கொள்பவன் இறைவன், உயிரினின்று தன்னைப் பிரித்துக் காண இயலாத வண்ணம் முயங்கி நிற்பவன் உயிரின் தவச் சிறப்பால் உயிருக்குள்ளேயே முளைத்து நிற்பவன் என்ற இக்கருத்துக்கள் எல்லாம் ஆழ்தல் எனும் உபகரணத்தை உயிர் பெற்றுவிட்டது என்பதைக் காட்டுவதேயாகும்.

## எழுச்சி :

இறையுடன் ஒருங்கிணைப்பு ஏற்பட்டதாக உயிர் உணரத் தொடங்கியதன் பின்னர், அந்நிலையிலேயே இருந்துவிட முடிவு செய்கிறது. அதன் பின்னர், இவ்வுலகச் சிந்தனைகளை விட்டுவிடவேண்டும் என்ற அக எழுச்சியும், இறையுலகு

கொண்டோர் மட்டுமே ஏற்றுக் கொள்ளக்கூடியவை. அல்லாதாரால் விமர்சிக்கப்படுவனவாக உள்ளன.

இறை, மனிதவுயிர் இவ்விரண்டிற்கும் இடையே பெறப்படும் ஆன்ம அனுபவம் இறைவனோடு அமையும் ரகசியப் பயணமாகும். "இருளில் இருந்து ஒளியை நோக்கிச் செல்லுதல் பயணம்" (பிரபஞ்சன் - சுகபோகத்தீவுகள் - ப.3) மனிதவுயிர் ஆன்ம இருளில் இருந்து மீண்டு, இறையொளியை நோக்கிச் செல்லுதல் என்றும் பொருள் கொள்ளலாம். "உண்மையின் பாதையில் நெடுஞ்சாலை வழியாகப் பட்டினம் செல்வது போல, சூரியப் பாதையில் நிகழும் பயணம் போல, தொடுவானத்தைத் தொடுவது போல காணப்படும் பொருள்களில் உள்ள மெய்ம்மைகளைத் தேடி அலைகிறான். அதுவே தவறில் இருந்து சரியானதற்கும், இருளில் இருந்து ஒளிக்கும் செல்கின்ற பயணம்" (Metaphysics and Mysticism. P-66) என்ற கருத்தும் அக்கருத்தை வலுப்படுத்துகிறது.

அக வாழ்வு பற்றிய அவ்வாராய்ச்சியில் ஆன்மாவின் உறைவிடம், மனதின் பல்வேறு நிலைகள் ஆகியவற்றைக் காணக் கூடலாம். "சிந்தனைக்கும் வெளிப்பாட்டுக்கும் இடையே ஒரு காட்சி போல உள்ள அனுபவங்களை வெளிக்காட்டுதல் இயலாது. அவை அறிவாராய்ச்சியாக மூளைக்குச் சென்று சேர்வதல்ல. அகத்தின் தேடலாக விரும்பும் நெஞ்சிற்கே சென்று சேரும்" (Mysticism. P-130) என்று விளக்கம் தருகிறார் எவிலின் அண்டர்ஹில்.

எனவே, பயணம் என்பது ஆன்மாவின் இருளகற்றும் பெரும் பணியைச் செய்வது என்பது புலப்படுகிறது.

## பயணிக்கு வேண்டும் உபகரணங்கள்

உலகச் சிந்தனைகளை விடுத்து ஆன்மப் பயணம் மேற்கொள்ள முடிவு செய்துவிட்ட பயணிக்குத் தேவையானவை என்ன என்ற வினா முன் எழுகின்றது. அண்டர்ஹில் உபகரணங்களாக மூன்று செயல்களைக் குறிப்பிடுகிறார். அவை முறையே,

"1 கவர்தல் (Attraction), 2. ஆழ்தல் (Devotion), 3. எழுச்சி (Elivation)" என்பன (Mysticism. P-130)

## கவர்தல்

இந்நிலை ஒன்றைக் கண்டவுடன் ஈடுபட வைப்பது என்ற பொருளைத் தருவதல்ல. தெய்வத்திற்கும் மனித ஆன்மாவிற்கும் உள்ள பரஸ்பர விருப்பத்தையே குறித்து நிற்கின்றது. இறை -

உயிர், தெய்வம் - மனிதம் என்ற இரண்டினிடத்தும் ஏற்படும் அன்பின் பிணைப்பு முதல் உபகரணமாகச் சொல்லப்படுகின்றது. புனித அகஸ்டஸின் கூற்று கிறித்தவத்தில் உள்ள ஆன்ம அனுபவப் பிணைப்பினைக் காட்டும் வகையில் அமைந்துள்ளது. "நீ எங்களை உனக்காகவே படைத்தாய். உன்னுள் அன்றி எங்கள் இதயம் அமைதி காணாது" என்பதே அக்கூற்று. அதேபோன்று கருத்தமைப்புடன் திருஅருட்பாப் பாடல் விளங்குகின்றது.

"எல்லாம் உடையாய் நின்செயலே எல்லாம் என்றால்

என்செயல்கள் எல்லாம் நினது செயல் அன்றோ" (அடியார்பேறு)

எனும்போது என்செயல் - நின்செயல், நின்செயல்-என்செயல் என்ற ஒருங்கிணைப்பு வெளிப்பட்டு நிற்பதை உணர முடிகின்றது.

**ஆழ்தல்**

இறைவனை நோக்கிய பயணம். இறைவனில் பயணம் என்பதாக ஆழ்தல் என்ற இரண்டாவது உபகரணம் விளக்கம் பெறுகின்றது. கவர்ச்சி என்பது கூட எளிதாக வரலாம். காண்டல், கேட்டல் என்ற ஆரம்ப நிலைகளிலேயே முதல் உபகரணத்தைப் பெற்றுவிட முடியும். ஆனால் உற்றுணர்தல் எனும் ஆழத்தில் வருவதே ஆழ்ந்த அன்பு, அவ்வன்பே அடைக்குந் தாழின்றிப் பெருகி இறைவனைப் பற்றிய பூரண அறிவைப் பெற்றுத் தருகின்றது.

"தான்நான் என்று பிரித்தற்கரிய தரத்து........ முன்னே நான்

செய்தவத்தில் எனக்குள் முளைத்த நேயனே" (மெய்யிருள்வியப்பு)

என்ற அருட்பாவின் மூலம் இராமலிங்கர் உயிரும் இறையும் பிரித்தற்கரியது என்ற ஆழ்ந்த நிலையினை வெளிக்காட்டியுள்ளார்.

உயிரின் வருத்தத்தைப் பாராது தாங்கிக் கொள்பவன் இறைவன், உயிரினின்று தன்னைப் பிரித்துக் காண இயலாத வண்ணம் முயங்கி நிற்பவன் உயிரின் தவச் சிறப்பால் உயிருக்குள்ளேயே முளைத்து நிற்பவன் என்ற இக்கருத்துக்கள் எல்லாம் ஆழ்தல் எனும் உபகரணத்தை உயிர் பெற்றுவிட்டது என்பதைக் காட்டுவதேயாகும்.

**எழுச்சி :**

இறையுடன் ஒருங்கிணைப்பு ஏற்பட்டதாக உயிர் உணரத் தொடங்கியதன் பின்னர், அந்நிலையிலேயே இருந்துவிட முடிவு செய்கிறது. அதன் பின்னர், இவ்வுலகச் சிந்தனைகளை விட்டுவிடவேண்டும் என்ற அக எழுச்சியும், இறையுலகு

சேரவேண்டும் என்ற உள்ளக்கிளர்ச்சியும் தோன்றிவிடுகிறது. இந்நிலையில் ஆன்மீக உலகினைக் கண்டேன் எனக்கூற வைப்பதான எழுச்சி எனும் மூன்றாவது உபகரணத்தையும் உயிர் பெற்றுவிடுகிறது. இந்நிலைக்குத் தக்க சான்றாக,

"காட்டைக் கடந்தேன் நாட்டை அடைந்தேன்
கவலை தவிர்ந்தேன் உவகை மிகுந்தேன்
வீட்டைப் புகுந்தேன் தேட்டமுதுண்டேன்
வேதாகமத்தின் விளைவெல்லாம் பெற்றேன்" (தனித்திரு அலங்கல்)

என்ற அருட்பாப் பாடல் அமைகின்றது.

காட்டைக் கடந்தேன் என்பது உலகப் பற்றுக்களை நீக்கினேன் என்பதைக் குறிக்கும். நாட்டை அடைந்தேன் என்பது ஆன்மீக உலகினை அடைந்தேன் எனப் பொருள்படும். கவலை தீர்ந்தேன் என்பது இறையருள் கிட்டுமா என்ற கவலை நீங்கியது என்பதை உணர்த்துகிறது. அடுத்து வரும் வீட்டைப் புகுந்தேன் தேட்டமுதுண்டேன் வேதாகமத்தின் விளைவெலாம் பெற்றேன் என்பது இறையிடம் புகுந்து இறைக் கலப்பைப் பெற்று ஆனந்த நிலை அடைந்ததைக் குறிக்கின்றது.

## பயண இலக்கு

அப்பாலைய அருள் அனுபவ நிலையில்தான் பெற்ற அந்த அனுபவத்தை மீண்டும் மீண்டும் புதுப்பித்துக் கொள்ள உயிர் எண்ணுகிறது. உலகியலுக்கு வந்ததன் பின்னர் மீண்டும் தான் அருள் அனுபவ நிலையை எய்துதற்காகப் பயண இலக்கு ஒன்றை நிர்யணம் செய்கிறது. அவ் இலக்கினை அடைந்து அருள் அனுபவத்தை மீண்டும் பெற்று உய்வடைகிறது. அவ்இலக்கு மிகுதியும் இறைவனின் திருத்தலங்களாக அமைகின்றன.

இஸ்லாமியர் புனித மெக்காவைத் திருத்தலமாகவும், ஹஜ்யாத்திரையின் இலக்காவும் கொண்டுள்ளனர். கிறித்தவர் பயண இலக்காகவும் முடிந்த எல்லையாகவும் ஜெருசலத்தைக் கண்டார்கள். "கிறித்தவர்களுக்கும் ஜெருசலம்தான்இலக்கு. ஆனால் குறிப்பாகக் கத்தோலிக்கப் பிரிவினர் பராமரிப்பதானவ் மற்ற பிரிவினரை விட அதிக உரிமையுடன் குறிப்பிடுவர்". (21.6.92 அன்று மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் நடந்த ஞாலத் தமிழ்ப் பண்பாட்டுக் கருத்தரங்க உரையாடல் நடந்த போது கிறித்தவ இலக்கியத் துறைத் தலைவரான அருட்தந்தை. ஞானப்பிரகாசம் அவர்கள் கூறியது.) ஆன்மீக வாழ்வு என்றே ஜெருசலத்தைப் பொருள் கண்டனர். அதனையே ஆன்ம வீடு

என்றனர். திருஅருட்பாவில் சிதம்பரமே பயண இலக்காகக் குறிப்பிடப்பட்டுள்ளது. "இக்கரை கடந்திடில் அக்கரையே இருப்பது சிதம்பர சர்க்கரையே" (அம்பலத்தரசே)

என்றதனால் சிதம்பரமே இராமலிங்கரின் இலக்காக விளங்குகின்றது.

"சிதம்பர ஒளியைச் சிதம்பர வெளியைச்
சிதம்பர நடம்புரி சிவத்தை" (இறைத்திருக்காட்சி)

என்ற போது பயண இலக்கின் சிறப்பு வெளிப்படுகிறது.

"கடல் கடந்தேன் கரை யடைந்தேன்
கண்டு கொண்டேன் கோயில் கதவு
திறந்திடப் பெற்றேன் காட்சி எலாம்
கண்டேன்" (தனித்திரு அலங்கல்)

என்றதனால் சிதம்பரக் கோயிலின் கதவு திறந்து பெற்ற காட்சியினால் பயண இலக்கினைச் சேர்ந்த ஆனந்தக் களிப்பு வெளிப்பட்டது.

## பயணத்தின் தொடக்கம்

பயணத்திற்கான உபகரணங்களையும் பெற்றுக்கொண்டு, பயண இலக்கையும் நிர்யணம் செய்த பின்னர் பயணம் தொடங்குகிறது. அவ்வான்மப் பயணம் மூன்றுவித அடித்தளங்களில் இருந்து தொடங்குவதாகக் கொள்ளலாம். அம்மூன்றும் ஆன்மாவின் ஆறா அவாக்கள். அவை;

1. புனிதப் பயணியாகத் தன்னைக் கருதுதல்,
2. இதய அன்பிற்காக ஏங்குதல்,
3. பரிபூரணத் துணையைப் பெற விழைதல்.

## புனிதப் பயணியாகத் தன்னைக் கருதுதல் :

ஆன்மா தன்னை ஆன்மீகப் பயணம் செல்வதற்கு ஆயத்தப்படுத்திக் கொள்வது முதன்மையான அடித்தளமாகும். அந்நிலையில் அமைதியின்மையை வெளிப்படுத்தும் விதமாகவே செயல்களும், பாடல்களும் அமையும். நடைமுறை வாழ்வில் இருந்து விலகிப் போவது என்பது செயல்நிலை மாற்றமாகப் பரிணமிக்கிறது.

"நாதாந்தத் திருவீதி நடந்திடுதற்கரியேன்
நான் ஆர் என்றறியேன்" (முறையீடு)

என்ற திருஅருட்பா வரிகள் நடைமுறை வாழ்வில் இருந்து விலகிய நிலையைக் காட்டுகின்றன. ஈண்டு குறிப்பிட்டுள்ள நாதாந்த வீதி என்பது மற்றோர் இடத்தில் விரிவாக்கம் பெற்று விளங்குகின்றது.

"ஆரணவீதி, ஆகமவீதி, சுத்தவேதாந்த வீதி சுத்த சித்தாந்த அற்புதவீதி, சுத்த நாதாந்தவீதி, சுத்த போதாந்த வீதி, யோகாந்த அருந்தவ வீதி, சுத்த கலாந்த அதிகார வீதி, அருளான வீதி, அருட்ஜோதி வீதி" (சிவானந்தத்தழுந்தல்)

என்று அனுபவங்கள் வீதி வாரியாகச் சொல்லப்பட்டுள்ளன. நடுவீதி மட்டுமே அறிந்துள்ள நடைமுறை மனிதனில் இருந்து மேற்கூறப்பட்ட வீதிகளில் நடக்கவும், நான் யார் என்றறிய முயலும் தேடலும் வெளிப்பட்டு வேறுபடுத்திக் காட்டுகின்றன.

"ஆதி அந்தநிலையறியேன் அலையறியாக் கடல்போல
ஆனந்தப் பெரும்போகத் தமர்ந்திடவும் அறியேன்
சாகாத தலையறியேன் வேகாதகாலின் தரம் அறியேன்
போகாத தண்ணீரை அறியேன் ஆகாயநிலை அறியேன்"
(முறையீடு)

என வரும் கருத்துக்கள் நடைமுறை வாழ்வில் இருந்து விலகிப் போதல் என்பதனோடு மட்டுமின்றி, இழந்த வீட்டைத் தேடிப்போதல், நல்ல வீட்டிற்குப் போதல் என்பனவற்றோடு இணைத்து எண்ணிப் பார்க்கக் கூடியவை.

### இதய அன்பிற்காக ஏங்குதல் :

இஃது இரண்டாவது கூறாகக் கொள்ளப்படுகிறது. தன்னை யார் என்று எண்ணத் தொடங்கிய ஆன்மா முதலில் நடைமுறை வாழ்விலிருந்து விலகித் தோன்றுகிறது. பின்னர் எதனால் உருவாக்கப்பட்டோம் என்ற எண்ணத்தின் விளைவாக உண்மை அன்பைப் பெற நாட்டம் கொள்கிறது. உணவே பிரதானம் என வாழும் இப்பொய்மை உலகில் புகலிடம் எதுவாக இருக்கும், யாரிடம் உரைப்பது, என்ன செய்வது, இறையின் குறிப்பறியாது ஏன்தான் பிறந்தோமோ என்ற ஏக்கங்கள் எழுந்த பின்னர் இறையருள் கிட்டுமா என்ற ஐயப்பாடும் எழுந்துவிடுகிறது.

"நாயினிற் கடையேன் அருட்குப்பொருத்தன் ஆவற்கென்
செயக் கடவேன் அப்பனே எனை ஆண்டுகொண்டருளே". (மாயை வலிக்கழுங்கல்)

மேற்கூறப்பட்ட பாடலில் தனக்கு உண்மை உறவு இல்லை, தனது நிலை நிர்ணயம் செய்ய இயலாத இருண்மை நிலை என்பன

உணர்த்தப் பெற்றிருக்கின்றன. பின்னர், இறைவனை இனங்காண வேண்டும் என்ற எண்ணத் தேடலில் ஆன்மா ஈடுபடுகிறது.

"புறத்தே காணப்படும் எவையும் சிதைந்து போய்க்கொண்டே, நிலையற்றதாய் இருப்பதை உணர்ந்தவர்கள் இவற்றிற்குக் காரணமாகிய அந்தப் பரம்பொருள் என்றும் சிதைவும் ஒழிவும் அற்றதாக இருக்கவேண்டும் என்ற முடிவுக்கு வந்தார்கள். அப்படியானால் அந்த அழிவற்ற ஒன்று எங்கும் தோற்றமாகாமல் இருக்கும் போலுள்ளது. ஆதலின் அதனை ஒரு காண்பரிய மறைப்பொருளாகவே கொள்ளவேண்டும் என்ற முடிவுக்கு வந்தார்கள். அவர்களின் பொறி புலன் உணர்வை எல்லாம் கடந்து, பகுத்தறிவுக்கும் எட்டாததாய்க் கடந்த ஒரு உள்நிலையிலிருக்க வேண்டும் அந்தப் பரம்பொருள். அதனைக் கடவுள் என்றுதான் குறிக்கலாம் என்று ஆன்றோர் குழு முடிவு கட்டினது. எனவே, அப்பொருள் உணர்த்த வந்த குழுவ குறிச்சொல்லே கடவுளாய் விளங்கிக் கொண்டிருக்கின்றதாம்" என்று சரவணானந்தா (ஒன்று மூன்றான உண்மை) அத்தேடலுக்கு விடையாகவே கடவுட் கருத்து [illegible]ப்பட்டதாக வலியுறுத்துகிறார். அவ்வாறு இறை என்ற ஒன்றைக் கண்டுகொண்ட பின்னர் அந்த இறையின் அருளுக்குத் தான் பொருத்தமா? என்ற ஐயப்பாடு தோன்றிவிடுகின்றது.

அதனால் தான் அருட்பாவில்,

> "உன்றன் அருளை மேவுதற்கென் செயக் கடவேன்
>
> அப்பனே எனை ஆண்டு கொண்டருளே" (மாயை வலிக்கழுங்கல்)

எனும் பாடலாக அவ்ஐயம் வெளிப்படுகிறது. அத்தகு நிலையில் ஐயம் மீதூறப் பெற்றுப் பாடப்பட்டவை எல்லாம் உண்மையான இதய அன்பைத் தேடும் ஆன்மத் தேட்டங்களே.

## பரிபூரணத் துணையைப் பெற விழைதல் :

நடைமுறை வாழ்வில் இருந்து விலகிச் சென்று இதய அன்பிற்காக ஏங்கும் ஆன்மா பின்னர் துணை தேடி அலைகின்றது. அத்துணையும் தன்னைவிட ஆற்றல்மிக்கதாக இருக்கவேண்டும். தன் களைப்பையும் சோர்வையும் போக்கக்கூடியதாக இருக்க வேண்டும். தன்னை நன்னெறிப்படுத்தி அழைத்துச் செல்ல வேண்டும். எக்காலத்தும், எவ்விடத்தும் நடப்பனவற்றை அறியக்கூடிய ஆற்றல் படைத்ததாக இருக்கவேண்டும். சர்வ வல்லமை படைத்த பூரணத்துவம் பெற்றதாகப் பரிபூரணப் பொருளாக அத்துணை விளங்கவேண்டும் என்றெல்லாம் வேட்கை கொள்கிறது. அத்தகைய பூரணத் துணையிடம்தான் உன்னையே

துணை என்றிருக்கின்றேன். எனைக் காத்தருள் எனச் சரண் புகுந்தால் அடைக்கலம் பெற முடியும்.

"வாடுஞ் சிறியேன் வாட்டம் எலாந்தீர்ந்து வாழ்வித்திடல் வேண்டும்
பாடும் புகழோய் நினை அல்லால் துணை வேறில்லை"
(அடியார்பேறு)

என்று குறிப்பறிவித்து வாட்டம் தீர்க்கச் சொல்லி உரிமையுடன் முறையிட இயலும். மேலும் என்ன செய்தாலும் நான் உன்னை விட்டகலேன் என்ற உறுதிப்பாடு தோன்றிவிட்டால் இன்பதுன்ப ஊசலாட்டம் இன்றி மனம் சாந்தப்படவும் ஏது ஏற்பட்டுவிடுகிறது.

"துன்பே செய்வித்தாலும் என்செய்வேன்.........
அன்பே என்அம்மே என்அப்பா
இச்சிறியேனால் ஆவதென்ன" (தற்சுதந்திரம் இன்மை)

என்ற வரிகளில் பரிபூரணத் துணை இன்னதெனக் கண்டு கலந்து, அதுவே ஆன்ம அனுபவம் பெறுவதற்குத் தாய் தந்தை போலக் காரணமாய் உள்ளது என உணர்ந்து உறவாடிப் பின்னர் அதன் அன்பில் திழைக்க வேண்டும் என்ற அவா வெளிப்பட்டு நிற்றலைக் காண முடிகிறது.

**பயணத்தின் தேடல் :**

தேடலை மையமிட்டுத் தொடங்கிய ஆன்ம அனுபவப் பயணத்தில் பரிபூரணத் துணையினைக் கண்ட பின்னரும் அது இன்னது என வலியுறுத்திச் சொல்ல முடியாத தடுமாற்ற நிலையினைக் காண முடிகின்றது. தேடலின் நிறுத்தங்களாக அவை விளங்குகின்றன. ஒரு நிறுத்தம் மற்றொன்றைச் சென்றடையும் வழியாக விளங்குகின்றது. அந்நிலையில் இறை உண்மையினை அகவய வழியிலும், புறவய வழியிலும் (External way of Reality & Internal way of Reality) தேட விழைகின்றனர். அவ்விரு நிலையிலும் இரண்டிற்கும் இடைப்பட்ட மூன்றாவது அனுபவப் பொருளாக அன்பின் நிறைவு பெறப்படுகிறது. அதுவே அப்பாலை நிலையில் அருளாளர்களின் நிறை உணர்வாகவும், மீயுயர் உண்மை (Superme Factor) யாகவும் விளங்குகின்றது. அவ்வன்பின் நிறைவு இடமா, பொருளா, நிலையா (Place, Person State) எனக் குறிப்பிட்டுச் செல்லும் போக்கும் காணப்படுகிறது.

"போதாந்தத் திருநாடு புக அறியேன்" (முறையீடு)
"இக்கரை கடந்திடில் அக்கரையே
இருப்பது சிதம்பர சர்க்கரையே" (அம்பலத்தரசே)

"சோதி வள நாடு......" (கண்புருவப்பூட்டு)

என வரும் வரிகள் இடத்தைச் சுட்டுவனவாக உள்ளன.

இரண்டாவதாகப் பொருள் என்ற நிலையிலும் சுட்டப்பட்டுள்ளது.

"நாதாந்த நாட்டுக்கு நாயகரே நடராஜரே சபா நாயகரே"
"நடராஜ வள்ளலை நாடுதலே நந்தொழில்" (அம்பலத்தரசே)

என்றதனால் உயிர்ப்பொருளாக, நபராகச் சுட்டப்பட்டுள்ள பான்மையையும் அறிய முடிகிறது.

மூன்றாவதாக இடமும் பொருளுமின்றி தனித்த ஒரு நிலையாகவும் கூறப்பட்டுள்ளது.

"வரவு செலவற்ற பரிபூரணாகார சுகவாழ்க்கை...
இரவு பகல் அற்ற ஒரு தருணத்தில் உற்ற பேரின்பமே"
"ஆராலும் அறியாத உயர்நிலையில் எனைவைத்த அரசே"
(நடராஜபதிமாலை)

எனும்போது தனித்த நிலையாக, உயர்நிலையாக பேசப்படுகிறது.

"இறை, அறிதலின்போது பலவகைப் பொருளுடையதாக இருக்கின்றது" (A Comparative study of Religions. P-343)

எனக் கூறினாலும் அதுவே அனுபவமாக உணர்தலின்போது மூன்று வகையில் உள்ளது. அந்த மூன்று குறியீட்டு நிலைகளையும் அப்பாலைய நிலை அருளாளன் உருவமா? இடமா? உணர்வா? என அறியமுடியாத போது பயன்படுத்துகிறான் என்ற வரையறைக்கு வர முடிகின்றது.

ஈண்டு "ஒன்று மூன்றான உண்மை" எனச் சரவணானந்தா இணைத்துக் கூறுவதை ஒப்புநோக்க வேண்டியதாகிறது. "இந்த உலக வாழ்விலே ஒன்றான கடவுள், அகத்தே அருவ ஞான உண்மையாயும், உயிரிலே ஆற்றல் விளக்கமாயும், உருவிலே தோற்ற வண்ணமாயும் விளங்குவது மெய்யாகும். இவை மூன்று ஒன்றின் விரிவே அன்றி வேறல்ல. இதனை அகமிருந்து அனகமாகக் காணவேண்டும். மாறாகப் புறத்திருந்து கண்டு உள் ஒடுங்கச் செய்தது முன்னெறிகள்" எனக் கூறும் அவரது கருத்தின் வழி அருவம், உயிர் ஆற்றல், உரு என்ற மூன்றையும் ஒன்றாக்கிக் காண்கிறார் என்று அறிய முடிகிறது.

அப்பாலை நிலை அருளாளர்களின் தேடலில் உருவம், இடம், உணர்வு என்பன குறியீட்டு நிலையில் குறிக்கப்படுவதை முன்னர்க்குறிப்பிட்டதன் வழி தெரிந்துகொள்ளலாம். அவ்வாறா

யின் சரவணானந்தாவின் கருத்துப்படியும் உரு என்பதனுடன் அவர்களும் ஒத்துப் போகின்றனர். உணர்வு என்பதனை உயிர் ஆற்றலுடன் இணைத்துக் கூறலாம் என்ற சாத்தியக் கூறு தென்படினும், இடம் என்பதனை எதனுள் அடக்குவது என்ற ஐயம் எழுகின்றது. இடம் என்பது அருவமா? இது தனித்த ஆய்விற்குரியது. இருப்பினும், அருவம், உயிர் ஆற்றல், உரு என்பன கடவுள் எனும் 'ஒன்று மூன்றான உண்மை' எனில் அப்பாலைய நிலையில் கண்ட உருவம், இடம், உணர்வு என்பன அருள் அனுபவம் எனும் 'ஒன்று மூன்றான உண்மை' என்ற அளவில் ஏற்றுக்கொள்ள முடியும்.

இறைக்காட்சியைப் புறக்காட்சியாகக் காணும் போது அக உணர்வுக்கு அக்காட்சி விடையாக அமையலாம். பொருள் உலகில் நின்று அருள் உலகிற்கு ஒரு நுழைவாகப் பயணம் அமைகிறது. அதனைப் பற்றி மோர் என்பவர், "இதுவரை இருந்ததும் இல்லை: இனி இருக்கப்போவதும் இல்லை. ஆன்மாவின் அனுபவம்" என்கிறார். அவ்வாறு இறை-ஆன்ம நெருக்கத்திற்கு ஆசை தருவதாக உள்ளதால் பயணக்குறியீட்டு நிலையிலேயே கிறித்தவ அப்பாலைய நிலை அருளாளர் ஆர்வம் கொண்டனர்.

அந்நிலையில் புறவய வெளிப்பாட்டினை விட (Outword going) அகவய மாற்றம் (inword change) பெரிதாக அமைந்தது. மீண்டும் பிறப்பெடுத்தல் என்ற கருத்தையும் கூடக் குறிக்கத் தொடங்கினர். காதரினா என்பவர், 'கடவுளிடம் பங்கேற்பல்ல! தன்னிலை மாற்றம்' என்றும் கருத்துத் தருகிறார். அக்கருத்துக்கள் ஆன்மீக வாழ்வில் வெளியீட்டுத் திறன் வேறுபடுகிறது என்பதனை உணர்த்துகின்றன.

**காணா உலகு நோக்கிய பயணம் :**

காணும் உலகிலிருந்து காணா உலகிற்குப் பயணம் செய்தல் என்பது இறுதியாக அமைவது, கடப்புநிலை, சிறப்புநிலை அனுபவங்கள் என்பவை இதில் அடங்கும். புலன் வயப்பட்ட சாதாரண உலக முறையில் இருந்து விடுபட்டு அகநிலைப் பரிமாணத்திற்கு இட்டுச் செல்கின்றன. இதனை,

"அருட்பெருஞ்சோதி அபயம்அபயம் பொருட்
பெருஞ்சோதிப் புணைதந் - திருட்பெருங்கார்
அல்லற்கடல் கடத்திஅக்கரை மேல்
ஆனந்தம் கொள்ளற்கபயம் கொடு" (4818)

என்கிறார் இராமலிங்கர். இங்கு அக்கரை என்பது காணா உலகினைக் குறிப்பது, மேலும் விளக்கமாக,

"தன்னையறிந்தின்பமுற வெண்ணிலாவே ஒரு
தந்திரம்நீ சொல்லவேண்டும் வெண்ணிலாவே
நாதமுடி மேலிருக்கும் வெண்ணிலாவே அங்கு
நானும்வர வேண்டுகின்றேன் வெண்ணிலாவே
இராப்பகலில்லா விடத்தே வெண்ணிலாவே ஐயர்
நாட்டம்கொண்டு வாட்டம்கொண்டேன் வெண்ணிலாவே"
(பொன்வடிவப் பேறு)

என்ற திரு அருட்பாப் பாடலால் உணர முடியும். தன்னையறிந்து நாதமுடி சென்று இராப் பகலில்லா இடத்தில், வரவு செலவற்ற தருணத்தில் இறை நாட்டத்தால் உயிர் செல்கின்றது. இது காணா உலகு நோக்கிச் செல்வதாகவே கொள்ள வேண்டியிருக்கின்றது. அங்கே இறைவனோடு இரண்டறக் கலப்பதும் நிகழலாம். அதனைப் பின்வரும் தொடர்கள் உறுதிப்படுத்துகின்றன!

"என்னைக் காட்டி என்னுள் இலங்கும் நின்னைக்காட்டியே
இறங்காநிலையில் ஏற்றி ஞான அமுதம் ஊட்டியே"
"என்தென்பதும் நினதென்பதும் இதுஎன் றுணர்தருணம்
இனம் ஒன்றது பிறிதன்றென இசைகின்றது பரமம்" (மெய்யருள் வியப்பு, சம்போசங்கர)

எனக் குறிப்பிட்டாலும் 'இசைகின்றது பரமம்' என்றதனால் இறைதான் இறங்கி வந்து இணைகின்றது என்ற கருத்து வெளிப்பாட்டையும் பெறமுடிகின்றது.

அந்நிலை யாரால் வழங்கப்பட்டது எதனால் பெறப்பட்டது எத்தகு நிலையினால் கிடைக்கப்பெற்றது என்பதனைப் பிறிதோர் இடத்தில் இராமலிங்கர் குறிப்பிடுகிறார்.

"உறங்குகின்றேன் உறங்கா தென் றும்
ஆட்டுவித்தால் ஆடுகின்றேன் அந்தோ
இச்சிறியேனால் ஆவதென்னே" (தற்சுதந்திரம் இன்மை)

என்ற வரிகள் முழுமையான சரணாகதியினாலேயே கலப்பு ஏற்பட்டது என்பதனையும், உணர வைக்கின்றன. அக்கலப்பினால் ஆளுமையும் பண்பும் மாறுபட்டு விரும்பும் இறையுடன் இணைந்து தொடர்புறவு ஏற்பட்டுவிடுகிறது. அதன் பின்னர்,

"என் உயிர் காத்தான் இன்பம் பலித்தது
பொன் உருத் தந்தான் சிவமாக்கிக்கொண்டான்" (ஊதூதுசங்கே)

என்ற உறுதிப்பாட்டினை ஆன்மா பெற்றுவிடுகின்றது. இன்னும்

**நிச்சயித்தல் :**

தம்பதியரை உறுதி செய்யும் நிகழ்வின் பெயரே நிச்சயித்தல். மணமகன் தனக்கு இணையான மணமகளைத் தேடி நிச்சயம் செய்துகொள்வதும் உண்டு. மணமகள் தனக்கு இணையானவனைக் கண்டு காதல் கொண்டு ஏங்கித் தவமிருந்து அவனையே கணவனாகப் பெறுவேன் என்று நிச்சயம் செய்து கொள்வதும் உண்டு. அவ்விரு நிச்சயித்தல் மரபுகளும் திருஅருட்பாவிலும் இடம்பெற்றுள்ளன.

**இறையாகிய மணமகன் உயிராகிய மணமகளைத் தேடி வந்து நிச்சயித்தல் :**

இறையோடு உயிர் கலக்கும் மணவாழ்வுக்குக் குறித்த பக்குவம் வருமுன்னரே இறைவன் தானே வந்து உயிரை மணந்து கொண்டதாக அருட்பா உணர்த்துகிறது.

"தெருவிடத்தே விளையாடித் திரிந்த என்னை

வலிந்தே சிவமாலை அணிந்தனை" (பிரியேன் என்றல்)

என்பதால் விளையாட்டு ஆயத்துள் தனை மறந்து நின்ற பேதை உயிரைத் தனக்குரியதாக இறைவன் நிச்சயித்துக் கொண்டான் என்பது புலனாகிறது.

விளையாட்டு ஆயம் என்பதால் உயிர் மணவாழ்வு பற்றிச் சிந்திக்கவில்லை. ஆட்டம் ஆர்ப்பாட்டம் என்ற முறையில் பொழுது கழிகிறது. பக்குவம் மனத்தளவில் ஏற்படவில்லை என்பதும் புலனாகிறது.

"என் பருவம் குறியாதே எனை மணந்த மணவாளா"
(அருள்விளக்க மாலை)

"நான்தான் தெருளாத பருவத்தே தெருட்டி

மணம் புரிந்த திருவாளர்" (அனுபவமாலை)

என்ற பாடலடிகளும் அக்கருத்துக்களை உறுதிசெய்கின்றன.

அவ்வாறாயின் உயிர் பக்குவம் பெற்று அக்காதலை ஏற்றுக் கொண்டது எப்போது? மருட்சி, தயக்கம் முதலிய பண்புகள் மலிந்த பருவத்தில் இணக்கம் என்பது உடனே ஏற்பட்டு விடுமா? என்றெல்லாம் வினாக்கள் எழுவது இயற்கை. அந்த வினாக்களுக்கு விடை தரும் வகையில் அருட்பாவில் உயிராம் ஆன்ம நங்கை இறைஅருளால் பக்குவ முதிர்ச்சி பெறுவதைப் பாடல்வழி அறியலாம்.

சிறப்பானதாகக் குறிப்பிட வேண்டுமெனில் பின்வரும் சான்றையும் வலுவாகக் கூறலாம்.

"இருட்பெரு மாயையை விண்டேனே
எல்லாம் செய் சித்தியைக் கொண்டேனே" (அம்பலத்தரசே)

என்று கூத்தாட வைக்கின்றது. அந்நிலையில் படைப்புச் சக்தி, பொருள் உருவாக்க ஆற்றல் என்பவைகள் பெறப்பட்டனவாகக் கொள்ளப்படுகின்றன.

அவ்வாறெல்லாம் கூறப்பட்ட போதிலும் பயணத்தில் முடிந்த நிலையைத் தெளிவாக உணர்த்தியுள்ளனரா என்பது ஆய்விற்குரியதே. ஏனெனில் மண்ணகத்து மனிதன், தன்னை விண்ணகத்து மனிதனாக எண்ணிக் கொள்கிறான். ஆதி-அனாதி ஆகிறது ஆன்மா-கடவுள் நிலையடைகிறது என்பவைகளை அனுபூதி எனும் அப்பாலை உயிர் அனுபவ உண்ாவு நிலையில் காண்கிறோம். எனினும், புறத்தேடலாகவும் அகமாற்றமாகவும் விழைவுகள் அமைவதால் அதனை ஆளுமையின் மடை மாற்றம் என்றே கூற முடியும்.

## திருமணம்

இறையியலில் அனுபூதி எனப்படும் அப்பாலை உணர்வு அனுபவங்களை அனைத்துச் சமயங்களும் எடுத்துக் கூறியுள்ளன. ஆன்மீக உலகு பற்றிய அச்சிந்தனை அனுபவங்களைக் குறியீடுகளாக்கியும் தந்து இருக்கின்றன. அவ் அனுபவத் தொடர்ச்சியில் பயணத்தை ஒட்டி இடம்பெறுவது 'திருமணம்' என்ற குறியீடாகும்.

அக்குறியீடு பண்பாட்டுப் பிரதிநிதித்துவம் பெற்றதாகவும் விளங்குகின்றது. அகநிலை பற்றிய ஆராய்ச்சியில் உண்மையன்பும் மெய்ம்மை நாட்டமும் இணைந்து இருக்கவேண்டும். ஆன்மாவின் உறைவிடத்தைக் காண விழையும் முதிர்ந்த வேட்கையினால் பெறப்படும் அனுபவங்களே குறியீட்டின் தோற்றத்திற்கு அடிப்படைக் களங்களை அமைத்துக் கொடுக்கின்றன.

மாலை மதியம், தென்றல், வீங்கிளவேனில் போன்ற அழகிய புறக் காட்சிகள் கண்ணிற்படும்போதே, அகவுணர்வுத் தேட்டத்திற்கும் அவை ஏதோ ஓர் வகையில் விடையாக அமைந்து விடலாம் அவ்வாறே பொருள் உலக அனுபவங்கள், சிந்தனைகள், காட்சிகள் யாவும் அருள் உலகக் குறியீடாக வடிவம் பெற வாய்ப்பேற்படுகிறது. அந்நிலையில் பொருள் உலகைச் சார்ந்த

திருமணம் எனும் பண்பாட்டு வடிவம் அருள் உலகுக்கும் சிறந்ததோர் குறியீடாக அமைந்து விடுவதைப் பல்வேறு சமயக் கூறுகளில் பார்க்கிறோம். ஆன்மீக வாழ்வின் சில ரகசியங்களை வெளிக்கொணர அக்குறியீடு மிகவும் பயன்படுகிறது.

உலகில் உள்ள எல்லாப் பண்பாட்டுக் குழுக்களிலும் திருமணம் எனும் அமைப்பு உள்ளது. அதனை வரவேற்று வரையறுத்து வலுப்படுத்திய பல்வேறு சமயங்களில் ஆணோ, பெண்ணோ திருமணத்திற்குப் பின்னரே முழுமையடைந்தவர்களாக எண்ணப் படுகின்றனர். திருமணம் என்பதே இறைவனிடமிருந்து பெறுகின்ற வரம். அதனை இரண்டு ஆன்மாவின் சங்கமம் என்றே சமயங்கள் உறுதி செய்கின்றன. அதனால் சொர்க்க மீட்சி என்றே திருமணத்தைக் குறிப்பிடுகின்றன. அன்பும், அழைப்பும் அரவணைப்பும் அதில் நிறைந்து கனியும்.

புனித பெர்னாடு என்பவர், "மனித ஆன்மா ஒரு மணப்பெண் போன்றது" என்கிறார்! (தே.ஆண்டியப்பன் - உயிரின் காதல் கருத்தும் காட்சியும்) ஆரம்ப காலங்களில் அக்கருத்துக்கு எதிர்ப்பு இருந்தது. பின்னர், "இறைவனுக்காகத் தாகமாயிருத்தல்" என்ற கருத்து வலுப்பெறத் தொடங்கியவுடன் மணமகனாக இறைவனும், மணமகளாக ஆன்மாவும் ஏற்றுக்கொள்ளப் படுவதைப் பார்க்கிறோம்.

உலகளாவிய நிலையில் கிறித்தவ சமயத்திலும், தென்னிந்திய சைவ வைணவ சமயங்களிலும் அக்கருத்து இன்னும் வலுப்பெற்று வாழ்கிறது.

இறைவனோடு ஒன்றுபடுதலையே திருமணம் உருவகித்துக் காட்டுகிறது எனக் கிறித்தவர் ஏற்றுக்கொண்டனர். தேவாலயங் களில் நடைபெறும் திருமணங்கள் இறைவனோடு நிகழும் திருமணங்களே என்று பலரும் நம்பினர். கத்தோலிக்கப் பெண்களில் சிலர் "கிறித்துவின் மணப்பெண்" (சமயக் கலைக் களஞ்சியம்) என்று அழைக்கப்பட்டனர். எனவே, சொர்க்கத்திற்கு இணையான ஆன்ம இன்பவுணர்வுகளை விளக்கத் திருமணம் என்ற குறியீடு பெரிதும் உதவிற்று.

"இறை ஆவியே மனித ஆவி" என்ற கோட்பாடு வலுப்பெற்றவுடன் அக்குறியீடும் ஆழமாக நிலைப்பெற்றுவிட்டது. "சித்துக்குச் சித்தன்றி சேர்விடம் உண்டோ" என்ற திருமந்திரக் கருத்தும் சங்கம நிலைக்குச் சான்றுரைக்க முடியும். எனவே, திருமணம் என்பது இரு ஆன்மாக்களின் சங்கமிப்பு எனப் பின்னர் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

ரிச்சர்டு புனித விக்டர் என்பவர், கிறித்தவத்தில் 'திருமணம்'

என்ற அருளியல் கனிந்த அப்பாலைநிலைக் குறியீட்டை நான்கு நிலைகளில் வகைப்படுத்திக் காட்டியுள்ளார். அவை:

" 1. நிச்சயித்தல் - (Betrothel)
2. திருமண நிகழ்வு - (Marriage)
3. திருப்பூட்டு - (Wed lock)
4. உறவு கனிந்தமை - (Froutfulness)" (Mysticism - Evilin Underhill. P-351)

என்பனவாகும். இனி அவற்றை விரிவாகக் காணலாம்.

**நிச்சயித்தல்**

இப்பகுதியில் ஆன்மா அருள் மண வாழ்க்கைக்காகத் தன்னைத் தயார் செய்தல், மணப்பருவம் அடைதல், இறையாகிய மணமகனைத் தேர்வு செய்தல், மணமகளை இறைவன் தேர்ந்து அருளல், திருமணப்பொழுது இதுதான் என்று உறுதிசெய்தல் ஆகியவை அடங்கும்.

**திருமணம் நிகழ்வு :**

இது ஐக்கிய உலகில் நுழைவதற்கு அங்கீகாரம் பெறுதலாகும். ஆன்மாவிற்கு இதில் பிடிவாதமும் வைராக்கியமும் கலந்த ஆசை ஏற்பட்டு விடுகிறது. அவனே அனைத்திற்கும் ஆதாரம் என்னும் எண்ணம் அழுத்தம் பெற்றுத் தீவிரமடையும் நேரமிது. தனக்குரியவரை அணுகா அன்புடன் அருகிருந்து நோக்குதல் போன்றவை நிகழும். ஆனால், உண்மையில் இங்கு உயிர் நெருங்கவில்லை, நெருக்கமாகி ஐக்கியமடைதல் என்பது அடுத்து வரும் நிகழ்வுகளில் அமையும்.

**திருப்பூட்டு :**

அருளறத்தில் நுழைதற்கு அங்கீகாரச் சின்னங்களை மணமகனிடம் இருந்து உயிர் என்னும் மணமகள் பெறுகின்றாள். மாலையிடுதல், கங்கணம் அணிதல், கையுறை வழங்கல் போன்ற செயல்கள் ஈண்டு நிகழும்.

**உறவு கனிந்த நிலை :**

இந்நிலை இறையும் உயிரும் இரண்டறக் கலந்து இன்பம் துய்க்கும் பேரின்பநிலை. இதில் உயிரானது ஈடு செய்தற்கரிய உன்னதநிலையை அடைந்துவிடுகிறது. அதன் பயனாக அருள் என்னும் குழந்தையும் பிறக்கின்றது.

**நிச்சயித்தல் :**

தம்பதியரை உறுதி செய்யும் நிகழ்வின் பெயரே நிச்சயித்தல். மணமகன் தனக்கு இணையான மணமகளைத் தேடி நிச்சயம் செய்துகொள்வதும் உண்டு. மணமகள் தனக்கு இணையானவனைக் கண்டு காதல் கொண்டு ஏங்கித் தவமிருந்து அவனையே கணவனாகப் பெறுவேன் என்று நிச்சயம் செய்து கொள்வதும் உண்டு. அவ்விரு நிச்சயித்தல் மரபுகளும் திருஅருட்பாவிலும் இடம்பெற்றுள்ளன.

**இறையாகிய மணமகன் உயிராகிய மணமகளைத் தேடி வந்து நிச்சயித்தல் :**

இறையோடு உயிர் கலக்கும் மணவாழ்வுக்குக் குறித்த பக்குவம் வருமுன்னரே இறைவன் தானே வந்து உயிரை மணந்து கொண்டதாக அருட்பா உணர்த்துகிறது.

*"தெருவிடத்தே விளையாடித் திரிந்த என்னை*
*வலிந்தே சிவமாலை அணிந்தனை" (பிரியேன் என்றல்)*

என்பதால் விளையாட்டு ஆயத்துள் தனை மறந்து நின்ற பேதை உயிரைத் தனக்குரியதாக இறைவன் நிச்சயித்துக் கொண்டான் என்பது புலனாகிறது.

விளையாட்டு ஆயம் என்பதால் உயிர் மணவாழ்வு பற்றிச் சிந்திக்கவில்லை. ஆட்டம் ஆர்ப்பாட்டம் என்ற முறையில் பொழுது கழிகிறது. பக்குவம் மனத்தளவில் ஏற்படவில்லை என்பதும் புலனாகிறது.

*"என் பருவம் குறியாதே எனை மணந்த மணவாளர்"*
*(அருள்விளக்க மாலை)*

*"நான்தான் தெருளாத பருவத்தே தெருட்டி*
*மணம் புரிந்த திருவாளர்" (அனுபவமாலை)*

என்ற பாடலடிகளும் அக்கருத்துக்களை உறுதிசெய்கின்றன.

அவ்வாறாயின் உயிர் பக்குவம் பெற்று அக்காதலை ஏற்றுக் கொண்டது எப்போது? மருட்சி, தயக்கம் முதலிய பண்புகள் மலிந்த பருவத்தில் இணக்கம் என்பது உடனே ஏற்பட்டு விடுமா? என்றெல்லாம் வினாக்கள் எழுவது இயற்கை. அந்த வினாக்களுக்கு விடை தரும் வகையில் அருட்பாவில் உயிராம் ஆன்ம நங்கை இறைஅருளால் பக்குவ முதிர்ச்சி பெறுவதைப் பாடல்வழி அறியலாம்.

"இடித்து இடித்து என் உள்முழுதும் தித்திக்கும்
வார்த்தை இனிதுரைத்து மணம்புரிந்த என்னுயிர் நாயகர்......"

இக்கூற்றின்வழி உயிரானது கொஞ்சம் கொஞ்சமாக இறைவனை நோக்கிச் சென்றதையும், இறையன்பு அதனைத் தன்பக்கமாக ஈர்த்து நின்றதையும் புரிந்துகொள்ள முடிகிறது.

"ஆ.... ஆசைகாட்டி என்னை மணம்
புரிந்தென் கைப்பிடித்த பதி....." (கண்டேன் கலந்தேன் கனிந்தேன் எனல்)

என்ற தொடரில் 'ஆசை காட்டி' என்ற பதம் இடம் பெற்றுள்ளது. முன்னைய பாடலில் தெருட்டிமணம் புரிந்த என வருகிறது. ஆசை காட்டுதல் தெருட்டுதல் என்ற சொற்றொடர்களால் பிறர் அறியா நிலையில் நிகழ்ந்து விட்ட திருமணமோ என ஐயம் தோன்றும். அதனைப் பின்வரும் வரிகள் விளக்குகின்றன.

"எல்லாரும் அறிய நண்ணி எனை
மணம் புரிந்தார் புண்ணியனார்" (அனுபவமாலை)

அவ்வாறு ஊர் அறிய உலகறியச் செய்து கொண்ட திருமணம் என்றதனால் உயிரும் பெருமை கொள்கிறது. கிடைத்தற்கரிய பேறு என எண்ணிப் பூரிக்கின்றது. மற்றையோரைக் காட்டிலும் தானே உயர்வடைந்ததாக நினைத்து மகிழ்கின்றது. அத்தகைய மதிப்புநிலை எதனால் வந்தது எனத் தனக்குள்ளாகவே வினவிய உயிர் விடையும் கண்டு தெளிவடைகிறது. தன்னை மணந்த இறையாகிய மணமகனின் பெருந்தன்மையால் அம்மதிப்பு நிலை ஏற்பட்டது என்று உறுதியாக நம்புகிறது. அவ்வுறுதிப்பாடே நிலைத்த பெருமையை எல்லா உயிரும் அடைதற்கு ஏற்ப அடித்தளத்தை அமைத்துக் கொடுக்கிறது. இறைவனது பெருந்தன்மை, பெருந்தண்மை இரண்டும் அளவிடற்கரியவை. அந்நிலையில் யாரும் அவனுக்கு நிகரில்லை. அவன் தனித்துவமானவன்.

"என் கணவர் பெருந்தன்மை ஆறந்த நிலைக்கே
எட்டி நின்று பார்ப்பவர்க்கும் எட்டாதே"

என்பார். அதனால் தன்னை மாலையிட்டவருக்கு இணையாக பூவுலகில் யாரும் இல்லை என்ற பெருமிதத் தொனியும் புலனாகிறது.

"எவர்க்கும் பெரியவர் பொன்னம்பலத்தே
நடம் இட்டார் எனக்கு மாலை இட்டார்" (இவர்க்கும் எனக்கும்)

என்ற வரிகளில் மணமகனது உயர்மதிப்பு மேலும் வளர்ந்தோங்குகிறது. சத்சித் என்ற நிலைக்கும் அப்பால் ஆனந்த நிலையில் விளங்குவதால் நடமிட்டார் என்றுரைத்தார். பொருள் உலக வாழ்வில் பெறுதற்கரிய மணமகனைத்தான் பெற்றுவிட்டதாக அந்த உயிர் நிறைவடைகிறது. அருள் உலக நாயகனாகிய இறைவனே தனக்கு மணமகனாக வந்து, அருள் தந்து, வாழ்வளித்து உயர்வடையச் செய்தான் என்று களிப்படைகிறது. அதனால் உயிர் அடைகின்ற உணர்வின் நிறைவு உரைக்க ஒண்ணாதது.

**உயிரென்னும் மணமகள் காத்திருந்து, கண்டு கொண்ட இறைவனை மணமகனாகத் தன்னுள் நிச்சயித்தல் :**

*இறை நிச்சயித்த முதற்கூறில் மணமகனின் செயல்நிலைகள் வெளிப்பட்டு நின்றன. மணமகளுக்கு இறையே தம்மைத் தேடி வந்தான் என்ற பெருமித உணர்வு மேலோங்கி நின்றது. ஆனால், இப்பகுதியில் தேடலும் ஏக்கமும் எதிர்பார்ப்பும் நிறைந்து விளங்கும் பக்குவ நிலையைப் பார்க்க முடியும். முன் பகுதியில் வலிந்து கொண்ட உறவாயினும், பெருமிதம் மிகுதி. இங்கோ ஏங்கும் நிலை, பெருமிதம் தவிர்த்த ஏனைய உணர்வுகள் வெடிக்கின்றன. வெளிப்பட்டுத் தோன்றுகின்றன. மணமகனைத் தேர்வு செய்வதில் உயிர் அடையும் ஏக்கங்கள், சோர்வுகள், சோகங்கள், பிறர் பழிக்கும் இரக்க நிலை, துன்பம் போன்ற உணர்வுகளின் துயரச் சுழற்சிகள் மிகுதியும் காணப்படுகின்றன. அவையாவும் ஆசையின் அலைக்கழிப்பு. அதனால்,*

*"…. சேர உம்மேல் ஆசை கொண்டேன்" (அம்பலவாணர் அணைய வருகை)*

*என்பார் இராமலிங்கர்.*

*உயிர் இறைக்காக ஏங்கிக் காத்திருந்தமை புலனாகிறது. அன்பு ஆவேசம் கொள்கிறது.*

*ஒன்றைத் கண்டதும் பெற விரும்பும் ஆசை போலன்று அவ்வாசை. உரிய பொருள் இதுதான் என்று உணர்ந்துணர்ந்து, செப்பரிய அனுபவங்களால் நெகிழ்ந்து, உயிர் வாழ உற்றதுணை அதுவே என்று உளம் விரும்பும் ஆசையிது. எனவே, தன் சமூகம் விடுத்தாயினும் மணமகனாகிய உன் சமூகந்தேடி வருகின்றேன். என்னை ஏற்றுக்கொள் என்று அரற்றுகிறது ஆசை மனம்.*

*"உத்தமம் ஆகும் நுந்திருச் சமுகத்தென் உடல்*
*பொருள் ஆவியை உவப்புடன் அளித்தேன்*
*இத்தகைய உலகிடை அவைக்கும் என்தனக்கும்*

*ஏதுஞ் சுதந்திரம் இல்லை இங்கினி நீர்*

*எத்தகை ஆயினும் செய்து கொள்கிற்பீர்" (மெய் இன்பப்பேறு)*

இதில் ஆசை, அன்பின் ஆவேசம் இரண்டும் புலப்படுவதோடு வேறோர் பொருள் நிலையும் புலனாகிறது. உடல் பொருள் ஆவி அனைத்தையும் உனக்கே தந்து உன்னிடம் தஞ்சமடைகின்றேன் என்பதால் அன்பு அருள் ஆகிறது. (Love becomes compassion) அது கொடுக்க விரும்பும். இங்கு தன்னையே கொடுக்கத் தயாராகிவிடுகிறது.

மேற்குறித்த வாசகங்கள் சரணாகதி வாசகங்கள் என்பர். ஆனால் அனைத்தும் நிர்பந்தத்தில் பிறக்க வில்லை. எல்லாம் மறந்து துறந்து இறை பந்தத்திற்காக ஏங்கும் ஏக்கம் அது. நம்மை மறந்தாலும் நாம் மறக்கமாட்டோம் என்ற தியாக நிலை.

அன்பு ஈன்ற ஆர்வநிலை. தான் சார்ந்த சமூகம், இவ்வுலகு எதனைப் பற்றியும் கவலை கொள்ளவில்லை. இன்னுங் கூறப்புகின் எந்தனக்கு என்று தனியான சிந்தனை இல்லை. சுதந்திரம் கூட இல்லை. வரும் நாட்களில் உன் விருப்பின் வழியில் உனக்குக் கட்டுப்பட்டு உனதடிமையாக வாழ்ந்திடவும் சம்மதம். ஆனால் என்னை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று மணமகனை நோக்கி இறைஞ்சி நிற்றல் தெளிவாகிறது.

*"நாளை விட்டுரைக்கின்ற வாறிது கண்டீர்*

*நாயகரே உமை நான் விடமாட்டேன்*

*கோணை என்உடல் பொருள்ஆவியும் நுமக்கே*

*கொடுத்தனன் இனி என்மேல் குறைசொல்ல வேண்டாம்"*

எனும்போது முற்குறித்த கருத்துக்கள் வலுப்பெற்று நிற்கின்றன. நாயகன் என்று உரிமை காட்டி உடல் பொருள் ஆவியைக் கொடுத்தாலும் தன்மேல் தவறில்லை: அது உயிரின் வேட்கை என்று நியாயப்படுத்திக் கொள்வதும் புலனாகிறது.

*"ஆசை கொண்டேன் ஆட, ஆசை வெட்கம் அறியாததால், ஓசை கொண்ட தெங்குமிங்கே, உம்ஆணை உம்மை விடேன், காசு பணத்தாசை யிலேன் ஆடவாரீர்"*

*"கைபிடித்தாற் போதும் என்னோடாட வாரீர்" (அம்பலவாணர் ஆடவருகை)*

இங்கு தோன்றும் ஆசை வெட்கம் அறியாத ஆசை என்று தள்ளிவிட முடியாது. இது உயிரின் வேட்கை, உரிமை பண்டுதொட்டு வந்த உறவு தந்த உணர்வு உயிரின் காதலது

இச்சுகம் அனைத்தும் பொய்ச் சுகம் என்று புறக்கணித்து புறப்படும் வைராக்கியம் அது விடுதலை ஞானம்.

அன்பை விட அருளெனும் பேராசை மனதிற்கு ஏற்பட்டுவிடுகிறது. அடுத்து நின்று ஆட்கொள்ள வேண்டுகிறது: என்ன சொல்லி ஏதுரைப்பினும் அவன் நெஞ்சம் இப்பக்கம் திரும்புவதாகத் தெரியவில்லை.

"பதிவெறுத்தேன் நிதி வெறுத்தேன் பற்றனைத்தும்

....................................

பற்பல கால் கூறி இளைக்கின்றேன்"

"கட்டவிழ்ந்த கமலம் எனக் கருத்தவிழ்ந்து நினையே

கருதுகின்றேன் வேறொன்றும் கருதுகிலேன்" (சிவதரிசனம்)

என்பார். அருள் பேராசை, மயமாகி உலக ஆசையை ஒதுக்கி வைக்கிறது. தன்னை மறந்த அருள்நிலைக்கு அசை கொள்கிறது துறவு மனம். அவனுக்காக அனைத்தும் துறக்கும் மனத்தால், அவனை மட்டும் துறக்க முடியவில்லை. காரணம், அது அனாதி காலம் தொட்டு வந்த உறவு. பதி-பசுவின் பிணைப்பு. உம்மை நினைத்தேங்கி வருந்துவது ஏன்? நமது பந்தம் இந்த ஜென்மத்தில் மட்டும் வந்ததன்று. காலங் காலமாகத் தொடர்ந்து வருவது. யுகங்கள் தோறும் நினைந்து வளர்வது. பிறவிகள்தோறும் பிணைந்து நிற்பது. எனவேதான்,

"விட்டகுறை தொட்டகுறை இரண்டும் நிறைந்தனன்

நீவிரைந்து வந்தே அருட்சோதி புரிந்தருளும்

தருணம் தொட்டது நான் துணிந்துரைத்தேன்" (சிவதரிசனம்)

என்பார். பலவாறாகப் புலம்பித் தவித்த பின்னரே இறையாகிய மணமகன் இரங்கி, இறங்கி வருகிறான். மணமகளாகிய உயிர் அரற்றிய வார்த்தைகளில் அன்பின் உண்மை நிலையை உணர்ந்து மணப்பொழுதினை நிச்சயம் செய்து அருள்மணம் நிகழ அனுமதி அளிக்கின்றான்.

"இரண்டரைக் கடிகைப் பொழுது

மெய்யருள் அனங்கனை நன்மணக் கோலம்

பொன்புடை விளங்கப் புனைந்து கொள்" (பேறடைவு)

என்று மணப்பொழுது குறித்துத் திருமணத்திற்குக் கோலம் புனைய ஆணையிடலும் உடன்பட்ட நிலையை உணர்த்தும். மேலும்,

"ஒத்து வந்ததெனைத்தான் கலந்துகொண் டெனக்குள்
ஓங்கிய ஒருமையே என்கோ" (ஆண்டருளிய அருமைவியத்தல்)

எனும்போது இறையின் சம்மதத்தை இடையறாத முயற்சியால் உயிர் அடைந்தது என்பதை உணர முடிகிறது. இறைவன் ஒத்து வந்தான் அங்ஙனம் உடன்பட்டு வருவதற்குக் காரணம் பற்றுவிட்டு அவனைப் பற்றி நின்றதே ஆகும்.

இறையின் உயர்வு கருதி ஒதுங்கி விடலாம் என்று மணமகளாகிய உயிர் நினைக்கவில்லை. உறவு கருதி ஓயாமல் அலைந்தது. மனமிரங்கித் தானே வந்து மணம் புரிந்தான். கலந்து கொண்ட ஒருமையில் ஒருவனையே கண்டாள். அந்த ஓங்கிய ஒருமையில் அவள் அடங்கினாள் என்ற கருத்தையும் பெற முடிகின்றது.

மற்றோர் பாடலில் சோர்வடைந்து போய் இனி அவனைப் பெறுவது எவ்வாறு, நம்மளவில் கிடைப்பதற்கு ஞாயமில்லை என்று நினைத்தேங்கி இருந்தபோது வலிய வந்து ஆட்கொண்டான் என்றுரைப்பார். செயல் ஒடுங்கினாலும் நினைவு வாழினும் உறவு கருதி வருவதுண்மை என்று திடசித்தம் கொண்டிருந்தாள்.

"நன்பாட்டு மறைகளுக்கும் மால்அயற்கும் கிடையார்
நம் அளவில் கிடைப்பாரோ என்று நினைத்தேங்கி
என்பாட்டுக்கு இருந்தேனை வலிந்து கலந்தணைந்தே
இன்பமுறத் தனிமாலை இட்ட நடத்திறைவர்" (தலைவி கூறல்)

என்ற வரிகளால் அக்கருத்து மேலும் வலுப்பெறுகின்றது.

இவ்வாறாகத் திருமணம் என்ற குறியீட்டின் முதல் நிலையான நிச்சயித்தல் என்ற கூறு இரு நிலைகளில் விளங்குகின்றது.

இனி அடுத்து வருவது இரண்டாவது நிகழ்வாகிய திருமண நிகழ்வாகும்.

## திருமண நிகழ்வு :

திருமணம் என்பது மதிப்புடைய ஒரு நிகழ்ச்சி. அதுவே பெரு மதிப்புடையதாகவும், மதிப்பிலியாகவும் மாறுவது மணமக்களின் தரத்தைப் பொறுத்தது.

ஆண் பெண் இணைந்து வாழும் வாழ்க்கைக்கு அங்கீகாரம் அளிக்கும் நிகழ்வு என்றே திருமணத்தைக் குறிக்கலாம். பொருள் உலக வாழ்வில் நிகழும் திருமணங்கள் சில போது பொருந்தா மணங்களாகிவிடுவதும் உண்டு. அருள் உலக அனுபவ அப்பாலை

உணர்வில் நிகழும் திருமணங்களுக்கு அத்தகைய வாய்ப்பே இல்லை. ஏனெனில், அங்கு இறையே மணமகன், இறையோடு இரண்டறக் கலத்தலை எண்ணி ஏங்கும் உயிரே மணமகள். அவ்விருவரது ஈர்ப்புடன் கூடிய மண நிகழ்வு பொருந்தாமற் போவதற்கு சாத்தியமே இல்லை. எனவே, உறுதிப்பாட்டுடன் கூடிய உறவுக் கலப்பாகவே அது அமைந்துவிடுகிறது. அதனால்,

"எனை மணம்புரிந்தென் கைபிடித்த பதியை
கண்டுகொண்டேன் கனிந்து கொண்டேன் கலந்துகொண்டேன்"
(கண்டேன் கனிந்தேன் கலந்தேன் எனல்)

என்ற களிப்புடன் இராமலிங்கர் பாடியுள்ளார்.

விருப்புணர்வின் உச்சத்தில் இருந்தபோது மணம் நிகழ்ந்தது. அதனை,

"மோகம் வந்தடுத்த போது கைபிடித்த முக நகைக் கணவனே"
(இறைவன் ஏத்தும் இன்பம்)

என்ற தொடரால் அறியலாம்.

புனித தெரஸா அவிலா என்பவர் இந்நிலை குறித்து விளக்கும்போது "இரண்டு மெழுகுவர்த்திகளின் ஒளிப்பிழம்புகள் ஒன்றுடன் ஒன்று இணைந்து-ஒரே ஒளியாகிப் பின்னர் இரண்டும் பகுதியாகிவிடும் செயல் போன்றது திருமணம்" என்கிறார். ஒளிப்பிழம்பின் இணைப்பும் பிரிவுக்கு உட்படும். ஆனால் இராமலிங்கர் இணைப்பை பால்-இன்சுவை, என்ற முறையில் எடுத்துரைப்பார். மலர்-மணம், மணி-ஒளி என்ற உறவு நிலைகளிலும் இணைத்துக் காட்டுவார்.

"பாலும் இன்சுவையும் போன்றெனது ஆவி பற்றினன்" (நற்றாய் செவிலிக்குக் கூறல்)

என்ற வரியில் தூய்மை, இனிமை என இரண்டையும் ஒருசேரக் காண்கிறோம். தூய்மையற்ற இன்பம் மதிப்புடையதாகாது. தூய்மை, இனிமை எனுமிரு கூறுகளையும் பால் பெற்றதுபோல் பிரித்தற்கரிய உறவை அவன் ஆவி பற்றிய போது அறிந்தேன் என இழைத்து இணைத்துக் காட்டியுள்ளார்.

## திருப்பூட்டு :

திருமண நிகழ்ச்சியில் திருமணம் நிகழ்ந்தேறியது என்பதற்கு அடையாளமாக மரபுவழிச் சின்னங்களே அணியப்பெறும். அவை பண்பாட்டிற்கு ஏற்ப மாறுபட வாய்ப்பு உள்ளது. கிறித்தவப் பண்பாட்டின்படி மணமகனும் மணமகளும் கைகளில் மோதிரம்

மாற்றிக் கொள்வர். பெந்தேகொஸ்தே எனப்படும் கிறித்தவப் பிரிவினர் தங்களுடைய வேதாகமத்தை மாற்றிக் கொள்கின்றனர். இந்து சமயத்திலும், தமிழ்ச் சமுதாயத்திலும் தாலி அணிதல், மாலை மாற்றல், நெற்றி வகிட்டில் திலகமிடல் போன்ற நிகழ்வுகள் திருமணத்திற்கான மரபுவழி அடையாளங்களாகத் திகழ்ந்து வருகின்றன. அதனுள் மாலையணிதல் என்பதனை மட்டுமே இராமலிங்கர் திருப்பூட்டாகக் காட்டியுள்ளார்.

உரைநடைப் பகுதியில் சமுதாயச் சீர்திருத்தக் கருத்தாக, "கணவன் மறைந்த பின்னர் மனைவியிடம் தாலி வாங்குதல் கூடாது" என்று தமிழ்ச் சமுதாயம் துணிந்து ஏற்கவியலாத கோரிக்கையை முன் வைக்கின்றார். இன்றளவும் சன்மார்க்க வழி வரும் குடும்பங்கள் சிலவற்றில் அவர் கருத்து ஏற்றுக் கொள்ளப்பட்டு, பின்பற்றப்படுவதையும் கள ஆய்வில் உணரமுடிகிறது. (சென்னை சிந்தாதிரிப்பேட்டையில் திருமதி. வேதகிரிமுதலியார் தனது கணவரது மறைவிற்குப் பின்னரும் தாலியுடனேயே வாழ்ந்து வந்தார். 1991-ல் திருமதி. சரஸ்வதி அம்மாள் இறந்த போது அவரைத் தாலியுடனேயே நல்லடக்கம் செய்தனர்.) அவ்வாறு நடைமுறை வாழ்வில் தாலியணிதலை நியாயப்படுத்திய இராமலிங்கர் அருள் அனுபவக் குறியீட்டு நிலைத் திருமணத்தில் அதனைத் தவிர்த்திருக்கிறார் என்பது குறிப்பிடத்தக்கது.

**மாலையணிதல் :**

மோப்பக் குழைந்த மலர்களையும், முதல் நாள் மலர்களையும் கொண்டு மணமாலை தயாரிக்க மாட்டார்கள். உலகியல் மணங்களுக்கே அவ்வாறெனில் இறைவன் அணிவிக்கும் மணமாலை புத்தம் புதியதாக இருக்க வேண்டும்.

**புதுமலர்ப் பூங்கண்ணி :**

இறைவன் அணிவித்த மணமாலை குறித்து இராமலிங்கர்,

"கடிப்புது மலர்ப்பூங்கண்ணி வேய்ந்தெனைத்தான்

கடிமணம் புரிந்தனன்" (நற்றாய் செவிலிக்குக் கூறல்) என்று குறிப்பிடுகிறார்.

**மல்லிகை மாலை :**

மற்றோர் இடத்தில் தனக்கு மல்லிகை மாலை அணிவிக்கப் பெற்றதாகக் குறிப்பிடுகிறார்.

"சோதியாதென்னை மல்லிகைமாலை அணிந்துளே
கலந்து மண்ணிய பதியை என் வாழ்வை
எல்லியும் இரவும் என்னை விட்டகலா
இறைவனைக் கண்டு கொண்டேனே" (இறைதிருக்காட்சி)

மாலையிடுவானோ என்ற ஐயத்தை நீக்கி மாலையிட்டு அருள்மலர் மயக்கத்தில் ஆழ்த்தியதை வெளிப்படுத்தியுள்ளார்.

### செங்குவளை மல்லிகைப் பூமாலை :

தனிமலர் மாலை மட்டும் இல்லை. பிற மலர்மாலைகளும் துணை மாலையாகச் சூட்டப்பட்டதாகக் குறிப்பிடுகிறார்.

"கங்குலிலே வருந்திய என் வருத்தமெல்லாம் தவிர்த்தே
காலையிலே என்உளத்தே கிடைத்த பெருங்களிப்பே
செங்குவளை மாலையோடு மல்லிகைப் பூமாலை
சேர்ந்தணிந் தென்தனை மணந்த தெய்வமணவாளா"
(அருள்விளக்க மாலை)

மணமாலை இட்டவன் காலைக்கதிராகத் தோன்றி, இரவின் இடிபாடுகள், வருத்தங்களையெல்லாம் நீக்கித் தன்னை மணந்தான். அவன் தெய்வ மணவாளன் என்பதைச் சுட்டுகிறார்.

### பொன் புனைமாலை :

மலர்மாலையேயாயினும் வதுவையின் பின்னர் பொன்மாலை புனைவதும் உண்டு.

"என்னுயிர் நாதனே என்னைப் பொன்புனை
மாலை புனைந்த ஓர்பதியே" (பொது நடம்புரிகின்ற பொருள்)

என்பதால் மாலையிட்ட மணவாளன் தனக்குப் பதியாகவும், நாதனாகவும் விளங்கி மணமாலையோடு பொன்புனை மாலையையும் தந்தான் என்று எடுத்துக் கூறியுள்ளார்.

### சிறப்பு மாலைகள் :

மல்லிகை செங்குவளை போன்ற மலர் மாலைகளோடு சிறப்பு மாலைகளும் அணிவிக்கப்பட்டன என்ற செய்தியும் கிடைக்கிறது.

"இன்பமுறத் தனிமாலை இட்ட நடத்திறைவர்" (தலைவி கூறல்)
"என் தனக்குத் திருமாலை கொடுத்தார்" (அனுபவமாலை)
"தெருவிடத்தே விளையாடித் திரிந்த எனை
வலிந்தே சிவமாலை அணிந்தனை" (பிரியேன் என்றல்)

என்பார். இங்குக் குறிப்பிடப்பட்டுள்ள தனிமாலை, திருமாலை, சிவமாலை என்பன சிறப்பு மாலைகளாக இராமலிங்கரால் காட்டப்பட்டுள்ளன. பிறருக்குக் கிடைக்காத பேறுகள் தனக்குக் கிடைக்கப் பெற்றன என்பதைக் குறியீட்டு நிலைகளில் விளக்குவனவாக அவை உள்ளன.

### எதிர்மாலையிடல் :

மணமகன் மாலையிட்டதன் பின்னர் மணமகளும் எதிர்மாலையிடல் தமிழ்ச் சமூக மரபாகும். அதனையும் தவறாது எடுத்துக்காட்டியிருக்கிறார் இராமலிங்கர். இறைவன் தனக்கு மாலையிட்ட பின்னர் தானும் மணமாலையிட்டதை பின்வருமாறு வெளிப்படுத்துகிறார்.

"வஞ்சமிலாத் தலைவருக்கே மாலையிட்டேன்
எல்லா வாழ்வும் என்றன் வாழ்வென்றேன்.....
எஞ்சலுறேன் மற்றவர்போல் இறந்து பிறந்துழலேன்" (தலைவி வருந்தல்)

என்று நம்பிக்கையோடு பேசுகிறார்.

### மாலையணிந்தவர் தன்மை :

இறைவன் தனக்கு மாலையணிய, எதிர்மாலை தானணிய நிறைவு பெற்ற இராமலிங்கர் மாலையணிந்தவரின் தன்மையெல்லாம் நினைத்துப் பூரிப்படைகிறார்.

"மேலை ஏகாந்த வெளியிலே நடஞ்செய் மெய்யனே ஐயனே எனக்கு மாலையே அணிந்த மகிழ்நனே எல்லாம் வல்லனே நல்லனே அருட்செங் கோலையே நடத்தும் இறைவனே' (அனுபோக நிலையம்) என்று சிறப்பித்துக் கூறியுள்ளார்.

### பரிசுப்பொருள் (கையுறை) :

களவுக் காலத்தில் தலைமகன் கையுறை தருதல் என்பது தமிழ் அகமரபு. தமிழ் மரபுப்படியே இராமலிங்கரும் களவு-கற்பு என்ற இரு நிலைகளில் தம் உறவை எடுத்துரைப்பார்.

"கண்கலந்த கணவர் எனைக்கைகலந்த தருணம்" (அனுபவமாலை)

என்றவிடத்துக் கண்கலந்த களவு நிலையும் கைகலந்த கற்புநிலையும் புலனாகின்ற அவ்விரு நிலைகளை "கண்ட்ட பாவம் (கற்பு), மதுர பாவம் (களவு)" (The Religion and Philosophy of Thevaram) என்பவற்றோடு துரை ரங்கசாமி அவர்கள் இணைத்துக் காட்டுகிறார்.

"மணந்த செங்குவளை மலர் எனக்களித்த வள்ளலைக் கண்டு கொண்டேனே" (இறை திருக்காட்சி)

என்பதால் களவின்போது பெற்ற கையுறை செங்குவளை மலர் தந்த வள்ளலே கற்பு நிலையிலும் வாழ்வளித்த வள்ளலாகவும் விளங்குகிறான்.

கற்பு நிலையில் தலைவனின் பரிசுப்பொருட்கள் கங்கணம், ஆழி முதலியவையாகும்.

"கை அகத்தே ஒரு பசும்பொற் கங்கணமும் புனைந்தார்"

"…. ஏழுலகும் பதிக்கக்

கருத்தலர்ந்து வாழிய என்றாழி அளித்தெனது

கையினிற் பொற் கங்கணமும் கட்டினர்" (அநுபவமாலை)

என்று குறிப்பிட்டுள்ளார்.

**சடங்கு முறை நிகழ்வுகள் :**

சடங்கு முறை நிகழ்வுகள் மரபு நெறியில் செய்பவர் பெறுபவர் என்ற இரு நிலையிலும் புனிதமுடன் அமையும். வைணவ மரபில் ஆண்டாளின் அருள் மணச்சடங்கு முறைகள் சில புலப்படுகின்றன.

தோரணம் நாட்டல், பந்தலிடல், மணமாலை சூட்டல், காப்புக்கட்டல், கைத்தலம் பற்றல், தீவலம் வரல், அம்மி மிதித்தல், பொரிமுகந்தட்டல், மஞ்சனமாட்டல் முதலியவை முக்கியமானவை யாகும். அனைத்தையும் ஆண்டாள் கனவுக் காட்சியாகவே படைத்துக் காட்டுகிறார்.

"தோரணம் நாட்டக் கனாக் கண்டேன்…"

"…. பரிசுடைப் பந்தற்கீழ்… புகுதக் கனாக் கண்டேன்"

"…. மந்திரக் கோடியுடுத்தி மணமாலை

அந்தரி சூட்டக் கனாக் கண்டேன்"

"காப்பு நான் கட்டக் கனாக்கண்டேன்"

"கைத்தலம் பற்றக் கனாக் கண்டேன்"

"……… ………. ……….. ……… கைப்பற்றி தீவலம் செய்யக் கனாக் கண்டேன்"

"……… ………. நாராயணன் நம்பி

செம்மையுடைய திருக்கையால் தாள் பள்ளி

அம்மி மிதிக்கக் கனாக் கண்டேன்"

"......... .......... அச்சுதன் கைம்மேலென் கைவைத்து
பொரிமுகந் தட்டக் கனாக் கண்டேன்"

"மஞ்சன மாட்டக் கனாக் கண்டேன்" (நாலாயிர திவ்யப் பிரபந்தம் 556-565)

என வரும் நாச்சியார் திருமொழி சடங்கு முறை நிகழ்வுகளைக் காட்டுகின்றன.

இராமலிங்கரும் திருமணத்திற்குத் தயாரான நிலையைக் காட்டி உள்ளார். ஆனால் ஆண்டாளைப் போல படிப்படியாகச் சடங்கு முறைகளை விரிவாகக் கூறவில்லை.

"துன்புடையவைகள் முழுவதும் தவிர்ந்தே தூய்மை சேர் நன்மணக்கோலம் பொன்புடைய விளங்கப் புனைந்து"

என்றும்,

"எழில் மணக்கோலம் நிரைந்துறப் புனைதி" (பேறடைவு)

என்றும் குறிப்பிட்டுள்ளார். இங்கு நன்மணக்கோலம், மங்கலக்கோலம், எழில் மணக்கோலம் என்ற சொற்கள் இடம்பெற்றுள்ளன. ஆனால் விளக்கம் இடம்பெறவில்லை.

அருள் அனுபவத்தை, பேரின்ப நிலையை அடைவதில் ஆண் பெண் என்ற வேறுபாடு அருள்மணக் குறியீட்டில் இல்லை. இருந்தாலும் ஆண்டாளிடம் ஆரம்பத்திலிருந்தே மணவாளனாகவே கருதும் போக்கு இருந்தது. இராமலிங்கர் தொடக்கத்தில் தந்தை மகன் உறவுநிலையில் மகிழ்ந்து, பின்னரே மணவாளனாகக் காணும் அருள்மணக் குறியீட்டு நிலைக்கு வருகிறார். தந்தை-மகன் உறவு உணர்வாய் தனக்குத் தந்தையே மணமகனைத் தேடித் தந்ததாகக் கூறிய இடமும் உண்டு.

"எம்பொருள் எனும் என்அன்புடைய மகனே
இரண்டரைக் கடிகையில் உனக்கே
அம்புவி வானம் அறிய மெய்அருளாம்
அனங்கனை மணம் புரிவித்
தும்பரும் வியப்ப உயர்நிலை தருதும்
உண்மை ஈதாதலால் உலகில்
வெம்புறு துயர் தீர்ந்தணந்துகொள் என்றார்
மெய்ப் பொது நடத் திரையவரே" (பேறடைவு)

மெய்யருளாகிய அனங்கனையே மணமகனாக இறைவன் தனக்கு வரித்துக் கொடுத்தான் என்பது மணநிலையை எதிர்பார்க்கும்

மனநிலையின் ஆரம்பநிலை. இங்கு உறவு நிலையில் எழும் தடுமாற்றத்தைக் காண முடிகிறது. மெய் அருவாம் அனங்கனும் அவனாகவே இருக்க முடியும். உறவுநிலை குறித்த இயலில் இக்கருத்து தனியே தெளிவாக விவாதிக்கப்பட்டது.

**உறவு கனிந்த நிலை :**

இதில் கலந்து வாழும் கற்புநிலை தொடங்கி விடுகிறது. சொல்லுதற்கரிய சுகானுபவத்தைப் பெற்றனர் என்பதை விளக்குகிறார்.

*"... ... ..... ...... என்னை*
*அகம்புணர்ந்தார் புறம்புணர்ந்தார் புறப்புணர்ச்சித்தருணம்*
*தூய ஒளி பெற்றழியாது ஓங்கு வடிவானேன்*
*சுகமயமாம் அகப்புணர்ச்சி சொல்லுவது எப்படியோ"*
*(அனுபவமாலை)*

என்பர். இங்கு அகப்புறப் புணர்ச்சி நிலைகள் பேசப்படுகின்றன. கலவியின்போது நிகழ்ந்த ஒளியுடல் மாற்றங்களைப் புறப்புணர்ச்சி என்றும் சொல்வதற்கரிய சுகமயமான உளநிறைவை அகப்புணர்ச்சி என்றும் குறிப்பிடுகிறார் இராமலிங்கர். மற்றோர் பாட்டிலும் இருவகை நிலைகளை எடுத்துரைக்கிறார்:

*"நான் பசித்தபோதெல்லாம் தான்பசித்தார் ஆகி*
*நல்லதிரு அமுதளித்தே அல்லல்பசி தவிர்த்தே*
*ஊன் பதித்த என்னுடைய உளத்தே தம்முடைய*
*உபயபதம் பதித்தருளி அபயம் எனக்களித்தார்*
*வான் பதிக்கும் கிடைப்பரியார் சிற்சபையில் நடிக்கும்*
*மணவாளர் எனைப்புணர்ந்த புறப்புணர்ச்சி தருணம்*
*தான்பதித்த பொன்வடிவம் தனைஅடைந்து களித்தேன்.*
*சாற்றும் அகப்புணர்ச்சியின் ஆம் ஏற்றம் உரைப்பதுவே"*
*(அனுபவமாலை)*

முதற்பாடலில் புறப்புணர்ச்சியினால் உடலானது தூய ஒளியினைப் பெற்றது என்றார். அடுத்த பாடலில் பொன் வடிவம் பெற்றதாகக் குறிப்பிடுகிறார்.

உறவுக் கலப்பு நிலைகளின் செயல்பாடுகளை எளிதின் விளக்குதற் பொருட்டுத் தொல்காப்பியரின் உரிப்பொருள் வெளியீட்டு முறை பயன்படுத்தப்படுகிறது. தொல்காப்பியர் ஐந்திணைகளுக்கும் உரிய உரிப்பொருளாகப் பின்வருவனவற்றைப் பகுத்துக் காட்டுகிறார்.

"புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்

ஊடல் இவற்றின் நிமித்தம் என்றிவை

தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே" (தொல்காப்பியம், அகத்திணையியல். ப. பபசா)

என்று தலைவன் தலைவி இருவரது அகவயப்பட்ட இயக்க நிலைகளை ஐவகைப்படுத்துகிறார் தொல்காப்பியர்.

**புணர்தல் :**

புணர்தல் என்பது கூட்டம், தலைவன் தலைவி இருவரும் அன்புவழிப்பட்டுக் கூடிக் கலத்தல். அதனை உள்ளத்திற் கலத்தல் பின் உயிரிற் கலத்தல் என்ற உயர் வளர்ச்சி நிலைகளில் காட்டுகிறார் இராமலிங்கர்.

"மேவிஎன் உள்ளகத்திலிருந்து மேலும் என்

ஆவியிற் கலந்திவன் அவன் என்றோதும்ஓர்

பூவியற் போதமும் போக்கி ஒன்றதாய்த்

தேவியிற் புரிந்தனன் சிதம்பர நேசனே" (தனித்திரு அலங்கல்)

என்பார்.

"என் உடலும் என் பொருளும் என் உயிருந்தான் கொண்டான் தன் உடலும் தன்பொருளும் தன் உயிரும் என்னிடத்தே தந்தான்" (சுத்த சிவநிலை)

என்றுகொடுக்கல் வாங்கலில் நிகழ்ந்த பரிமாற்றம், தற்போதம் மறந்து சிவபோதம் பிறத்தலே எனக் காட்டுகின்றார்.

"ஓங்கார அணைமீது நான் இருந்த தருணம்.....

அவர் நானோ நான் அவரோ அறிந்திலன்முன்

................. இரண்டுருவும் ஒன்றானோம்" (அனுபோக நிலையம்)

என்றே சிவபோக நேரத்தையும் கணித்துக் கூறுகிறார்.

**பிரிதல் :**

கலந்து மகிழ்ந்த தலைவனைப் பிரிதல் தலைவியற்குத் தணியாத துயர் தரும். ஈருருவும் ஓருருவான பின் அந்தப் பிரிவு கூடுதலாக வருத்தும். அனுபோக நிலையம் என்ற தலைப்பில் இராமலிங்கர் அங்ஙனம் வருந்தி உரைப்பார்.

"இனிப் பிரிந்திறையும் இருக்ககிலேன் பிரிவை

எண்ணினும் ஐயனோ மயங்கிப்

*பனிப்பில் என் உடம்பும் உயிரும் உள்உணர்வும்*
*பரிதவிப்பதை அறிந்திலை யோ.......*
*கலந்தருள் கலந்தருள் எனையே"*

என்று வேண்டுவார். பிரிவுத் துயரம் ஞான வெளியில் தனி நடனமிடும் தலைவனோடு கலந்தால் நீங்கும். அதற்கேற்ற தருணம் ஈதெனக் குறித்து அழைக்கின்றார்.

ஆன்ம பக்குவம் அவனை அழைக்கின்றது. தீரா வேட்கை தீயென வளர்கிறது. எனவே,

*"பிரிந்தினிச் சிறிதும் தரிக்கலேன் பிரிவைப் பேசினும் நெய்விடுந் தீப்போல் எரிந்துளங் கலங்கி மயங்கல் கண்டிலையோ"*

எனப் பிரிகின்ற நேரம் எரிகின்ற தீயில் எண்ணெய் வார்த்தது போல் தகிக்கின்றது. பிரிவு நிலையின் கொடுமை தாங்கும் சக்தியைக் கடந்து விட்டது. ஏதும் செய்ய இயலாத நிலை. அது ஆற்றாநிலை. எனவே, பிரிவாற்றேன்! சகிபபறியேன் என்பார்.

*"அன்பெலாம் ஆகி நிறைந்ததோர் நிறைவே*
*அண்ணலே இனிப் பிரிவாற்றேன்"*
*"அருட்செங்கோலையே நடத்தும் இறைவனே*
*ஓர் எண் குணத்தனே இனிச் சகிப்பறியேன்" (அனுபோக நிலையம்)*

என்று பிரிதல் நிலையை எடுத்துக்காட்டுகிறார் இராமலிங்கர்.

## இருத்தல் :

இளம்பூரணர். "இருத்தலாவது தலைமகன் வருந்துணையும் ஆற்றியிருத்தல்" என்பார். இராமலிங்கர் இருத்தலுணர்வுப் பாடல்களைத் தலைவி, நற்றாய், தோழி என்ற சங்க மரபு நெறியில் மூவகையாக வெளிப்படுத்தியுள்ளார். அதில் ஆற்றியிருத்தல் புலனாகிறது.

தலைமகளாகவே, தன்னை வரித்துக் கொண்டு விட்ட இராமலிங்கர் மற்றைய உறவு நிலைகளில் நின்றும் தன்னை வெளிப்படுத்த ஏன் முயலவேண்டும். அவ் ஐயப்பாட்டினை நீக்க ஆச்சாரிய ஹிருதயம் விளக்கம் அளிக்கின்றது.

தன்னை வெளிப்படுத்த கவிஞன் அத்தகைய உறவுநிலை மாற்றங்களைச் செய்கின்றான். அது எப்போது நிகழ்கின்றது? அதற்கான தருணங்கள் யாவை என்பதை மணவாள மாமுனிகள் வியாக்கியானம் மூலம் தெளிவுபடுத்தியுள்ளார். அதன் தமிழாக்கத்தில் பின் வருமாறு காணப்படுகிறது.

"சம்பந்த உபாய பலங்களில் உணர்த்தி துணிவு
பதற்றம் ஆகிற பிரஜ்ஞாவஸ்தைகளுக்கு தோழி
தாயார் மகள் என்றுபேர்" (ஆசாரிய ஹிருதயம். ப-345)

இச்சூத்திரத்தின் வியாக்கியானத்தில் "இந்த விதமான பக்தி நிலையில் இவர் பெண் பேச்சாகப் பேசுமிடத்தில் தோழி, தாய், மகள் என்று மூன்றுவிதமாகப் பேசுகிற" என்று கூறப்பட்டுள்ளது.

எனவே, பக்தி கொண்டு மேற்குறித்த மூன்று உறவுநிலைகளில் இருந்து பாடுவதை ஆச்சாரிய ஹிருதயம் விளக்குகின்றது. அதனைப் பிரஞ்ஞாவஸ்தை எனக் குறிப்பிடுகிறது. "பிரஞ்ஞாவஸ்தை - மூன்று காலத்தையும் அறியும் அறிவின் நிலை" என்றும் விளக்கம் தரப்பட்டுள்ளது. சம்பந்தத்தில் உணர்த்தி எனும் முதல் அவஸ்தை தோழி கூற்றாக வரும் எனவும், உபாயத்தில் துணிவு எனும் இரண்டாம் அவஸ்தை தாயார் கூற்றாக வரும் எனவும், பலத்தில் பதற்றம் எனும் மூன்றாம் அவஸ்தை தலைமகள் கூற்றாக வரும் என்றும் பிரித்துக் காட்டி விளக்கம் தரப்பட்டுள்ளது.

சம்பந்தம் - உணர்த்தல் - தோழி
உபாயம் - துணிவு - தாய்
பலம் - பதற்றம் - தலைவி

எனும் வகையில் உணர்த்தல், துணிவு, பதற்றம் எனும் பல்வேறு நிலைகளை வலுவாக உணர்த்த தோழி, தாய், தலைவி என்னும் பாத்திரங்கள் பயன்படுத்தப்பட்டதை அறிகிறோம்.

இராமலிங்கரும் தோழி, தாய், தலைமகள் என்ற மூன்று நிலைகளிலும் ஆற்றாமையை வெளிப்படுத்தியுள்ளார்.

## தோழி :

இராமலிங்கர் 'பாங்கி தலைவி பெற்றி உரைத்தல்' என்று தனியாகவொரு பதிகமே பாடியுள்ளார். அதனுள் தலைவனிடம் தலைவியின் தன்மைகள், சிறப்புகள், பேறுகள் ஆகியவை பேசப்படுகின்றன. அத்துடன் இருவரையும் இணைத்து வைப்பதற்கும் பெரு முயற்சி செய்கிறாள் தோழி.

"அம்மத வேள் கணை ஒன்றோ ஐங்கணையும் விடுத்தான்
அருள் அடையும் ஆசையினால் ஆருயிர்தான் பொறுத்தாள்
இம்மதமோ சிறிதுஇலாள் கலவியிலே எழுந்த
ஏகசிவபோக வெள்ளத் திரண்டுபடாள் எனினும்

எம்மதமோ எக்குலமோ என்று நினைப்புளதேல்
இவள்மதமும் இவள்குலமும் எல்லாமும்சிவமே
சம்மதமோ தேவர் திருவாய் மலரவேண்டும்
சபையின் நடம்புரிகின்ற தனிப் பெரிய துரையே''

இப்பாடலில் தலைவியின் தற்போதைய நிலை தலைமகனது சம்மதத்தைப் பெறத் துடிக்கும் தோழியின் உணர்வு என்பவை புலனாகும். அதில் சிவபோக வெள்ளத்து இரண்டுபடாள் என்பதால் சிவாத்வைதம் (சிவ அத்துவ நிலையும்) எளிதாக உணர்த்தப்பட்டுவிடுகிறது.

''அங்கலிட்ட களத்தழகர் அம்பலவர் திருத்தோள்
ஆசையெனும் பேய் அகற்றல் ஆவதிலை எனவே
பொங்கலிட்ட தாயர் முகம் தொங்கலிட்டுப் போனார்
பூவைமுகம் பூமுகம்போல் பூரித்து மகிழ்ந்தாள்
எங்களிட்டம் திருவருள் மங்கலஞ்சூட்டல் அன்றி
இரண்டுபடா தொன்றாக்கி இன்படை வித்திடவே
தங்களிட்டம் யாதுதிருவாய் மலர வேண்டும்
சிவபோகம் வேண்டுமென்ற வேட்கையிலும்''

ஆன்மாவை திசை திருப்பும் முயற்சிகள் நடந்திருக்கிறது. அதுவே தலைவியை மனமாற்றம் செய்வதற்கு மேற்கொள்ளப்பட்ட முயற்சி ஆகும்.

நற்றாய், செவிலி என்னும் தாயார் வெறியாடல், பொங்கலிட்ல் போன்றவை செய்து தலைமகளின் நோய் தீர்க்க முயன்றனர். ஆனால், அம்முயற்சிகள் வெற்றியடையவில்லை. தலைமகள் ஓரளவு மகிழ்ந்து போனாள். இருந்தாலும் எங்களது மரபுவழிப்படி 'திருவருள் மங்கலஞ்சூட்டல்' என்பதை நிகழ்த்தித் தலைவனே அவளை ஏற்றுக்கொள்ள முன்வரவேண்டும் அதுவே முழுவின்பம் பயப்பது என்றாள்.

பிறிதோர் இடத்தில் இராமலிங்கர் தலைமகளே தன்னைத் தலைவனிடம் அனுப்பிச் சம்மதம் கேட்டு வரச் செய்தாள் என்பதாகப் பாடுகிறார்.

''பனம்பழமே எனினும் இந்தப்பசி தவிர்த்தால் போதும்
பாரும் எனப் பகர்கின்ற பாவையர்போல் பகராள்
இனம் படிமோகங் கலந்தாள் சிவானுபவத் தல்லால்
எந்த அனுபவங்களிலும் இச்சை இல்லாள் அவர்தம்

மனம்பழமோ காயோ என்றறிந்து வர விடுத்தாள்
மன்றவர்போல் காசு பணத்தாசை வைத்து வருந்தாள்''

எங்கள் தலைவி சிறிது வேறுபட்டவள் சிவ அனுபவமேயன்றி பிற யாவும் விரும்பாள். எனவே, தன் நிலையைத் தலைவர் தெளிவாகச் சொல்லிவிட வேண்டும். 'மனம் பழமோ காயோ என்றறிந்து வர விடுத்தாள்' எனக் கூறுவது தோழியின் பேச்சுத் திறனைக் காட்டுகிறது. எப்பாடு பட்டாகிலும் தலைமகனோடு அவளைச் சேர்த்துவிட வேண்டும் என்ற உணர்வு மேலோங்கி நிற்கிறது.

''தத்துவரும் தத்துவஞ் செய்தலைவர்களும் பிறரும்
தனித்தனியே வலிந்து வந்துதன் எதிர்நிற்கின்றார்
எத்துணையும் மற்றவரை ஏறெடுத்துப் பாராள்
இருவிழிகள் நீர் சொரிவாள் என்னுயிர் நாயகனே
ஒத்துயிரில் கலந்து கொண்ட உடையாய் என்றுமையே
ஓதுகின்றாள் இவள் அளவில் உத்தமரே உமது
சித்தம் எது தேவர் திருவாய் மலரவேண்டும்''

என்ற வேண்டுதலில் தலைமகள் இருவிழி நீர் சொரிய ஏங்கியிருக்கும் இரக்கநிலை புலனாகிறது. தத்துவம், புலமை எல்லாம் அவளால் புறக்கணிக்கப்படுகின்றன. மற்றையோர் வலிய வரினும் ஏறெடுத்துப் பாராள்: உடையவன் நீயென உன்னையே நினையும் கற்புத்திண்மை உடையாள். ஆன்மாவின் தேடல் இங்கு வலுவடைவதைப் பார்க்கிறோம்.

அவளுக்குப் பெற்றெடுத்த அன்னையும் துச்சம். நின்பால் எழுந்த காதலால் தன் அன்னையை நோக்கி உனக்கென்ன இங்கு வேலை ஏகுக என்றாள்.

''அன்னையைக்கண்டு அம்மா நீ அம்பலத்தென் கணவர்
அடியவளே மிகவருக அல்லன் எனில்இங்கே
என்னை உனக்கிருக்கின்றது ஏகுக என்றுரைப்பாள்''

அவள் நிலை மேலும் மோசமாகி வருகிறது. தனை மறந்தாள்.

''................ இச்சை மயமாகித்
தன்னுயிர் உடல்மறந்தாள் இருந்தறியாள் படுத்தும்
தரித்தறியாள் எழுந்தெழுந்து தனித்தொரு சார்திரிவாள்
அன்னமுண அழைத்தாலும் கேட்பதிலாள்''

தாயார் என்று பேர்" என்று ஆசாரிய ஹிருதயத்தில் குறிப்பிடப் பட்டுள்ளது.

இராமலிங்கர் தாயாகி நின்று ஆற்றொணாத எண்ணங்களைக் கூறுமிடத்து இருநிலைகளில் பேசுகிறார். தமிழ் மரபுப்படி நற்றாய், செவிலித் தாய் என்ற இருவிதத் தாய்மை உணர்வுகள் கூற்றுக்களில் வெளிப்படுகின்றன. இருவருமே தலைவியின் எல்லையில்லாக் காதல் குறித்தும், தங்களது அறியாமை குறித்தும் இறையின் பெருமை குறித்தும் பேசுவதுண்டு.

நற்றாயக்குத் தன் மகளின்மீது மாறாத பாசமும், சலியாத அக்கறையும், தாளாத அன்பும், குறைவு படாத உயர்மதிப்பும் இருக்கின்றது. எனவேதான், அவள் தன் மகளை அழைக்கின்றபோது,

"வரத்தினால் நான் பெற்ற மகளே" என்பாள். அதில் பரிவுநிலை தோன்றும்.

நற்றாய் முதல் வாசகத்திலேயே அவளின் மனநிலையைப் புலப்படுத்தி விடுகிறாள்.

"காதல் கைம்மிகுந்த தென்செய்வேன் எனைநீ

கண்டு கொள் கணவனே என்றாள்"

எனும்போது மகளின் காதல் மிகுதியும், கணவனே என்றழைக்கும் கருத்தும், அவளது உணர்வைப் புரிந்துகொண்ட பரிவும் தாய் கூற்றில் தழைக்கின்றன.

மற்றையோர் அவர்தம் உறவு கண்டு அலர் தூற்றலாம், அம்பலாக்கலாம். ஆனால் தாயுள்ளம் கேலி பேசி நையாண்டி செய்யாது, ஊரார் பழிப்பதைக் கண்டு அவள் உள்ளம் வேதனையுறுகிறது. தலைவன் தன் மகளை ஏற்கமாட்டானா என்று தவிக்கின்றது.

"மெலிந்த என் உள்ளத்தை அறிந்தனை தயவு"

"மலிந்த இவ்வுலகர் வாய்ப்பதர் தூற்ற

வைத்தல் உன்மரபல என்றாள்

வலிந்தெனைக் கலந்த வள்ளலே என்றாள்

வரத்தினால் நான் பெற்ற மகளே" (பாங்கி தலைவி பெற்றி உரைத்தல்)

என வருமிடத்தில் மற்றையோர் அலர் தூற்றுவதைக் கண்டு பொறாத நிலையும், அதே நேரத்தில் அவ்வலர் உள்ளீடற்றது

என்ற உணர்வும் உதிக்கின்றன. மலிந்த இவ்வுலகர் வாய்ப்பதர் தூற்றவைத்தல் உன் மரபல என்ற செய்தியும் வலிந்தெனைக் கலந்த வள்ளலே என்ற செய்தியும் முக்கியமானவை.

தன் மகளுக்குக் கிடைத்த தலைவனைப் போல் தரணியில் மற்றையோர் யார்க்கும் தலைவன் கிடைக்க மாட்டான். அவ்வாறிருக்க உண்மையறியாது உலகோர் பேசுகின்றனர். அதுவோர் அறியாமை. வலிந்து கலந்த வள்ளல் என்பதால் தனது மகள் சாதாரணக் காமக் கூட்டத்திற்காக ஏங்கவில்லை. அது அருள்நாட்ட அன்பின் கூட்டம். இதயத் தேட்டம். அவன் கருணையே அவளை ஆட்கொண்டது. அதனால்,

"பூமியோ பொருளோ விரும்பிலேன் உன்னைப் புணர்ந்திட விரும்பினேன் என்றாள் காமி என்றெனை நீகைவிடேல் காமக் கருத்தெனக்கில்லை காண்" (நற்றாய் கூறல்) என்றாள்.

தலைவனின் நினைவால் தன் மகள் பெறும் பெரும் வேதனைகள் பின்வருமாறு:

"பஞ்சு போல் பிறந்தேன் அய்யவோ துன்பம் பட முடியாதெனக் கென்றாள்" "........ உனைநான் மறப்பனோ கனவிலும் .......... மறந்திடில் ஐயோ உயிர்தரியா தெனக்கென்றாள்" "உன்னைக் கலந்தனுபவிக்க ஆசைமேற் பொங்கியதென்றாள் தடுத்திட முடியாதினிச்சிறு பொழுதும் தலைவனே தாழ்த்திடேல் என்றாள்" "சாமி நீ வரவு தாழ்த்திடில் ஐயோ சற்று நான் தரித்திடேன் என்றாள்".

மேற்குறித்த தவிப்பு அனைத்தும் ஆன்மத் தவிப்பே ஆகும். அதன் பின்னரே தலைவனின் தண்ணருள் கூட்டம் கிடைத்தது. தனது மருகனின் புகழ்நிலையையும் புலப்படுத்துகிறாள்.

"ஆடிய பாதத் தழகன் என்றனைத்தான் அன்பினால் கூடினன் என்றாள் கோடி மாதவங்கள் புரியினும் பிறர்க்குக் கூடுதல் கூடுமோ என்றாள்" (நற்றாய் கூறல்)

எத்தனை கோடித் தவமிருந்தாலும் கிடைக்காத பேறு தன் மகள் எளிதில் எய்தினாள் என்ற பெருமை தாய்க்கு ஏற்படுகிறது. "எண்ணாயிரம் ஆண்டு யோகம் இருப்பினும் கண்ணார் அமுதினைக் காண ஒண்ணார்" என்று திருமூலர் கண்டதுபோல் தாயும் உணர்ந்தாள்.

இதுவரை குறிப்பிடப்பட்ட கூற்றுகள் எல்லாம் தனது மகளின் அன்புவயப்பட்ட நிலை, தலைவனுக்காக அவள் ஏங்கிய ஏக்கம், தலைவனின்றி உயிர் வாழ இயலாத தவிப்பு, இறையருள் கிட்டிய

நிறைவு என்பவற்றைக் குறிப்பிடும். இனி வருவன எல்லாம் தலைவியின் கற்பு வாழ்க்கை பற்றியன. கலவியினால் தன் மகள் பெற்ற இன்ப மாற்றங்களைக் கண்டு இன்புற்று நற்றாய் செவிலி இருவரும் பரவசத்தோடு பகிர்ந்து கொள்கின்றனர். நம்மகள் என்ற பெருமிதமும் ஏற்படுகிறது. செவிலி நற்றாய் இருவரும் நிகழ்த்தும் கலந்துரையாடல் பின்வருமாறு அமையும்.

"துணிந்து நான் தனித்தபோது வந்தென்கை தொட்டனன் பிடித்தனன் என்றாள் புணர்ந்தனன் கலந்தான் என்றுளே களித்துப் பொங்கினாள்".

"அணித்த நீத்தெனைத்தான் அன்பினால் அணைத்தான் எனக்கிணை யார் கொலோ என்றாள்" "வள்ளலைப் புணர்ந்தேன் அம்மவோ இதுதான் மாலையோ காலையோ என்றாள்", "இருமையும் என்போல் ஒருமையில் பெற்றார் யாண்டுளர் யாண்டுளர் என்றாள்" "ஊழித்தோறூழி உலகினும் அழியா உடம்பெனக் களித்தனன் என்றாள்" (நற்றாய் செவிலிக்குக் கூறல்)

இங்ஙனம் கூறுவது தவத்தால் பெற்ற நம்மகள் என உறவாடி மகிழ்கின்றனர். தலைவன் அருள் சுரக்கும் வள்ளல். அவனோடுள்ள உறவால் காலை மாலை என்ற பொழுதுணர்வே போய்விட்டது. பொழுதிடைத் தெரியின் பொய்யே காமம் என்பார் குறுந்தொகைப் புலவர், அவன் உறவால் அழியா உடம்பு கிடைத்தது காலம் மறந்தஅழியா வாழ்வை அடைந்தாள்.

"தாயானவள் பெற்று வளர்த்து, பெண்பிள்ளை தக்கவயதுடையவளாய் தலைவனிடத்தில் கொண்ட கழிபெருங் காதலாலே அவன் இருந்த இடத்தில் ஏறிப் போகவேண்டும் என்று பதறுதல்: அவனை அடையும் பேற்றினை விரைவிலே பெற வேண்டும் என விரைதல் என்பன நிகழும் நிலை" என ஆசாரிய ஹிருதயம் உரைப்பது பொருந்துகிறது.

**தலைமகள் :**

"பலத்தில் பதற்றமாகிற பிரஜ்ஞாவஸ்தைக்கு மகள் என்று பேர் தலைமகள் ஆவாள். இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து, தலைவனுடைய ஒப்புயர்வற்ற வனப்பு முதலியவற்றிலே ஈடுபட்டுக் குல மரியாதைகளையும் பாராதே தலைவனை அடைந்தால் அல்லது தரியேன் என்னும் பதற்றத்தையுடைவள்" என்று ஆசாரிய ஹிருதயம் தலைமகள் செயலைக் குறிப்பிடுகிறது.

இராமலிங்கர் தோழியின் மூலமாகவே தலைமகளின் மேற்குறித்த செயல்கைள எல்லாம் வெளிப்படுத்திவிட்டார். இங்கு தலைமகளின் மன நிறைவையே எடுத்துக்காட்டுகிறார்.

"காணாத காட்சி எல்லாம் காண்கின்றேன் பொதுவில்
கருணை நடம் புரிகின்ற கணவரை
உட்கலந்தேன் கோணாத மேல்நிலை மேல்
இன்ப அனுபவத்தில் குறையாத வாழ்வடைந்தேன்
தாழ்வனைத்தும் தவிர்ந்தேன்" (அனுபவமாலை)

காணாதன கண்டு, வாழ்வு நீங்கப் பெற்றுக் குறையாத வாழ்வடைந்த நிறைவைக் காண முடிகிறது. அந்நிறைவைத் தலைமகள் தன் தோழி, தாய் இருவரிடமும் எடுத்துரைப்பதாக இராமலிங்கர் அமைத்துள்ளார்.

## ஆன்மீக உயர்வேதிவினை நிகழ்வுகள்

ஆன்மத் துடிப்புடையவர்தான் ஆன்மாவை அடைய முடியும். அத்தகைய ஆன்மத் துடிப்பு என்பது பலவகைத் தூண்டுதல்களால் ஏற்படுகிறது. அத்தூண்டுதல்கள் எல்லாம் சுயதேடலின் விளைவுகளே. தேடலும் உள்ளார்ந்த நிலையில் நிகழ்கின்றது. உள்முக வெளிப்பாடுகள் மனதினை மறுஉருவாக்கம் (Remarking) செய்ய வைக்கின்றது. அப்புதிய உருவாக்கம், பலவகையான படைப்புச் சக்திகளைப் பெற்றுத் தருகிறது.

பயணம் என்ற குறியீட்டில் நாட்டம் மட்டுமே மிகுதியும் வெளிப்பட்டது. திருமணம் என்ற குறியீட்டில் பிடித்துக் கலத்தல் என்பதே வேட்கையாக விளங்கிற்று. ஆனால், இக்குறியீடு அவ்வாறு குறிப்பிட்டு கூற இயலாதவாறு பல குறியீட்டு நிலைகளால் புனையப்பட்டுள்ளது. அவை இருண்மை உடையன. ரசவாதம், சித்து விளையாட்டு என்பனவாகத் தோன்றுகின்றன. விளக்கம் தர முற்பட்டால் முரண்பாடுகளையே தாங்கி நிற்கின்றன. நிகழ்ந்த நிகழ்ச்சிகள் பற்றிய குறிப்புகள் கிடைக்கின்ற அளவுக்கு எவ்வாறு நிகழ்ந்தன என்பதற்கான விளக்கங்கள் இல்லை. எனவேதான், அவை ஒரு மாயப் போர்வையைப் போர்த்துக் கொண்டது போல வார்த்தைகளால் விளக்க இயலாதனவாக இருக்கின்றன. அத்தகு ஆழ்மன அனுபவ நிகழ்வுகளைப் பின்வருமாறு வகைப்படுத்த முடியும்.

1. ரசவாதம் செய்தல்,
2. தங்கத்தைக் குறிப்பிடல்
3. மணிக்கற்கள் பற்றிக் குறிப்பிடல்
4. உலோகங்களைக் குறித்தல்

5. கோளங்கள், அண்டங்களைக் குறித்தல்
6. விலங்கியல் சார்ந்த குறியீடுகளைத் தருதல்
7. தொடர் உருவகங்களாகப் பாடுதல்
8. ஆன்மீக வேதியல் மாற்றங்களைச் சுட்டிக்காட்டுதல்
9. மருத்துவக் குறிப்புகள் தருதல்
10. அனுபவ நிலைகளைக் குறியீடுகளாக்கிப் பாடுதல்.

மேற்குறித்த பத்து வகைக் குறியீட்டு நிலைகளில் அருட்பாவில் இடம்பெற்ற மறைவேதி வினை நிகழ்வுகளும், மன வெளிப்பாடுகளும் இவ்வியலில் பகுத்துக் காட்டப்படும். அவற்றுக்கு அரண் சேர்க்குமுகத்தான் திருவாசகச் சான்றுகளும் எடுத்தாளப்பட்டுள்ளன.

**ரசவாதம் செய்தல் :**

ரசவாதம் செய்தல் சித்து வேலை. ஒரு பொருளை மற்றொரு பொருளாக மாற்றிக் காட்டுதல், மாற்றுகின்ற வழிமுறை மற்றவருக்குத் தோன்றாவண்ணம் மறைபொருளாகச் செய்வது. சாதாரண மக்கள் செய்ய இயலாத காரியம். எனவே அத்தகைய வழிமுறை தெரிந்தவர்களை யோக சித்தர்கள் என்பர். பெரும்பான்மை செம்பைப் பொன்னாக்குதல் என்ற பொருண்மையிலேயே வழங்கப்படுகிறது. சிலர் தங்களை ஞானிகள், யோகிகள், சித்தர்கள் என்று சொல்லிக்கொண்டு இரசவாதம் செய்வதாகச் சொல்லி மக்களை ஏமாற்றிவிடுவதும் உண்டு. அவர்களது போலித்தன்மை மக்களிடையே அவ்வேதிவினை நிகழ்வின் உயர்வை இழக்கச் செய்துவிடுகிறது. இராமலிங்கர் ரசவாதம் என்ற வினை குறித்துக் குறிப்பிடுகிறார். அவ்வினையைப் புரிவதற்கு இறைவன் வழிவகை உணர்த்தினார் என்று குறிப்பிடுகிறார்.

"பொன் செயல் வகை உணர்த்தி"

என்றதனால் அதனை உணரலாம். மேலும், ரசவாதத்தில் ஏழு வகைகள் இருப்பதாகவும் குறிப்பிடுகிறார். அவை முறையே,

ரசவாதம் ஏழு

| | | |
|---|---|---|
| ஸ்பரிச வாதம் | - | குரு சம்பந்தத்தால் |
| ரச வாதம் | - | ஒஷதி சம்பந்தத்தால் |
| தூமா வாதம் | - | புகைவேதியால் |
| தாதூர் வாதம் | - | பஞ்சலோகங்களால் |

வாக்கு வாதம் - சொல்லால்
அக்ஷி வாதம் - பார்வையால்
சங்கல்ப வாதம் - தியானத்தால் செய்யப்படும்.

**உபரசவாதம் ஏழு**

மந்திர வாதம் - எழுத்துக்கள் சம்பந்தத்தால்
புரீ வாதம் - மலமூத்திரத்தினால்
தூளன வாதம் - பாத தூளிகை சம்பந்தத்தால்
வாயு பிரேரக வாதம் - சுவாச சம்பந்தத்தால்
தேவாங்க வாதம் - உபாசனையினால்
பிரவேச விசிரிம்பித வாதம் - பூத தாதுவால்
தந்திர வாதம் - நிரேதுவாக செய்யப்படும்

(திருவருட்பா உரைநடைப்பகுதி. ப-330)

என்ற வகையில் இடம் பெற்றுள்ளன.

**தங்கத்தைக் குறிப்பிடல் :**

செம்பைப் பொன்னாக்குதலை ரசவாதம் எனக் கண்டோம். இங்கு இறைச் சிந்தனையின்போது தங்கத்தை உள்ளவாறே குறிப்பிடுதலும் விளக்கம் பெறுகிறது. இறைவனை உருவகித்தும், தனது மாற்றங்களை எளிதில் விளக்க இயலாதவிடத்தும் தங்கத்தைக் குறிப்பிடுவர். அதனை ஆன்மீக மாற்றவினைகளாகவே கொள்ள வேண்டும்.

"என்புரி அழியாப் பொன்புரி ஆக்கி என்னை
ஆண்டருளிய நினையே" (ஆண்டருளிய அருமைவியத்தல்)
"கரத்தில் பொற்பூண் அணிந்தாய்" (மெய்யருள் வியப்பு)

என்பதாக வரும் வரிகள் இறைவனால் தான் பெற்ற தங்கத்தைக் குறிப்பிடுதலாகும். இனி இறைவனையே தங்கமென உருவகப் படுத்தலும் இடம்பெறுகிறது. "வளம்பட வாய்த்த மன்னிய பொன்னே"

"புடம்படாத் தரமும் விடம்படாத் திறமும்
வடம்படா நலமும் வாய்த்த செம்பொன்னே"
"அமர்ந்த பைம்பொன்னோ" (அருட்பெருஞ்சோதி அகவல்)

என்றவாறு இறைவனையே பொன்னாகக் குறிப்பிடலைக் காண முடிகிறது.

## மணிக்கற்கள் பற்றிக் குறிப்பிடல் :

தங்கத்தையடுத்துப் பிற மதிப்புடைய மணிக்கற்கள் பற்றியும் குறிப்பிடுவர். பவளம், பொன், மணி, மரகதம், முத்து, வைரம் என்பன இறைவனோடு உருவகப்படுத்தப்படுகின்றன. திருஅருட்பாவில் பொன், வயிரம், மாணிக்கம் என்பவை உருவகப் படுத்தப்பட்டுள்ளன.

### திருவாசகம்

பவளம் - அம்பவளம், சீரார் பவளம், செம்பவளம், பவளத்தின் முழுச்சோதி, பொன் - அம்பொன், ஆடகம், சுடர் பொன்குன்று, பொன்னியலும் திருமேனி, சுண்ணப்பொன், மணி - அரமாமணி, சுடர்மாமணி, மாசின்மணி, மரகதம் - மரகதம், மரகதக் குவாஅல், மாணிக்கம், முத்து - வெண்மணி, நித்திலம், தோளா முத்து, துளங்கொளி வயிரம் (திருவாசக ஒளிநெறி_வ.சு.செங்கல்வராய பிள்ளை) என்ற வகையில் மணிக்கற்கள் திருவாசகத்தில் குறிக்கப்பட்டுள்ளன.

## திருஅருட்பா :

"பொன் அம்பலத்தாணிப்பொன் ...... மாணிக்கம்

..... உடைய மாணிக்கப் பெருமாலை வயிரம் அடைவுறு வயிரக் கட்டியே எனக்கு விளங்குறக் கிடைத்த ஓர் வயிரப்பெட்டியே என்கோ பெட்டியின் நடுவே பெரியவர் வைத்ததோர் தங்கக் கட்டியே (ஆண்டருளிய அருமையை வியத்தல்)

என்று திருஅருட்பாவில் மூவகை மணிக்கற்கள் கூறப் படுகின்றன. திருவாசகத்தில் மிகுதியாக மணிக்கற்கள் குறிக்கப் பெற்றுள்ளன. திருஅருட்பாவில் மூவகை மணிக்கற்கள் குறிக்கப் பெற்றாலும் அவற்றை முன்பின் மாற்றி உரைக்கும் ஆன்மீகவேதி வினை நிகழ்வு பிறழ்வையும் காண முடிகிறது. தங்கத்தைவிட வயிரம் விலை மதிப்புடையது என்றிருக்க, வயிரப் பெட்டிக்குள் பெரியவர் வைத்த தங்கக்கட்டி என்று தங்கக்கட்டி வயிரத்தை விட மதிப்பு உயர்ந்ததாகக் கூறப்பட்டுள்ளது. இங்குப் பெரியவர் வைத்த தங்கக்கட்டி என்றது ஆன்மீக வினை மாற்றத்தைக் குறிக்கிறது.

## உலோகங்களைக் குறித்தல் :

உலோகங்களைக் குறிப்பிடலில் இரும்பே முக்கிய இடம்பெறுகிறது. இரசவாதம் செய்தலில் செம்பு இடம்பெற்றாலும் கூட மனித நிலையைக் கூறுமிடத்து இரும்பே

குறிப்பிடப்படுகிறது. திருவாசகத்திலும் இரும்பைக் குறிப்பிட்டு கூறுகின்றனர்.

"இரும்பின் பாவை அனைய நான், இரும்பு தரு மனத் தேன், என்செவி இரும்பினும் வலிது, இணையன் பாவனை இரும்பு" என்று மனித மனம், உறுப்பு, செய்கை போன்றவற்றுக்கு உவமையாக இரும்பு குறிப்பிடப்பட்டுள்ளது.

திருவாசகத்தைப் போன்றே திருவருட்பாவிலும் மனித நிலைக்கு உவமையாக இரும்பு கூறப்பட்டுள்ளது.

"உதவாத் துருப்பிடி இருப்புத் துண்டுபோல்
கிடந்து தூங்கினேன்" (அவா அறுத்தல்)

என்று பயன்பாடின்றி வீண்போது போக்கிய தன்நிலையைத் துருப்பிடித்த இரும்புடன் ஒப்பிட்டுக் கூறுகிறார் இராமலிங்கர்.

**கோளங்கள், அண்டங்களைக் குறித்தல் :**

ஆன்மீக அருள்நிலை அனுபவ மாற்றங்களினால், இவ்வுலகப் பொருட்களோடு நின்றுவிடாது அப்பால் உள்ள பொருட்களைப் பற்றிய சிந்தனையும் ஏற்பட்டுவிடுகிறது. புவியியல் சார்ந்த சிந்தனைகளும் அருளாளர்கட்குத் தோன்றுகின்றன. அப்போது அவர்கள் அண்டங்கள், கோளங்கள் குறித்தும் சிந்தித்துக் கருத்துக்களை வெளியிடுகின்றனர்.

**திருவாசகம் :**

"அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்
அருப்பருந்தன்மை வளப்பெருங்காட்சி
ஒன்றனுக்கொன்று நின்றெழில் பகரின்
நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன
இன் னுழை கதிரின் துன்னணுப் புரைய
சிறிய வாகப் பெரியோன் தெரியின்"
"அண்டம் நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன"

**திருஅருட்பா :**

"கோன் செய்த பற்பல கோடி அண்டங்களும்
கூறவற்றில் தான் செய்த பிண்டப்பகுதியும்
நான் செயத் தந்தனனே" (அனுபவமாலை)
"துரிசறு கருவிகள் சுத்தநல் வெளியிடை
அரசுற வகுத்த அருட்பெருஞ்சோதி

*இவ்வெளி எல்லாம் இலங்க அண்டங்கள்*
*அவ்வயின் அமைத்த அருட்பெருஞ்சோதி*
*ஓங்கிய அண்டம் ஒளிபெற முச்சுடர்*
*ஆங்கிடை வகுத்த அருட்பெருஞ்சோதி*
*சிருட்டித் தலைவரைச் சிருட்டி அண்டங்களை,*
*காவல்செய் தலைவரைக் காவல் அண்டங்களை,*
*மறைத்திடு தலைவரை மற்றும் அண்டங்களை,*
*தெளிவு செய் தலைவரைத் திகழும் அண்டங்களை,*
*விந்துவாம் சத்தியை விந்தின் அண்டங்களை,*
*ஓங்கார சத்திகள் உற்ற அண்டங்களை,*
*சத்தத் தலைவரைச் சாற்றும் அண்டங்களை,*
*நாதமாம் பிரமமும் நாத அண்டங்களும்,*
*பகர்பரா சத்தியைப் பதியும் அண்டங்களை,*
*பரசிவ பதியைப் பரசிவாண்டங்களை,*
*எண்ணில்பல சத்தியை எண்ணில் அண்டங்களை,*
*அளவில்பல சத்தரை அளவில் அண்டங்களை,*
*உயிர்வகை அண்டம் உவப்பில எண்ணில!*
*அயர்வற வகுத்த அருட்பெருஞ்சோதி"*
*(அருட்பெருஞ்சோதி அகவல்)*

*என்று திருவாசகத்திலும், திருவருட்பாவிலும் அண்டங்கள் குறிக்கப்பபெறுகின்றன. திருவாசகம் அண்டம் நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன எனக் குறிக்கிறது. ஆனால் விரிந்த அண்டங்களின் பெயர் குறிக்கவில்லை. திருவருட்பா அவற்றின் விரிவுகளை வார்த்தைகளுக்குள் கொண்டு வர முயன்றுள்ளது. சிருஷ்டி அண்டங்கள், காவல் அண்டங்கள், விந்து அண்டங்கள், நாத அண்டங்கள், சத்தி அண்டங்கள், பரசிவாண்டங்கள் என்று அண்டங்களை அருட்பா வகைப்படுத்திக் காட்டுகிறது.*

## விலங்கியல் சார்ந்த குறியீடுகளைத் தருதல் :

*ஆன்மீக அருளியல் அனுபவ நிலைகளில் எவ்வளவுக் கெவ்வளவு உயர்வாக எண்ணுகின்றனரோ அவ்வளவுக்கவ்வளவு தாழ்மையான எண்ணங்களையும் பெறுகின்றனர். படைப்புச் சக்திகளையெல்லாம் பெறவைத்தான் இறைவன் எனப்பகரும் அதே வேளையில் தன்னைத் தாழ்த்திக் கொள்ளும் எதிர்நிலையையும் காணமுடிகிறது. அத்தகுவேளையில் தன்னை*

மனித நிலைக்கும் தாழ்ந்த விலங்குகளோடு இணைத்துக் குறியீடுகளாகக் குறிப்பிடுகின்றனர். அத்தகைய போக்கைத் திருவாசகம் திருஅருட்பா இரண்டிலுமே காணமுடிகிறது.

**காகம் :**

*"எருது நோவறியாக் காகமே எனப்போய்ப் பிறர்தமை*
*வருத்திக் களித்தப் பாதகத் தொழிற் கடையேன்"*

**சுணங்கு :**

*"புலைவிலைக் கடையில் தலைகுனிந் தலைந்து பொறுக்கிய சுணங்கனேன்" (ஆன்மவிசாரத் தழுங்கல்)*

**பன்றி :**

*"பருத்த ஊனொடு மலம் உணத்திரியும் பன்றி போன்றுளேன்"*

**புலி :**

*"கொடிய வெம்புலிக் குணத்தினேன்" (மாயை வலிக்கழுங்கல்)*

**புழு :**

*"புழுவில் இழிந்தேனே" (அடியார் பேறு)*

**பூனை :**

*"கங்குலும் பகலும் அட்டிலை அடுத்த பூனையேன்"*

**மாடு :**

*"கொட்டிலை அடையாப் பட்டி மாடனையேன்"*
*(ஆன்மவிசாரத் தழுங்கல்)*
*"பெரும் பாரமே சுமந்து வாடும் ஓர் பொதிமாடென"*
*"கண் கெட்ட ஊரேறு"*

**மான் :**

*"தாவு மான் எனக்குறித்துக் கொண்டோடித்*
*தையலார் முலைத்தடம் படுங் கடையேன்" (மாயைவலிக் கழுங்கல்)*

**நாய் :**

*"ஊர் நாயிற் கடையானேன், கடலினுள் நாய் நக்கியாங்கு,*

நாய்க்குத் தவிசிட்டு, நாய்சிவிகை ஏற்றுவித்த, நாயாகிய குலத்தினும் கடைப்படும் என்னை, பொல்லா நாயான புன்மையேனை,"

என்று திருவாசகம் குறிப்பிடுகிறது. அதனைப் போன்ற நிலையினைத் திருஅருட்பாவிலும் காணலாம்.

"நாய்க்குத் தவிசிட்டொரு பொன்முடியும்
நன்று சூட்டியே நட்டநடுவே வைத்தாய்" (மெய்யருள் வியப்பு)
"நாயெனவே திரிந்தேனை" (திருவருட்கொடை)
"நாயினேன் இனியோர் கணந்தரிப்பறியேன்" (திருவருள் விழைதல்)
"நாயினும் கடையேன்" (அருட்பெருஞ்சோதி அகவல்)

என்று பல்வேறு விலங்குகள் மனித நிலைகளுக்குக் குறியீடுகளாகக் கூறப்பட்டுள்ளன.

**தொடர் உருவகங்களாகப் பாடுதல் :**

அனுபங்களை வெளிப்படுத்துமிடத்து உருவகங்களைக் குறிப்பிடுதல் கவிஞர்தம் இயல்பு. ஆனால் ஆன்மீக அருளியல் வெளிப்பாட்டு நிலையில் அவ்வுருவக ஆட்சி மிகுதியாக விளங்குகிறது. திருஅருட்பாவில் அவை தொடர் உருவகங்களாகப் பாடல் முழுமையும் இடம்பெறுவதைக் காணலாம். அத்தகைய உருவகப்பாடல்கள் திருஅருட்பாவில் மிகுதியாக உள்ளன. இராம லிங்கர் தமது அருளியல் அனுபவங்களைத் தொடர் உருவகங்களாகப் பாடி வெளிப்படுத்தியுள்ளார். "உருவக ஆட்சி என்பது ஒரு கவிஞனின் அறிவு மேம்பாட்டுக்கு அடையாளம், பிறர் வாயிலாக இதைப் பெறமுடியாது" (பெரியபுராணத்தில் உருக்காட்சி கிருஷ்ணமூர்த்தி ஆர்) என்ற அரிஸ்டாட்டிலின் கூற்று இராமலி ங்கரின் அறிவு மேன்மையையே வலுப்படுத்துகிறது. "இயல்கிளர் மறையே மறைகிளர் இசையே இசைகிளர் துதியே துதிகிளர் இறையே" (திருநடமணியே)

"வரைவளர் மருந்தே மவுனமந்திரமே மந்திரத்தாற் பெற்ற மணியே" (பேரானந்தப் பெருநிலை)

"வானே அவ்வான் கருவே வான்கருவின் முதலே"
(மரணமிலாப் பெருவாழ்வு)

"கதிக்கு வழிகாட்டுகின்ற கண்ணே என் கண்ணில்
கலந்த மணியேமணியில் கலந்த கதிர்ஒளியே" (அருள்விளக்க மாலை)

"கருணைக் கடலே அதில் எழுந்த கருணை அமுதே
கனியமுதில் தருணச்சுவையே சுவையனைத்தும் சார்ந்த பதமே"
(தனித்திரு அலங்கல்)

"கால்வளர் கனலே கனல்வளர் கதிரே கதிர்நடு வளர்கின்ற கலையே" (பேரானந்தப் பெருநிலை)

"பதமலரோ பதமலரில் பாதுகையோ அவையில்
படிந்த திருப்பொடியோ அப்பொடி படிந்த படியோ"
(திருவடிப் பெருமை)

என வரும் தொடர் உருவகங்கள் பாடலின் இடையிடையே வருகின்றன. இவ்வகையில் அமையும் தொடர் உருவகப்பாடல்கள் அருட்பாவில் மிகுதி. பாடல் முழுமையும் உருவகங்களாகப் பாடுகின்ற தன்மையையும் அருட்பாவில் காணலாம். அதற்குத் தக்க சான்றாகப் பின்வரும் பாடல் அமைகின்றது.

"கோடையில் இளைப்பாற்றிக்கொள்ளும் வகை கிடைத்த
குளிர்தருவே தருநிழலே நிழல்கனிந்த கனியே
ஓடையிலே ஊறுகின்ற தீஞ்சுவை தண்ணீரே உகந்த
தண்ணீரிடை மலர்ந்த சுகந்தமணமலரே
மேடையிலே வீசுகின்ற மெல்லிய பூங்காற்றே
மென்காற்றில் விளைசுகமே சுகத்தில் உறும்பயனே
ஆடையிலே எனைமணந்த மணவாளா பொதுவில்
ஆடுகின்ற அரசே என்அலங்கல் அணிந்தருளே" (அருள் விளக்கமாலை)

என்று இறையனுபவத்தின் வெளிப்பாடாகவே தொடர் உருவகங்கள் எழுகின்றன. அவை வாழ்வியல் நிகழ்வுகள், வழங்குகின்ற பொருட்கள், காண்கின்ற இயற்கைக்காட்சிகள், உணவுப் பொருட்கள், என்பவற்றின் பிரதிபலிப்புக்களாக உள்ளன. கவிதையில் இடம்பெறும் உணர்த்துமுறையாக இவை விளங்குகின்றன. இவற்றை 'இமேஜரி' (Imagery) என்று வழங்குகின்றனர். அதனைத் தமிழில் உருவக்காட்சி என்றும் வழங்குவர். "உருவக நிலை, உருவத்தொகுதி, ஓவியம், படிமம், படிமப் பிரயோகம், மனக்கண் காணும் காட்சி, கருத்தியல் வடிவம், புலனுணர்வு சொற்காட்சி போன்ற சொற்களும் தொடர்களும் உருக்காட்சி என்ற பொருளில் தமிழறிஞரால் வழங்கப் பெற்றுள்ளன" என்று ஆர்.கிருஷ்ணமூர்த்தி குறிப்பிடுகிறார்.

அவ்வுருக்காட்சி திருஅருட்பாவின் வெளிப்பாட்டில்

எவ்வாறுள்ளது என்பதை சுப.அண்ணாமலை அவர்கள் பின்வருமாறு விளக்கியுரைக்கின்றார். "உவமை, உருவகம், தற்குறிப்பேற்றம், தொடர் உருவகம் (Allegory) முரண் (Antithesis) என்பன உருக்காட்சியுள் அடங்கும். சொற்களின் தொகுதியும் படிப்பவர் மனத்தில் உருக்காட்சியை உண்டாக்கும் திறனுடையது. வள்ளல் இராமலிங்கர் உவமை, உருவகம் ஆகியவற்றைப் பயன்படுத்துவதில் சிறந்து விளங்குகிறார்". (The life and teaching of St. Ramalingar)

எனவே, கருத்து வெளிப்பாட்டின் கருவியாக அவை விளங்கின என்று அறியமுடிகிறது. அத்தகைய காட்சிகள் தொடர் உருவகங்களாக அருட்பாவில் இடம்பெற்றுள்ளன. இராமலிங்கர் வெளிப்படுத்தும் அவ்வனுபவம் தாந்தேயின் ஆன்மீக அனுபவத்துடன் ஒப்பிடும் வகையில் அமைந்துள்ளது. "தாந்தே ஆன்மீக உணர்வுடன் கூடிய தம் சிந்தனைகளையும் கருத்துக்களையும் புலன் சார்பு மொழியமைப்புக்களில் கட்புல உருக்காட்சியில் மொழிகின்றார் ..... தம் ஆன்மீக உணர்வுச் சிந்தனைகளையும் கருத்துக்களையும், உலக உண்மையுடன் பொருத்திக் காட்டுகிறார். அவருடைய அவ்வான்மீக உணர்விற்கேற்ற கவிதை வடிவைப் பருப்பொருள் மூலம் காண்கிறார்" (பெரியபுராணத்தில் உருக்காட்சி) என்ற தாந்தே குறித்த விமர்சனம் இராமலிங்கருக்கும் பொருந்துவதாக உள்ளது.

அவ்வான்மீக அனுபவத்தில் கண்ட இறையுருவைப் பருப்பொருளாகக் கவிதையில் படைக்க நினைத்த இராமலிங்கர் அவ்வுருக்காட்சி என்ற பதத்தையே கையாளுகிறார். அது தனிச்சிறப்பு.

"இன்னமுதில் என்னுடைய அன்பென்னும் நறுங்கனியின்
இரதமும் என்தனிக்கணவர் உருக்காட்சி எனும்ஓர்
கண்ணல்உளே தனித்தெடுத்த தேம்பாகும் கலந்தே
களித்துண்டேன் பசிசிறிதும் கண்டிலன் உள்ளகத்தே"
(அனுபவமாலை)

என்று தன்னை மறந்த நிலையில் தோன்றுவதே உருக்காட்சி. தன்னை மறக்கச் செய்வதும் உருக்காட்சியே எனக் காட்டுகிறார் இராமலிங்கர். இங்கு அவர் குறிப்பிடும் கனி, தேம்பாகு என்பவை நடைமுறையில் சாத்தியமானவை அல்ல. அத்தகைய சாத்தியமற்ற கூறுகளும் கவிதையில் இடம்பெற்றுள்ளன. அவை அருளனுபவ நிலையில் அருளாளர்க்குக் கிட்டுவன.

## ஆன்மீக வேதியியல் மாற்றங்களைச் சுட்டிக்காட்டுதல் :

இதுவரை நிகழாத மாற்றங்களாக, இறையனுபவத்தில் கலந்த மாற்றங்கள் உள்ளன என்பதைச் சுட்டுவதே ஆன்மீக வேதியியல் மாற்றங்களைக் கூறுதலாகும். அவை உடல், மனம் சார்ந்த பொறிபுலன் மாற்றங்களாக எடுத்துரைக்கப்படுகின்றன இறைக் கலப்பு நிகழ்ந்தவுடன் அனைத்தும் மாண்டுவிட்டதாகத் திருவாசகம் குறிப்பிடுகின்றது.

*"கயல்மாண்ட கண்ணிதன் பங்கன் எனைக் கலந்து ஆண்டலுமே*
*அயல்மாண்டு அருவினைச் சுற்றமும் மாண்டு அவனியின்மேல்*
*செயல்மாண்ட வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ"*

(திருவாசகம்)

எனவரும் பாடலில் பின்வரும் வகையில் மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. இறைவன் வந்து கலந்தவுடன் அயல் மாண்டது சுற்றம், உலக, ஆசை, மீதமுள்ள மற்ற பொருட்களின் செய்திகளும் மாண்டுவிட்டது. எல்லாவற்றுக்கும் மேலாக எனது செயல் மாண்டது என்பதனால் ஆன்மீக மாற்றம் எவ்வெவ்வகைகளில் நிகழ்ந்துள்ளது என்பதை அறிய முடிகிறது.

இனி அருட்பாவில் அத்தகு மாற்றங்கள் நிகழ்ந்தனவாகச் சொல்லப்பட்ட பாடல்களை நிரல்படுத்திக் காணலாம்.

1. *"வான் செய்த மாமணி என்கையில் பெற்று நல்வாழ்வடைந்தேன்*
*ஊன் செய்த தேகம் ஒளிவடிவாக நின்றோங்குகின்றேன்"*

2. *"கோன்செய்த பற்பலகோடி அண்டங்களும் கூறவற்றில்*
*தான்செய்த பிண்டப் பகுதியும் நான் செயத்தந்தனனே"*

(அனுபவமாலை)

3. *"கட்டமும் கழன்றேன் கவலை விட்டொழித்தேன்*
*கலக்கமும் தீர்ந்தனன் பிறவிச்*
*சட்டமும் கிழித்தேன் தூக்கமும் துறந்தேன்*
*சாவையும் நோவையும் தவிர்ந்தேன்*
*சிட்டமும் அடைந்தேன் சிற்சபை உடையான்*
*செல்வ மெய்ப்பிள்ளை என்றொரு பேர்ப்*
*பட்டமும் தரித்தேன் எனக்கிது போதும்*
*பண்ணிய தவம் பலித்ததுவே"* (சிவபுண்ணியப் பேறு)

4. *"...... மனத்தை முற்றும் அடக்கி ஞானமெய்ந்நெறியில்*
*கோலைத் தொலைத்துக் கண்விளக்கம் கொடுத்து மேலும்*
*வேகாத காலைக் கொடுத்தாய்....."* (அருட்கொடைப் புகழ்ச்சி)

5. "ஐவர் செயும் தொழில் எனக்கே அளித்தாய் நின்அருளமுதென்
கைவரச் செய்துண் ணுவித்தாய் கங்கணம் என்கரத்தணிந்தாய்"
(திருவருட்கொடை)

6. "இருள் நச்சறுத்த முதற்தர வல்லீர்
எனைப்பள்ளியெழுப்பி மெய் இன்பந்தந்தீரே" (மெய் இன்பப்பேறு)

7. "அடிக்கடி என் அகத்தினிலும் புறத்தினிலும் சோதி
அருள் உருவாய்த் திரிந்து திரிந்தருள்கின்ற பொருளே" (அருள் விளக்க மாலை)

8. "பொதுவாகிப் பொதுவில் நடம்புகிரின்ற பேரின்பப் பொருள்தான் யாதோ
அதுநானாய் நான் அதுவாய் அத்துவிதம் ஆகின்றேன் அந்தோ"
(ஆனந்தப் பரிவு)

9. "ஊனே புகுந்ததென் று, ஒளிவண்ணம் ஆனதென் று சின்னம்பிடி"
(சின்னம்பிடி)

10. "பாலும் இன்சுவையும் போன்றென தாவி
பற்றின்ன் கலந்தனன்.....
சாலும் எவ்வுலகும் தழைக்க என்தனக்கே
சத்தியை அளித்தனன்...." (நற்றாய் செவிலிக்குக் கூறல்)

என்ற அகச்சான்றுகள் வழியாக அறியப்படும் செய்திகள்:- ஊனால் செய்யப்பெற்ற தேகம் ஒளிவடிவம் பெற்றது அண்டங்கள், பிண்டங்கள் உருவாக்கும் செயலறிந்தது கவலை, கலக்கம், தூக்கம், சாவு, நோவு அறியாது இறைவனின் செல்லப்பிள்ளையெனப் பட்டம் தரித்தது ஞானமெய்ந்நெறியில் வேகாத கால் பெற்றது; ஐந்தொழில் புரியும் ஆற்றல் கிட்டியது; மெய்யின்பம் அடைந்தது; சோதி வடிவில் இறைகாட்சி கிட்டியது கண்டு பூரித்தது; அத்துவிதம் ஆனது; ஒளிவண்ணமாய் மாறியது; எவ்வுலகும் தழைக்கச் சத்தி கிடைத்தது.

மேற்குறித்த மாற்றங்கள் அனைத்தும் சாதாரண நிலையில் கிடைப்பன அல்ல. ஆன்மீக அருளியலின் அப்பால் நிலையில் கிடைப்பன. எனவே அத்தகு மாற்றங்களை ஆன்மீக வேதியியல் மாற்றங்கள் எனல் பொருந்தும். அவற்றைப் பல நிலையில் திருஅருட்பா எடுத்துரைக்கிறது.

### மருத்துவக் குறிப்புகள் தருதல் :

அருளியல் அனுபவத்தில் உயர்நிலையினை அடைய அடைய

அத்தகு அருளாளர்கள் பலவகையான சக்திகளைப் பெறுகின்றனர். அவற்றுள் குறிப்பிடத்தக்கது மருத்துவ அறிவு பெறுதல். மானுட வாழ்விற்குத் தேவையான அத்தனை துறைகளிலும் எழும் பிரச்சனைகளுக்கு மருத்துவ ஆலோசனைகள் வழங்கும் விதமாகக் குறிப்புக்கள் திருஅருட்பாவில் ஏராளம் உள்ளன. அவை அகவாழ்வுக்கும் கருத்துரைக்கின்றன. புறவாழ்வுக்கும் வழிவகை பகர்கின்றன.

## அகவாழ்விற்கான ஆலோசனை :

திருஅருட்பாவின் உபதேசங்கள் என்ற தொகுதியில் இடம் பெறுகின்றது நித்திய கருமவிதி என்ற பகுதி. அதில் அகம், புறம் குறித்த நல்லொழுக்க ஆலோசனைகள் கூறப்பட்டுள்ளன. அன்றாடம் பொழுது புலரும்வேளை தொடங்கி அந்தி சாய்ந்த பின் கண்ணுறங்கும வரை மேற்கொள்ள வேண்டிய செயல்கள் எவ்விதத்தில் அமைந்தால் நலம் பயக்கும் என்பதனை எடுத்துரைக்கிறார் இராமலிங்கர். அதில் வரும் ஒரு பகுதி அகவாழ்விற்கான மிகச் சிறந்த ஆலோசனையாக விளங்குகிறது.

"பெண்களுடன் தேகசம்பந்தம் செய்யவேண்டில், முன் ஒரு நாழிகை பரியந்தம் மனதைத் தேக சம்பந்தத்தில் வையாது வேறிடத்தில் வைத்துப் பின் சம்பந்தஞ் செய்தற்குத் தொடங்கல் வேண்டும். தொடங்கிய போது அறிவு விகற்பியாமல்-என்றால், வேறுபடாமல்-மன முதலிய கரண சுதந்திரத்தோடு, தேகத்திலும் கரணங்களிலுஞ் சூடு தோன்றாமல், இடதுபுறச் சாய்வாகத் தேக சம்பந்தம் செய்தல் வேண்டும். **புத்திரனைக் குறித்த காலத்தன்றி மற்ற காலங்களில் சுக்கிலம் வெளிப்படாமல் இருக்கத் தக்க உபாயத்தோடு தேக சம்பந்தஞ் செய்தல்வேண்டும்.** அவ்வுபாயமாவது பிராணவாயுவை உள்ளேயும் அடக்காமல் வெளியேயும் விடாமல் நடுவேயுலாவச் செய்து கொள்ளுதலாம். ஒரு முறையன்றியதன் மேலுஞ் செய்யப்படாது. தேக சம்பந்தஞ் செய்தபின், தேக சுத்தி செய்து திருநீறணிந்து சிவத்தியானஞ்செய்து பின்பு படுக்க வேண்டும். படுக்கும்போது, இடது கைப்பக்கமாகவே படுத்தல் வேண்டும். எந்தக் காலத்தில் எது குறித்துப் படுத்தபோதிலும் இடதுகைப்பக்கமாகவே படுத்தல் வேண்டும். பின்பு ஏழரை அல்லது பத்தரை நாழிகையளவு நித்திரை செய்தல் வேண்டும். (7½ நாழிகை-3 மணி 10 நாழிகை - 4 மணி) அதன்பின் விழித்துக்கொண்டு நல்ல சிந்திப்புடனிருத்தல் வேண்டும்.

இரவில் தேக சம்பந்தம் 4 தினத்திற்கொரு விசை செய்தல் அதமபக்ஷம். 8 தினத்திற்கொரு விசை செய்தல் மத்திம பக்ஷம். 15

தினத்திற்கொரு விசை செய்தல் உத்தம பக்ஷம். அதன் மேற்படில் சுக்கிலம் ஆபாசப்பட்டுத் தானே கழியும். 4 தினத்திற்கொரு விசை செய்யில் சுக்கிலம் நெகழ்ச்சிப்பட்டுச் சந்ததி விருத்தியைக் கெடுக்கும், ஆதலில் அதம பக்ஷமாயிற்று". (உரைநடைப் பகுதி. ப.243)

என்ற அறிவுரையானது தேக சம்பந்தம் செய்யும் முறை, நேரம், மனநிலை ஆகியவற்றை எடுத்துரைப்பதாக உள்ளது. இனி எப்பொழுதில் எல்லாம் தேக சம்பந்தம் கூடாதெனவும் குறிப்பிடுகிறார்.

"காலைப்புணர்ச்சி, பகற்புணர்ச்சி, அந்திப்புணர்ச்சி, இரவு முன் பங்குப்புணர்ச்சி, காலைப்போஜனம், அந்திப்போஜனம் முதலானவை இல்லாதிருத்தல். ஆகாரம்அரை, நித்திரை அரைக்கால், மைதுனம் வீசம், பயம் பூஜ்ஜியம் ஆகப்பெறல்" என்பது தேக சம்பந்தம் தவிர்க்கின்ற பொழுதுகளுரைத்தலாக உள்ளது. எனவே, மானிடர்களின் காதல் வாழ்வு செம்மையுற அமைவதற்குச் செய்யவேண்டிய முறைகளை ஆலோசனைகளாகத் திருஅருட்பா வழங்குகிறது.

## புற வாழ்விற்கான மருத்துவக் குறிப்புகள் :

தாம் வணங்கும் இறைவனையே மருந்தாகக் காண்கிறார் இராமலிங்கர். பிற அருளாளர்களிடம் காணமுடியாத தனிச்சிறப்பாக அச்சிந்தனை விளங்குகிறது. நல்ல மருந்து, ஞான மருந்து என்றும் இறையை அழைக்கின்றார். இறை மருத்துவப் பண்புகளைப் பெற்றுச் சிறந்த மருந்தாக விளங்குவதை,

"எண்ணுக் கடங்கா மருந்து என்னை
ஏதக்குழி விட்டெடுத்த மருந்து" (ஞான மருந்து)

என்று குறிப்பிடுகிறார். மேலும் முப்பத்துநான்கு சிந்துவகைப் பாடல்களில் இறைவனை மருந்தாக உருவகித்துப் பாடியுள்ளார்.

புற வாழ்வில் அன்றாடம் மனிதன் மேற்கொள்ள வேண்டிய வற்றை நித்தியகரும விதி எனும் பகுதியில் மூன்று பகுதிகளாகப் பகுத்துக் கூறுகிறார். அவை சாதாரணவிதி, பொது விதி, சிறப்பு விதி என்பன. அவற்றில் உணவு முறை, உறங்கும் முறை, பருகும் விதம், கொள்ள வேண்டியன, தள்ள வேண்டியன என அனைத்துக் கோணங்களிலும் கருத்துக்கள் கூறப்பட்டுள்ளன. உணவு முறை யோடு அமையாது செறிமானத்திற் கான வழி முறையும் கூறுகிறார்.

"ஆறு மாதம் அல்லது மூன்று மாதத்திற்கொரு தரம், வெள்ளைக் காக்கட்டான் முதலானவைகளால் விரேசனம் (பேதி) வாங்கிக் கொள்ளுதல்" என்று குறிப்பிடுகிறார்.

தேகேந்திரிய கரண குற்றங்கள் எனப் பின்வருவற்றைக் குறிப்படுகிறார். "கடுநடை, ஓட்டம், பெருஞ்செயல், பேராசை, இசையாடுதல், வழக்காடுதல், பெருநினைப்பு, பெருஞ்சிரிப்பு, பெருந்துயர், மிகுபார்வை, ஊன்றிக்கேட்டல், துர்க்கந்த நற்கந்த முகர்தல், சுவை விரும்பல், பேருண்டி, பெருந்தூக்கம் வீண்செயல், பெருமுயற்சி, விளையாட்டு, மலமடக்கல், சலமடக்கல், தாகமடக்கல், பெருநீர் குடித்தல், சயன உணர்ச்சி, பயம், அகங்காரம், இடப்பம், பேராசை, உலோபம், கோபம், மோகம், மதம் இவை முதலிய தேகேந்திரிய கரண குற்றங்களை யடையாதிருத்தல்" எனக் கோடிட்டுக் காட்டுகிறார்.

இராமலிங்கர் தரும் மருத்துவ, மூலிகைக் குண விளக்கங்கள் வியப்பிற்குரியவையாக உள்ளன. சித்த மருத்துவத் துறை விளக்கம்பெறுதற்கு ஏதுக்கள் அதிகம் உள்ளன. திருஅருட்பா, இவ்வாறு அக, புற வாழ்வுக்கான மருத்துவக் குறிப்புகளை வழங்கி மக்களை நல்வாழ்வு வாழ அழைக்கிறது.

**அனுபவ நிலைகளைக் குறியீடாகத் தரல் :**

ஆன்மீக அருளியல் அப்பாலை நிலையில் அருளாளர்கள் பெரும் அனுபவங்கள் எண்ணிடலங்கா; சொல்லிலும் அடங்கா. அத்தகைய அனுபவங்கள் சாதாரண மானுடர்க்கு விளங்காத புதிர்த்தன்மையுடனும், இருண்மைநிலையுடனும் உள்ளன. அவ்வனுபவங்களை அவர்கள் விளக்கமாகக் குறிப்பிடாது குறியீட்டு நிலையிலேயே எடுத்துரைக்கிறார்கள். அத்தகைய அனுபவ நிலைக்குறியீடுகள் திருஅருட்பாவில் அதிக இடங்களில் இடம் பெற்றுள்ளன. அவற்றைப் பின்வருமாறு பகுத்து எடுத்துரைக்கலாம்.

**ஒலி கேட்டல் :**

"என்புருப் பொன் உருவாக்க எண்ணி வருகின்றார்
என்று திருநாத ஒலி இசைக்கின்றதம்மா.

**மணம் நுகர்தல் :**

அ. திருமேனி வழங்க தெய்வ மணந்தான்
விரச எங்கும் வீசுவது நாசி உயிர்த்தறிக.

ஆ. கற்பூரம் மணக்கின்ற தென்னுடம்பு முழுதும்
கணவர் திருமேனியிலே கலந்தமணம் அதுதான்.

**அமுதம் பருகல் :**

அ. .....திருச்சபையின் படிஏறித் தலைவர்
திருஅடி ஊறும் அமுதம் பருகுகின்றேன். (அனுபவமாலை)

ஆ. 'மதிமண்டலத் தமுதம் வாயார உண்டே
பதிமண்டலத் தரசு பண்ண....." (சிவயோகநிலை)

**அருள் நாட்டைக் கைப்பற்றுதல் :**

"சித்தெல்லாம்வல்ல அருள்நாட்டை
எலாம் கைக்கொண்டேன்" (அடிமைப்பேறு)

**நாதம் ஒலித்தல் :**

"மன்னர்நாதர் அம்பலர் வந்தார் வந்தார் என்றுதிருச்
சின்ன நாதம் என்னிரண்டு செவிகளினுள் சொல்கின்றதே"
(என்ன புண்ணியம் செய்தேனோ)

**ஒளி தோன்றல் :**

"திரையற்றுவிட்டது செஞ்சுடர் தோன்றிற்று
பரை ஒளி ஓங்கிற்றென்று உந்தீபற" (திருவுந்தியார்)

**அற்புதக் காட்சி :**

ஆணிப் பொன்னம்பலக் காட்சி என்ற பகுதி முழுமையும் அற்புதக் காட்சிகளின் தொகுப்பு, அக்காட்சியில் ஜோதிமலை தோன்றியது; பின் அதில் ஒரு வீதி உண்டானது. வீதியின் நடுவே மேடை ஒன்று இருந்தது. மேடை மேல் ஏறினால் அங்கொரு கூடம் இருந்தது. கூடத்தை நாட அக்கூடம் மேல் ஏழ்நிலை மாடம் இருந்தது. ஏழ்நிலைக்குள்ளும் இருந்த அதிசயம் என்னென்று சொல்வது. ஓர் நிலை தன்னில் ஒளிர்முத்து வெண்மணி சீர்நீலம் ஆனது. மற்றொரு நிலையில் கருநீலம் சிவந்த பவளமானது. மற்றோர் நிலையில் மரகதப் பச்சை செம்மாணிக்கம் ஆனது. பின்னோர் நிலையில் பெருமுத்து வச்சிரப்பேர் மணி ஆனது. வேறோர் நிலையில் மிகும் பவளத்திறள் வெண்மணி ஆனது. புகலோர் நிலையில் பொருந்திய பன்மணி பொன்மணி ஆனது. பதியோர் நிலையில் பகர் மணி எல்லாம் படிகமானது.

ஏழ்நிலைக்கும் மேலே பொற்றம்பலம் இருந்தது. அப்பொற்றம்பலம் கண்டேறும்போது அங்கே எதிர்ந்த வகை சொல்வது அளவிலடங்காது. ஆங்காங்கே சத்திகள் ஆயிரமாயிரமாக வந்தார்கள். வந்து மயக்க மயங்காமல் நான் அருள்வல்லபம் பெற்றேன். வல்லபத்தால் அந்த மாதம் பத்தேறி மணிமுடி கண்டேன். மணிமுடி மேலோர் கொடுமுடி நின்றது. கொடுமுடி மேல் ஆயிரத்தெட்டு மாற்றுப் பொற்கோயில் இருந்தது. கோயிலைக் கண்டங்கே கோபுர வாயிலில் கூசாது

சென்றேன். அக்கோபுர வாசலினுள் கோடிக்கணக்கான சத்திகள் சத்தர்கள் இருந்தனர். ஆங்கிருந்தவர்களின் வண்ணம் வெள்வண்ணம் செவ்வண்ணமும் ஐவண்ணமாகும். அவர்கள் எல்லாம் இங்கார் இவர் என்னவும் அப்பாலே சென்றேன். அங்கோர் திருவாயிலில் ஐவர் இருந்தனர்.

ஆங்கவர் வழிகாட்ட மேலோர் மணிவாயில் உற்றேன். எண்ணும் அவ்வாயிலில் பெண்ணோடாணாக இருவர் இருந்தனர். அங்கவர் காட்ட அணுக்கத் திருவாயில் அன்பொடு கண்டேன். அத்திருவாயிலில் ஆனந்தவல்லி என்அம்மை இருந்தாள். அம்மையைக் கண்டேன், அவளருள் கொண்டேன், அமுதமும் உண்டேன். தாங்கும் அவளருளாலே நடராஜர் சந்நிதி கண்டேன். சந்நிதியில் சென்று நான் பெற்ற பேறது சாமி அறிவாரடி. ஆணிப்பொன்னம்பலத்தே கண்ட காட்சிகள் அற்புதக்காட்சியடி (ஆணிப் பொன்னம்பலக் காட்சி) என்று இராமலிங்க அடிகள் படிப்பவரது மனக்கண்முன் அக்காட்சிகளைக் கொண்டுவர முயலுகிறார். ஆயினும் அவற்றில் சில விபரமாக இருந்தன. படிப்பவர் விளக்கம் பெறும் வகையில் இல்லை.

ஆணிப்பொன்னம்பலம் எங்குள்ளது, எவ்வாறு சென்றார், யாரெல்லாம் உதவினர், எவரையெல்லாம் கண்டுணர்ந்தார். அமுதம் பருகினார் என்றெல்லாம் உரைத்த இராமலிங்கர் சந்நிதியில் தான் பெற்ற பேறு மட்டும் சாமி அறிவாரடி எனக் கூறிவிட்டார். கடந்து வந்த நிலைகளைக் கூறியவர் கலந்த நிலையைக் குறிப்பிடவில்லை. வழி வகை கூறியவர் பயனெவ்வாறு இருந்தது என்பதைப் பகரவில்லை. அவ்வனுபவங்களை அருளாளர் ரகசியமாகவே வைத்திருந்தனர்.

**மயில் குயிலாதல் :**

"வானத்தின் மீது மயிலாடக் கண்டேன் மயில் குயில் ஆச்சுதடி"
(அருட்காட்சி)

மயில் குயிலாதல் என்பது நாதவிந்து தத்துவம் என்பர்.

**வீதிகள் பலவகையின :**

ஆரணவீதி, ஆகம வீதி, வேதாந்த வீதி, சித்தாந்த வீதி, நாதாந்த வீதி, போதாந்த வீதி, யோகாந்த வீதி, கலாந்த வீதி அருளான வீதி, அருட்சோதி வீதி எனப் பல வகையான வீதிகளில் நடமாடச் செய்தான் இறைவன் என்கிறார் இராமலிங்கர். ஒவ்வொரு வீதியிலும் ஆடச் செய்த பின்னர் இறுதியில் அருட்ஜோதி வீதியில்

ஆடல் செய்ததாகக் குறிப்பிடுகிறார். அருட்ஜோதி வீதியின் தன்மை யாதெனின்,

“இருட்சாதித் தத்துவச் சாத்திரக்குப்பை
இருவாய்ப்புப் புன்செயில் எருவாக்கிப்போட்டு
மருட்சாதி சமயங்கள் மதங்களாச்சிரம
வழக்கெலாம் குழிக்கொட்டி மண்மூடிப்போட்டுத்
தெருட்சாருஞ் சுத்த சன்மார்க்க நன்வீதி
சிறந்து விளங்கு ஓர் சிற்சபை காட்டும்
அருட்ஜோதி வீதியில் ஆடச் செய்தீரே” (சிவானந்தத் தழுங்கல்)

என்ற பாடலில் விளக்கம் பெற்றுள்ளது. இவ்வருள் அனுபவ நிலையில்தான் மறுமலர்ச்சிச் சிந்தனைகளும் தோன்றுகின்றன என்பதற்கு இப்பாடல் சான்றளிக்கின்றது.

**வெள்ளம்பரவல் :**

“இரவில் பெரிய வெள்ளம்பரவி எங்கும் தயங்கவே
யானும் சிலரும் படகில் ஏறியே மயங்கவே
விரைவில் தனித்தந்தென்னை ஒருகல் மேட்டில் ஏற்றியே
விண்ணில் உயர்ந்த மாடத்திருக்க விதித்தாய்” (மெய்யருள் வியப்பு)

**நீர்ப்பெருக்கு :**

“இதயம் உருகித் தளதளவென்றிளகி இளகித் தண்ணீராய்
அருத்திப் பெருநீர் ஆற்றோடு சேர்ந்தன்புப் பெருக்கில்
கலந்தது” (இறை இன்பக் குழைவு)

**ஏறி இறங்குதல் :**

தியான முறையில் குண்டலினி சக்தி பெறுவதை உரைப்பது என்பர்.

“ஏறிஇறங்கி இருந்தேன் இறங்காமல். ஏறவைத்தீர்”.

**சாகாத கல்வி, வேகாத கால் :**

ஏகாத கல்விதான் சாகாத கல்வியென்றே
காதலாற் சொன்னீர் வாரீர்
வேகாத காலினீர் வாரீர்.

**ஏசாத தந்திரம் பேசாத மந்திரம் :**

*ஏசாத தந்திரம் பேசாத மந்திரம்*
*ஈசான மேலென்றீர் வாரீர்.*

**ஓலக்கபாடம் திறத்தல் :**

*ஓலக்கபாடத்தைச் சாலத் திறந்தருள்*
*ஓலக்கங் காட்டினீர்" (அம்பலவாணர் வருகை)*

**சுத்த வேதாந்த வீடு :**

*"மெய்யே மெய்யாகிய ஜோதி - சுத்த*
*வேதாந்த வீட்டில் விளங்கிய ஜோதி" (சிவசிவஜோதி)*

**சோதி வளநாடு :**

*"துரியமலை மேல் உளதோர் சோதிவளநாடு*
*தோன்றும்' அதில் ஐயர்நடம் செய்யுமணிவீடு*
*தெரியும் அது கண்டவர்கள் காணில் உயிரோடு*
*செத்தவர் எழுவார் என்று கைத்தாளம் போடு" (கண்புருவப் பூட்டு)*

**அருட்செங்கோல் பெறல் :**

*"அருட்பெருஞ்சோதித் தெள்ளாரமுதம் தந்தழிவற்றதோர்*
*அருட்பெருஞ்சோதிச் செங்கோலும் கொடுத்தனன் அற்புதமே"*
*(தனித்திரு அலங்கல்)*

**சொல் விளையாட்டு :**

*அருள் அனுபவப் பாடல்களின் செல்நெறியில் சொற்களின் விளையாட்டும் இடம் பெறுகிறது. "இராமலிங்கர் அகரத்தில் தொடங்கி ஔகாரம் வரை மூன்றடிச் சிந்து பாடியுள்ளார். உயிரெழுத்தோடு மட்டுமன்றி உயிர்மெய்யெழுத்திலும் தொடர்ந்து பாட எண்ணம் கொண்டிருக்கிறார்" (அம்பலவாணர் வருகை) ககரத்தில் மூன்று பாடல்கள் உள்ளன. அதனைத் தொடர்ந்து பாடல்கள் ஆறாந்த திருமுறையில் இல்லை. எனினும் பாடிய அவரது பாடல்கள் அச்சேறுமுன் விடுபட்டனவா? அன்றிப்பாடுதற்குத் திட்டமிட்டுப் பின் கைவிடப்பட்டனவா என்பது ஆய்விற்குரியதே.*

*மேற்குறிப்பிட்ட அனைத்துக் குறியீடுகளுமே இன்றளவிலும் விவாதத்திற்குரியனவாக உள்ளன. எனினும் அருளாளர்கள் தம் அருள் அனுபவங்களைக் குறியீடுகளாகவே வெளியிட்டு வந்தனர் என்பது தெளிவு.*

## 4. சூபிக்கொள்கையும் திருஅருட்பாவும்

சூபித்துவம் (Sufism) என்பது இஸ்லாமிய மதத்தை அடித்தளமாகக் கொண்டது. இஸ்லாமியமும், அத்வைதமும் இணைந்து உருவானதே சூபித்துவம் என்ற கருத்தும் நிலவுகிறது, இந்தியாவில் இந்து, முஸ்லீம் மக்களிடையே அதிக பேதங்கள் காணப்பட்ட இறுக்கமான சூழலில் தோன்றியதே சூபித்துவம். மத பேதங்களைக் களையவேண்டுமெனத் தோன்றிய பரஸ்பரத் தொடர்பின் விளைவே ஒரு பொது ஆன்மீகக் கருத்து உருவாகக் காரணமாயிற்று.

இறைவன்மீது உணர்ச்சிமயமான அன்பைக் காட்டல், சமய ஒழுக்கத்தைப் புலப்படுத்தும் புறச்சின்னங்களைத் தவிர்த்தல், உலக ஆசைகளை அடக்கியாளுதல் முதலியவை முக்கிய அம்சங்களாயின. இந்து மதத்தின் பக்திஇயக்கமும் இஸ்லாமிய சமயத்தின் சூபிக் கொள்கையும் அக்கோட்பாடுகளை ஏற்றுக் கொண்டு அவற்றைப் பரப்பின. அது கடும் சட்டதிட்டங்களையும், கட்டுப்பாடுகளையும் தளர்த்தியதுடன் பரஸ்பர கருத்துப் பரிமாற்றத்திற்கும் உடன் பாட்டிற்கும் உதவும் புதிய வழிமுறைகளையும் தோற்றுவித்தது. அதனால் ஒரு புதிய சகாப்தம், புதிய சமுதாயம் தோன்றுவதற்குரிய அறிகுறிகள் தெளிவாகத் தென்படலாயின.

"பக்தி இயக்கமும் சூஃபிக் கொள்கையும் குறிப்பிடத்தக்க ஒற்றுமைகளைக் கொண்டிருந்தன. பரந்த மனப்பான்மையும், சமரச உணர்வும் படைத்த இறையறிவு அவற்றின் தனிச்சிறப்பாகும். அவற்றின் அடிப்படைக் கட்டுக்கோப்பு, அவற்றைத் தோற்றுவித்ததும், அவற்றால் உண்மையுணர்வுடன் பின்பற்றப் பட்டதுமான சமய நெறியால் தீர்மானிக்கப்பட்டது. அதே நேரத்தில் அவ்விரண்டு பிரபல இயக்கங்களும் மிகத் தெளிவாக ஒன்று மற்றொன்றின் நல்லுறவுக்கு உதவும் வகையில் சிறப்புப் பண்புகளை ஓரளவு பெற்றிருந்தன" (ஹர்பன்சிங் - குருநானக் ப-49)

அவ்வகையான ஒப்பிட்டுச் சிந்தனைத் தொடர்ச்சியில் சூபித்துவத்தையும் திருஅருட்பாவையும் ஒப்பிட்டுக் காணும் நோக்கில் இவ்வியல் அமைகின்றது.

### சூபித்துவம் - அறிமுகம் :

சூபித்துவத்தின் தோற்றச் சூழலை முன்னர் பார்த்தோம். இங்கே சூபித்துவம் இன்னதென விளக்கப்படுகின்றது.

"சூபித்துவம் என்பது இஸ்லாமிய சமயத்தின் ஆன்மீக அனுபூதி நிலை. அது இஸ்லாமியத்தின் இதயம் போன்றது" ...2 என்று வில்லியம் ஸ்டுடார்ட் (William Stoddart) என்பவர் சூபிஸம் (Sufism) என்ற நூலில் குறிப்பிடுகிறார்.

சூபித்துவம் என்பது இஸ்லாமியத்தின் வளர்ச்சியே. ஒன்றிலிருந்து மற்றொன்று பிரிக்கவியலாக்கலப்பு உடையது என்பதையும் அவர் பின்வருமாறு சான்றுகாட்டி விளக்குகிறார்.

"இந்து மதத்தைப் புறக்கணித்த வேதாந்தமும், புத்த மதத்தைப் புறக்கணித்த சென்புத்தமும் (Zen Buddhism) எவ்வாறு இருக்கவியலாதோ அதைப் போன்றதே இஸ்லாமியத்தைப் புறக்கணித்த சூபிஸமும்" என்பார்.

அவரது கூற்று சூபித்துவத்தின் தோற்றுவாய் இஸ்லாமியம் என்பதைத் தெளிவுபடுத்துகிறது.

"சூபி தத்துவத்தை ஒரே சொல்லில் குறிப்பிடுவதென்றால் இறை காதல் என்று கூறிவிடலாம்" அது இஸ்லாமியக் கலைக்களஞ்சியம் தரும் விளக்கமாகும்.

இறைவனோடு கொள்ளும் அன்பு என்ற நோக்கில் திருவருட்பாவையும் சூபித்துவத்தையும் ஒப்பிட்டு ஆய்வது பொருத்தமுடையதாகிறது.

## சூபித்துவம் - வரையறை :

சூபித்துவத்திற்கும் இஸ்லாமியத்திற்கும் இடையே உள்ள இணக்கநிலை யாவரும் அறிந்ததே. இப்பகுதி சூபித்துவம் என்பதன் வரையறையை எடுத்துக் கூறவிருக்கிறது.

## வில்லியம் ஸ்டூடார்ட் தரும் விளக்கம் :

"அராபியத்தில் சூபித்துவம் என்பது தஸவுஃப் (Tasawwuf) என்றழைக்கப்படுகிறது" என்பார் வில்லியம். இது சூபித்துவம் என்பதற்கு அராபிய மொழியில் வழங்கப்படும் சொல்வடிவத்தை மட்டுமே குறிப்பிடுகிறது.

## இஸ்லாமியக் கலைக்களஞ்சியம் தரும் விளக்கம் :

தஸபுஃப் என்பதற்கான விளக்கத்தைப் பின்வருமாறு இஸ்லாமியக் கலைக்களஞ்சியம் குறிப்பிடுகிறது.

"ஆன்மீக இறை ஞானத்திற்கு தஸவுஃப் என்று கூறப்படுகிறது. ஞான வழியில் அடியெடுத்து நடப்பவர்களுக்கு சூஃபிகள் என்று

கூறப் படுகிறது. இந்த சூபி என்ற சொல் தூய்மை எனப் பொருள் படும் ஸபாவிலிருந்து தோன்றியது" எனத் தரப்பட்டுள்ள விளக்கத்தினின்றும் இறையை அடைவதற்கான ஞானவழி எனப்து பெறப்படுகின்றது.

## பாயஸீத் பிஸ்தாமி (ரஹ்) தரும் விளக்கம் :

"தூக்கத்தைத் துறந்து துன்பத்தை நுகர்வதாகும்" என்பார் பாயஸீத் பிஸ்தாமி (ரஹ்). அழுதால் அவனைப் பெறலாமே என்ற தொனியில் அவரது கருத்து அமைந்திருப்பதனை உணரமுடிகிறது. சுடச்சுட ஒளிரும் தவம் என்ற சிந்தனை ஓட்டமும் வெளிப்படுகிறது.

## அதா (ரஹ்) தரும் விளக்கம் :

"தஸவுஃப் என்பது இறைவனை அணுகி இருப்பதாகும்" என்ற அதாவின் விளக்கம் இறைவனுக்கும் உயிருக்கும் அணுக்க உறவு ஏற்படும் என்பதனைச் சுட்டுகிறது.

மேற்குறித்த விளக்கங்களினின்றும் சூபித்துவம் என்பதன் வரையறையைப் பெறமுடியும்.

ஆன்மீக ஞானவழியில் இறைவனை அணுகுதற்கும் இறையின் அணுக்கத்தைப் பெறுவதற்கும் மேற்கொள்ளப்படும் தவ வழிமுறையே சூபித்துவம் அல்லது தஸவ்வுஃப் எனப்படுகிறது.

## சூபிகளின் பண்புகள் :

சூபிகள் எத்தகைய பண்புகளைப் பெற்றிருப்பர் என்ற வினாவிற்கு முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானி (ரஹ்) என்பவர் விடையளிக்கிறார்.

"1. இப்ராஹீம் (அலை) அவர்களின் வள்ளன்மை (ஸகவாத்)
2. இஸ்ஹாக் (அலை) அவர்களின் உள்த்தைக் கொண்டு மனநிறைவடையும் இயல்பு (ரிளா)
3. ஐயூப் (அலை) அவர்களுடைய பொறுமை (ஸபூர்)
4. ஜகரிய்யா (அலை) அவர்களுடைய மன்றாடும் இயல்பு (முனா ஜாத்து)
5. யஹ்யா (அலை) அவர்களுடைய இறைவனை அணுகும் இயல்பு (குர்பத்)
6. மூஸ ா (அலை) அவர்கள் போன்று நீண்ட அங்கியணியும் இயல்பு

7. ஈஸா (அலை) அவர்கள் போன்று இறை வழியில் பயணம் (ஸபர்) செய்தல்
8. முகமது (ஸல்) அவர்களைப் போன்று ஏழ்மையை (ஃபக்ரை) தன்னுடைய (ஃபஹ்ர்) பெருமையாகக் கொள்ளும் இயல்பு" (இஸ்லாமிய கலைக் களஞ்சியம், தொகுதி II - ப-296)

மேற்குறித்த எட்டுப் பண்புகளுள் வள்ளன்மை, உள்ளத்தைக் கொண்டு மனநிறைவடைதல், பொறுமை, மன்றாடுதல், இறைவனை அணுகுதல், இறைவழியில் பயணம் மேற்கொள்ளுதல் என்ற ஆறு பண்புகளும் இராமலிங்கரிடம் இருந்ததைத் திருஅருட்பாவால் அறியமுடிகிறது.

ஆறாவது பண்பாகிய நீண்ட அங்கியணிதல் என்பது ஒரு புறக்கோலமே. இராமலிங்கர் முகமும் முன்னங்கைகளும் மட்டுமே தெரிகின்ற வகையில் முக்காடிட்டவாறு துவராடை அணிந்து வந்தார். தமிழக பக்தி மரபில் யாரும் அத்தகைய உடையமைப்பை முன்னர்ப் பெற்றிருக்கவில்லை. அது சூபித்துவம் குறிப்பிடும் அங்கி போலவுமில்லை. (பின்னிணைப்பு படம்-1 காண்க).

ஏழ்மையைப் பெருமையாகக் கொள்ளும் எட்டாவது பண்பில் இராமலிங்கர் சிறிது மாறுபடுகிறார். திருஅருட்பா உரைநடைப் பகுதியில் இடம்பெற்றுள்ள அவரது கடிதங்கள் சான்றாகின்றன.

திருமுகம் ஐந்தில் "அசலார் யாராவது இவ்விடம் வருகின்றவரிடத்தில் ஒன்று அல்லது லாங்கிளாத்து பீசு (துவராடையின் பொருட்டு) வாங்கி அனுப்பினால், அதன் கிரயத்தைப் பின்பு செலுத்திவிடலாம். இதற்குப் பிரயாசம் வேண்டாம்" என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இங்கு அடுத்தவரிடம் கடன் பெற்றுத் திருப்பிக் கொடுக்கும் எண்ணம் புலப்படுகிறது.

திருமுகம் ஏழில் "இனி திரவிய விஷயத்தில் என்னைக் குறித்து விசேஷ முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டாம்" எனக் குறிப்பதால் அடுத்தவர்க்குத் தொந்தரவு தரவேண்டாமென ஒதுங்கும் நிலையில் வேண்டாமை வெளிப்படுகின்றது.

திருமுகம் ஆறில், "வருத்தல் பாராது வரவிடுத்த ஒரு பீசும் ஒன்பது லட்சம் பீசுகளாகக் கொண்டேன். இதுவே அமையும். இனி வருத்தம் எடுத்துக் கொள்ளவேண்டாம். பின்பு பார்த்துக் கொள்ளலாம்" என்று கூறுவதால் பிறர் உதவியைப் பெரிதெனப் போற்றும் தன்மையையும், அதனோடு இதுவே அமையும் என்ற நிறைவையும் கண்டுகொள்ள முடிகிறது.

திருமுகம் எட்டில், "தாம் ரிஜிஸ்டர் செய்வித்து அனுப்பிய

கடிதமும் அதற்குள் அடங்கிய இருபத்தைந்து ரூபாய் நோட்டும் தாமசப் படாமல் வந்து சேரப் பெற்றுக்கொண்டேன். இது விசயத்தில் தமக்கு விசேஷம் பிரயாசம் நேரிடச் செய்கிறேன் ஆனால், இது குறித்து விசேஷ முயற்சியும் பிரயாசமும் தமக்கு நேரிடுமே என்ன செய்வது என்கிற விசாரமும் ஒரு பக்கம் உடையனவாகவேயிருக்கிறேன். .....மற்ற இடங்களில் கனவிலும் லட்சியஞ்செய்து குறிக்கப்படாத குறிப்பைத் தம்மிடத்தே குறித்தேன்..... இவைதாம் வாங்குகின்ற இடமும் வாங்குகிற வகையும் அதற்கு எல்லையிட்டுக் கொண்ட வண்ணமும் மற்றவைகளையும் தெரிவிக்கவேண்டும்'' என்ற கோரிக்கைகளின் வழி கடன் பெறுகிறோமே என்ற தயக்கமும், தான் கடன் பெறுவதை மற்றையோர் அறிந்துவிடக்கூடாது என்ற நடுக்கமும், அடுத்தவர்க்குத் தம்மால் சிரமம் நேரிடுகிறதே என்ற ஆதங்கமும் வெளிப்பட்டு நிற்கின்றன. எனவே, தோழனோடும் ஏழமை பேசேல் என்ற நடைமுறை உயர்விதியின்படி ஏழ்மை என்பதை இராமலிங்கர் பெருமையாக எண்ணவில்லை; உலகோர் அனைவருக்கும் தெரிந்துவிடக் கூடாது என்ற நிலையில்தான் ஏழ்மையை எண்ணியிருந்தார் என்பது புலனாகிறது.

**சூபிகள் :**

சூபிகள் என்பவர் யார் என்பதையும், சூபிகளின் திருக்கூட்டத்தையும் இப்பகுதி விளக்க முற்படுகிறது.

"இறைஞானிகள் சூஃப் (கம்பளி) ஆடையை அணிந்திருந்ததனால் சூஃபிகள் என்று அழைக்கப்பட்டனர்.. இஸ்லாமிய ஆன்மீக ஞானிகள் கம்பளி உடையையே அணிந்திருந்ததால் அவர்களுக்கு இப்பெயர் ஏற்பட்டிருக்கலாம். ஆனால், கம்பளி உடை அணிந்தால் மட்டுமே ஒருவர் சூஃபியாகிவிட இயலாது, இதைப் பற்றி ஹிஜ்வீரி என்பவர் கூறும்போது தூய்மை (ஸஃபா) இறைவனிடம் இருந்து கிடைக்கும் பேரருளாகும். கம்பளி (சூஃப்) கால்நடைகளின் மூலம் பெறும் உடையாகும்" என்று குறிப்பிட்டுள்ளார்.

எனவே, இறையருளின் வழி தூய்மையடைந்தவர்களே சூஃபிகள் என்பது பெறப்படுகிறது. இனி, சூஃபிகளின் திருக்கூட்டத்தை இஸ்லாமியக் கலைக்களஞ்சியம் உலகிற்கு எடுத்துக்காட்டுகிறது.

முன்னர்க் குறிப்பிட்ட "சூபித்துவப் பண்புகளை அண்ணல் நபி (ஸல்) அவர்களும், அவர்களின் தோழர்களும் குறிப்பாகத் திண்ணைத் தோழர்களும் அவர்களுக்குப் பின் வந்த தாபியீன்களும்

அவர்களுக்குப் பின்னர் வந்த தபுவுத்தாபியீன்களும் பெற்றிருந்தினர்" என்றதனால் பல சூபிகளின் தொடர்ந்த வருகை நிலை விளக்கம் பெறுகிறது.

இராமலிங்கரும் குறிப்பிட்டு இன்னாரெனச் சொல்லாது வாழையடி வாழையாக வந்த திருக்கூட்ட மரபினில் யானும் ஒருவனன்றோ எனக் குறிப்பிட்டது ஒப்புநோக்குதற்குரியது. இனி, சூபி அத்தார் என்பவரின் இறைக் கொள்கையோடு திருஅருட்பாவை ஒப்பிட்டுக் காணலாம்.

## சூபி அத்தார் காட்டும் படி நிலைகளும் திருஅருட்பாவும்:

சூபி அத்தார் இறையை அடைவதற்கு ஏழு படிநிலைகளைக் கடந்து செல்லவேண்டும் எனக் குறிப்பிடுகிறார். இராமலிங்கர் ஏழு திரைகளை நீக்கினால் இறைவனை ஒளிவடிவில் காணலாம் என்கிறார். (பின்னிணைப்பு படம்-காண்க). அதுவே வடலூரின் ஜோதி தரிசனம் என்று சிறப்பாகக் கூறப்படுகிறது. ஆனால் அது குறியீட்டு நிலை விளக்கமாகும். கருத்துநிலை விளக்கமாக சூபி அத்தார் கூறிய ஏழு படிநிலைகளும் திருஅருட்பாவுடன் பொருந்தும் விதத்தை இப்பகுதி விளக்குகிறது.

## சூபி அத்தார் :

"ஈரான் நாட்டு சூபிக் கவிஞர். அவரது முழுப்பெயர் ஷெய்கு பரீதுத்தீன் அத்தார் என்பது. காலம் கி.பி. 1140-1234 நூற்றுப் பதினான்கு மெய்ஞ்ஞான நூல்களுக்கு மேல் எழுதியுள்ளார். அவரது படைப்புக்களிலேயே 'மந்தீகுத்தயிர்' என்பது மிகவும் குறிப்பிடத்தக்க இடத்தைப் பெறுவது. அதுவே பறவைகளின் பரிபாஷை அல்லது பறவைகளின் சம்பாஷணை என்றழைக்கப்படுகிறது". (ஆய்வுக் கோவை 19, தொகுதி-4. ப-283) அப்பாலைய நிலை குறித்து ஆய்வுசெய்த தாந்தே, அண்டர்ஹில் போன்றோர் தங்களது கருத்துக்களை வலியுறுத்தச் சான்றாக சூபி அத்தார் குறிப்புகளையே கையாளுகின்றனர். சூஃபித்துவ அப்பாலைய நிலையில் (Sufic Mysticism) தனக்கென ஓர் தனியிடத்தைப் பெற்றவர் சூஃபி அத்தார்.

## சூபி அத்தார் காட்டும் படிநிலைகள் :

இறைவனை அடைவதற்கு ஏழு பள்ளத்தாக்குளைக் கடந்து செல்ல வேண்டும் என்று சூபி அத்தார் குறிப்பிடுவதாக எவிலின் அண்டர்ஹில் தமது நூலில் குறிப்பிட்டுள்ளார். அவை.

1. Valley of Quest - தேடல்

2. Valley of love - அன்பு
3. Valley of Knowledge - அறிவு
4. Valley of Detachment - பற்றின்மை
5. Valley of Unity - ஒன்றிப்பு
6. Valley of Amazement - ஆச்சரியமடைதல்
7. Valley of Annihilation of self - தான் அழிதல் (Mysticism)

என்பனவாகும்.

திரு. முகம்மது கனி என்பவர் தமது 'தமிழ் இஸ்லாமிய மெய்ஞான நூல்களில் சூபித்துவப் படித்தரங்கள்' என்ற கட்டுரையில் அவற்றுக்கான இஸ்லாமிய விளக்கங்களுடன் தந்துள்ளார். அவை பின்வருமாறு:

"1. உலக ஆசைகளை ஒழிக்க அவாவுறுதல் - தலப் (The Valley of Yearning)

2. இறை மீது மீளாக் காதல் - இஸ்க் (The Valley of Love)

3. இறை ஞானம் பெறுதல் - மஃபரிஃபா (The Valley of Knowledge)

4. நான் அழிந்த நிலை - பனா (The Valley of Absorption)

5. ஒன்றில் நிலைத்து நிற்றல் - தௌஹித் (The Valley of Unity)

6. இறைவனை அறிந்து பேராச்சரியத்தில் மூழ்குதல்-ஹைராத் (பட்ங் Valley of Amazement)

7. தான் அற்றுப் போதல்-பகர்வபனா (The Valley of Annihilation of Self)" (ஆய்வுக் கோவை - 19)

சூபி அத்தார் கூறிய படிநிலைகளுக்குப் பெயரிட்டு விளக்குவதில் முகம்மது கனியும், அண்டர்ஹில் ஆகிய இருவரும் சிறிது வேறுபடுகின்றனர். முதல் நிலையைத் தேடல் (Quest) என்பார் ஹில். ஆசைகளை ஒழிக்க அவாவுறுதல் (Yearning) என்பார் கனி. நான்காம் குறிநிலையைக் குறிப்பிடும்போது பற்றின்மை (Detachment) என்பார் ஹில். தான் அழிந்தநிலை (Absorption) என்பார் கனி. பிற இடங்களில் மாற்றமில்லை.

குறிப்பீடுகள் அல்லது கலைச்சொல்லாக்கம் என்பது பெயரளவில் மாறுபட்டுக் காணப்படினும் கருத்துக்களின் உள்ளார்ந்த நிலையில் ஒன்றியே நிற்கின்றன. இறையைத் தேடல் என்பது தொடங்கியவுடனேயே உலக ஆசைகளை புறக்கணிக்கும்

மனநிலை வளரத் தொடங்கி விடுகிறது. பற்றின்மை ஏற்பட்டவுடன் தான் அழிந்த நிலை வலுவடைகிறது. எனவே, இருவரது விளக்கங்களும் ஒன்றிற்கொன்று துணையாகவே அமைகின்றன.

திருஅருட்பாவுடன் இஸ்லாமிய சூபித்துவப் படிநிலைகளை ஒப்பிட முயல்வதால் இஸ்லாமிய விளக்கங்கள் குறிப்பிடப்பட்ட முகம்மது கனியின் படிநிலைகள் ஒப்பாய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

## முதல்நிலை-உலக ஆசைகளை ஒழிக்க அவாவுறுதல்-தலப்

தலப் என்பதன் நேரடிப்பொருளை யாரும் விளக்கவில்லை. இஸ்லாமியக் கலைக்களஞ்சியமும் எடுத்துரைக்கவில்லை. "ஆங்கில அராபிய அகராதி தலப் என்பதற்கான ஆங்கில விளக்கத்தைத் தருகிறது. அதன் நேரடிப்பொருள் தேடல் (Quest) என்பதாகத் தரப்பட்டுள்ளது. அடுத்து விசாரணை (inquiry) என்பதற்கும் மஸாஅலத் (Masala-t) என்ற விளக்கத்தைத் தருகிறது" அச்சொல்லை வைத்துக் கொண்டு இஸ்லாமியக் கலைக் களஞ்சியத்தை நோக்குமிடத்து சரியான விளக்கத்தைப் பெற முடிகிறது.

'மஸ் அலா' - இதன் பொருள் தேவை, தேடப்படும் பொருள் என்பதாகும்.

தேடல் என்பது முழுமையைத் தேடல், பரிபூரணத்தைத் தேடல்! நிலைத்த பொருளைத் தேடல், மெய்ப்பொருளைத் தேடல் என்பனவாக விளக்கப்படுகின்றன. கிறித்துவ நெறியைச் சார்ந்த அண்டர்ஹில் இம்முதன்மைநிலையை விளக்குமிடத்து, "நீளமானது, கடினமானது, உடைமைகளைக் களைதல் என்பது இதனுள் நிகழும். கழிவு நீக்கம் என்பது தேடலில் அமைய வேண்டும். ஒளி பட்டவுடன் அளவற்ற அன்புப் பள்ளத்தாக்கில் உயிர் இணையத் தொடங்கும்" என்றெல்லாம் கூறுகிறார். அவர் குறிப்பனவற்றுள் உடைமைகளைக் களைதல் என்பது உற்று நோக்குதற்குரியது. உடைமைகளைக் களைவதற்கு ஆசைகளை ஒழித்தல் அவசியம். இறை அருகில் செல்ல விரும்பும் சாதகன் கையிலுள்ள சுமைகளையும், மனதிலுள்ள பாரங்களையும் இறக்கி வைக்கவேண்டும். சுமைகளுடன் தொடங்கும் பயணம் சுகமாயிராது, சுமைகளைக் குறைத்துவிட்டால் சோர்வின்றிச் செல்லலாம். இறைவனை அடையவேண்டும் என்று நாட்டங் கொண்டு செல்பவர்களுக்கு முப்பெருந் தடைகள் இருப்பதாக சமயங்கள் உணர்த்துகின்றன. மண்ணாசை, பொன்னாசை,

பெண்ணாசை என்பவை அவை. அவற்றிலிருந்து தம்மைக் காக்க இஸ்லாமிய ஞானிகள் இறைவனை வேண்டினர். இராமலிங்கரும் ஆசை நீங்கும் பொருட்டு வேண்டி நின்றதை திருஅருட்பா உணர்த்தும்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் கோட்டாறில் பிறந்த ஞானிபுலவர் ஹெய்டு பாவா ஹெய்டு சுலைமான் காதிரி என்பவர்,

"பெண் மண் பொன்னாசை பெருமயக்கம் விட்டொழியக்

கண்ணொளிவு காட்டி எனைக் காப்பாய் பராபரமே"

எனப் பாடுகிறார்.

இராமலிங்கர் இம்மூன்று ஆசைகளை விரும்பிடவில்லை... அவற்றோடு பிற பாதகக் குணங்களையும் வெறுக்கிறார்.

"காம உட்பகைவனும் கோப வெங்கொடியனும் கனலோபமூடனும் கடுமோக வீணனும் கொடுமதம் எனுந்துட்ட கண்கெட்ட ஆங்காரியும் ஏமம் அறுமாச்சாரிய விழலவனும் கொலை என்று இயம்பு பாதகனுமாம் இவ்வெழுவரும் இவர்க்கு உறவான பேர்களும் எனைப்பற்றிடாமல் அருள்வாய்" (தெய்வமணி மாலை)

இப்பாடலில் துர்க்குணங்களைச் சாடும்போக்கு உள்ளது. உட்பகைவன், வெங்கொடியன், மூடன், வீணன், கண் கெட்ட ஆங்காரி, விழலன், பாதகன் என்ற அடைமொழிகள் ஆழ்ந்து சிந்தித்தற்கு உரியன. அத்தகைய பண்புடையோர் மட்டுமல்லாது அவர்க்கு உறவான பேர்களுங்கூடத் தம்மை வந்து அணுகக்கூடாது என்ற முன்னெச்சரிக்கை உணர்வை வெளிப்படுத்தி விடுகிறார்.

மேற்குறித்த நிலையினை ஆசைகளை அழிக்க எண்ணுதல் என்ற சிந்தனையை உள்ளடக்கி "நல் அவா எனும் முதற்பூமி" என்று திருஅருள் மொழி என்ற நூல் குறிப்பிடுகிறது.

எனவே, தலப் என்ற முதல்நிலையில் அருட்பாவும் சூபித்துவமும் ஒன்றுபடுதலைக் காணலாம். ஆனால், அருட்பா ஆசைகளைக் களைதல் மட்டுமல்லாது அவ்வாசைகளோடு துர்க்குணங்களையும் வன்மையாகச் சாடுகிறது.

## இரண்டாம் நிலை : இறை மீது மீளாக் காதல் - இஸ்க்:

இறையும் உயிரும் இணைகின்ற இணையற்ற நிலையின் தொடக்கம் இதில் உருவாகின்றது. தெய்வக் காதல் என்பது வார்த்தை விளக்கங்கட்கெல்லாம் அப்பாற்பட்டு விளங்குவது. அதனை இஸ்க் என்ற சொல்லால் விளக்குகின்றனர். "இஸ்க்

என்பதன் பொருள் காதல், ஆசைஅன்பு, என்பதாகும். சூபிகள் தெய்வீகக் காதலைக் குறிக்கவே இதனைப் பயன்படுத்துகின்றனர். இக்காதல் உள்ளவர்கள் 'ஆஷிக்' எனப்படுவர். அண்ணல் நபியவர்கள் (சல்) மீது அளவற்ற அன்பு செலுத்திய ரஹீம்அப்துர் புர்யீ போன்றோரை 'ஆஷிக்குர்ரசூல்' என்று கலைக்களஞ்சியம் குறிப்பிடும்''

நபியை விரும்பியோர், அல்லாவை விரும்பியோர் என்று இஸ்லாமியர் பிரித்துப் பார்ப்பதுண்டு. ஆனால் அடியார் மீது அன்பும், இறை மீது காதல் என்றும் அருட்பா விளக்கும். தெய்வக் காதலைப் பெறுமுன்னர் ஆசைகள்யாவும் எரிந்தழியும் என்பார் அத்தர்.

திருஅருள்மொழி எனும் நூல் மேற்குறித்த நிலையை அன்பு பூமி என்று பெயரிட்டு விளக்கும். "அன்பு எனும் இரண்டாவது பூமியிற் புக வேண்டுவான் தீமயமாக வேண்டும். தீ மயமாகாதவன் இங்கே இன்பங்காணான்: அவன் வருங்காலத்தைப் பற்றி நினைக்கக் கூடாது. அவசியமாயின் நூறு உலகங்களையும் தீக்கிரையாக்கத் தயாராயிருக்கவேண்டும். அப்போது தான் மத நம்பிக்கையும், நம்பிக்கையின்மைகளும் நன்மை தீமைகளும், மதப்பற்று மதவெறுப்புகளும் எல்லாம் சமமாகிவிடும்" எனக் குறிப்பிடுகிறது அந்நூல்.

அவ்வாறு ஆசைகளை எரித்து சம பாவம் அளித்து நிற்கும் இறைக் காதல் இறைவனோடு நின்றுவிடாது எல்லாரையும், எல்லாவற்றையும் அன்புடன் நோக்கும் பக்குவத்தை அளித்து விடுகிறது. திருஅருட்பாவிலும் இறையன்பும், அனைத்துயிர்களின் ஆன்மநேய உணர்வும் நிறைந்து காணப்படுகிறது.

தெய்வக் காதல் வயப்பட்டோர் இறையன்பு ஒன்றையே நினைப்பர். இதயத்தில் வேறு ஆசைகளைப் புகவிடுவதில்லை. அவர்களின் காதல் அதிகப்பட அவர்களின் அருள்நிலை உயர்கிறது. இறைவன் தங்களை அதிகம் நேசிக்கவேண்டும் என்பதால் அவர்கள் இறைவனை அதிகம் நேசிக்கின்றனர்.

இராபியத்துல் அதவிய்யா (ரஹ்) அவர்கள் இறைவனை நோக்கி, "இறைவனே! நீ எனக்கு இவ்வுலகில் என்னவென்ன நன்மைகள் நிர்ணயித்து உள்ளாயோ அவற்றையெல்லாம் உன்னுடைய எதிரிகளுக்கு வழங்கிவிடு! மறுமையில் நீ எனக்கு என்னவென்ன நன்மைகளை நிர்ணயிருத்துள்ளாயோ அவற்றை யெல்லாம் உன்னுடைய நண்பர்களுக்கு அளித்துவிடு! எனக்கோ நீ ஒருவனே போதுமானவன்" என்கிறார். அவர் கூற்றில் இறையன்பு புலப்படுகிறது.

அபூபக்கர் (ரஹ்) என்பவர், "விட்டிலுக்கு விளக்கின் வெளிச்சம் போதும்! புல், புல் பறவைக்கு இன்னிசை போதும். எனக்கு ரசூலின் காதல்போதும்" எனப் பாடியுள்ளார். அதில் நபி மீதுள்ள காதல் புலப்படுகிறது. தெய்வக் காதலின் தீவிரப் போக்கையே திருஅருட்பாவில் காணலாம்!

"மறப்பேன் அலேன் உன்னை ஓர் கணமேனும் மறக்கில் அன்றே

இறப்பேன் இதுசத்தியம் சத்தியம் சத்தியம் இசைத்தேன்

.................... நினைவிட்டயல் ஒன்று அடரேன் அரைக்கணமும்

பிரிந்தாற்றலன் ஆணை கண்டாய்" (அருட்பெருஞ்சோதி அடைவு)

என்ற வரிகள் அவனைத் தவிர வேறொன்றும் அவசியமில்லை என்ற தீவிர உறுதியைக் காட்டும்.

திருஅருட்பாவும் இஸ்லாமிய ஸீபிக் கொள்கையும் அடிப்படை இறை அன்பில் ஒன்றுபடுகிறது. ஆனால், பாவனையால் வேறுபடுவதும் உண்டு. இறைவனைக் காதலியாகவும், தன்னைக் காதலனாகவும் பாடி சூபிக் கவிஞர்கள் பரவசமுற்றனர்.

"மறுமை வாழ்வையும் இவ்வுலக வாழ்வையும் அவற்றைத்

தேடுபவர்களிடம் விட்டுவிட்டு தங்களின் இதயத்தைத்

தங்களின் காதலி குடியிருக்கும் இடமாக ஆக்கிக் கொண்டார்கள்"

"என்னைப்போல் மாப்பிள்ளைமார் எத்தனையோ உண்டுனக்கு

உன்னைப்போல் பெண்ணெனக்கு உண்டோ மனோன்மணியே?"

என்று குணங்குடி மஸ்தான் சாகிபு பாடியிருப்பதும் கவனிக்கத் தக்கதாகும்.

அருட்பாவில் இறைகாதல் அளவிடற்கரிய நிலையில் இருப்பதனை அனுபவமாலைப் பகுதி உணர்த்துகிறது. அதில் இறைவன் கணவனாக இருந்து செய்த செயல்களையெல்லாம் இராமலிங்கர் விரிவாகக் குறிப்பிடுகிறார்.

"என்னை மணமாலை இட்டார் என்னுயிரில் கலந்தார்,

கிளை அனந்த மறையாலும் நிச்சயிக்கக் கூடாக்

கிளர் ஒளியார் என்னளவில் கிடைத்த தனித்தலைவர்,

எல்லாஞ் செய்வல்லதுரை என்னை மணம்புரிந்தார்

எவ்வுலகில் யார் எனக்கிங்கீடுரை நீதோழி" (தலைவி கூறல்)

இவ்வாறு இறைவனைக் காதலனாவும், தன்னைக் காதலியாகவும் எண்ணிக் களித்த போக்கே அருட்பா முழுவதும் அமைகிறது.

சூபிகள் தம்மைப் போல மாப்பிள்ளைமார் அதிகம் எனவும், இறைவனைப்போல மணப்பெண் தமக்குக் கிடைத்தற்கரியது என்கின்றனர். இராமலிங்கர் தம்மைப்போல மணப்பெண்கள் அதிகம், இறைவனைப்போல மணமகன் கிடைத்தற் கருமையுடைவன் என்கிறார், சூபிகள் இறைவனை நாயகியாகவும், தம்மை நாயகனாகவும் கொள்கின்றனர். அது நாயகி நாயக நிலை. இராமலிங்கர் இறைவனை நாயகனாகவும், தம்மை நாயகியாகவும் கொள்கிறார். அதனை நாயக நாயகி நிலை எனலாம். கிறித்தவம், வைணவம், சைவம் போன்ற சமயங்களினும் இறைவனை நாயகனாகவே கருதும் போக்கு உள்ளது. (திருக்கோவையார் மட்டும் இறைவனை நாயகியாகக் குறிக்கிறது).

இறை மீது கொள்ளும் காதல், இறைத் தூதர் மீது கொள்ளும் காதல் என்ற இரு நிலைகளுக்கும் இஸ்க் என்ற சொல் பயன்படுத்தப்படுகிறது. அச்சொல் சாதாரண உலகியற் காதலையும் குறித்து வந்ததால் மார்க்க விற்பன்னர்கள் அதனைப் புறக்கணித்து 'ஹீப்' என்னும் சொல்லைப் பெரிதும் கையாளுகின்றனர்.

"அல்லாஹ்வின் மீது கொள்ளும் காதலை 'ஹிப்புல்லாஹ்' என்றும்,

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் மீது கொள்ளும் காதலை,

'ஹீப்புர் ரசூல்' என்றும் குறிப்பிடுகின்றனர்"

திருஅருட்பாவில் இறை அடியாரைப் போற்றல், அடியார் கூட்டத்துச் சேரவிழைதல் என்பன காணப்படுகின்றன. ஆனால், காதல் என்பது இறைவனாகிய தலைவன் மீது மட்டுமே கொள்ளப்படுகிறது.

## மூன்றாம் நிலை : இறைஞானம் பெறுதல் (மஃரிஃபா)

'மஃரிஃபா' என்பதன் பொருள் இறைஞானம் ஆகும். ஆன்மீகத் துறையில் இறைவனை அறியும் மிக உன்னதமான நிலையது. இறைவனின் பேரருளால் பெறக்கூடியது.

"சாதாரண அறிவு இல்மு என்றும், இறைவன் தான் விரும்பும் சிலருக்கு அவரின் இதயத்தில் தன்னுடைய பேரொளியைப் பாய்ச்சி அளிக்கும் ஞானம் மஃரிஃபா அல்லது இர்ஃபான் என்றும் குறிக்கப்படுகிறது... இல்மு மறுமையில் கவனம் பெறுவதையே குறிக்கோளாகக் கொண்டிருக்கும் பொழுது மஃரிஃபாவோ இறைவனளவில் தன்னை அழித்து (ஃபனாவாக்கி) அவனுடன் தரிபடுவதையே (ஃபகாஆவதையே) குறிக்கோளாகக் கொண்டுள்ளது" (இஸ்லாமியக் கலைக் களஞ்சியம் - II. ப-296)

இதனால் இறைஞானத்திற்காகத் தன்னை அழித்தல், இறையின் பேரொளியால் ஞானம் பெறுதல் என்பன விளக்கம் பெறுகின்றன. திருஅருள்மொழி, "ஞானமெனும் மூன்றாம் பூமியில் முன்னேற்றம் அவனவனிடம் அடங்கியிருக்கும் தகுதிக்குத் தக்கபடி அமையும்... உபதேசம் பெற்றவர்க்குள்ளும் ஒவ்வொருவரது ஞானத்தின் அளவும் ஒவ்வொருவிதமாயிருக்கும். ஒருவன் கோயில் வாசல் வரை செல்வான் மற்றொருவன் அக்கோயிலுக்குள் உறையும் தெய்வத்தைக் காண்பான். ஞான சூரியன் உதிக்கும்போது, அவனவனது தகுதிக்கு ஏற்றபடி வெளிச்சம் பெறுவான் உண்மையைத் தியானம் பண்ணும்போது, தனக்குரிய இடம் எது என்பதைக் காண்பான். நெருப்புக்கு நடுவே ஒரு பாதை அவன் முன்தோன்றும். ஆனால், உலகப் பெருநெருப்பு இதனோடு ஒப்பிடும்போது ஒரு குளிர்ந்த சுனையாகும். அவனுக்கு எள்ளுக்குள் இருக்கும் எண்ணெய் புலனாகும். அதாவது எல்லாப் பொருள்கட்குள்ளும் மறைந்து நிற்கும் பரம்பொருளை அவன் காண்பான். இவ்வுண்மைக் காட்சியைப் பெறுபவன் ஒருவனாயின், இருளில் வழி தவறி அல்லற்படுபவர் பல்லாயிரம் பேராவார். பூரணமானவர்க்கே இக்கடலிற்குள் ஆழ்ந்து மூழ்க இயலும்" என்று குறிப்பிடுகிறது.

அதனால், தகுதிக்கேற்றபடி முன்னேற்றம் அடைதல், உண்மைத் தியானத்தில் உரிய இடம் உணர்தல், மறைந்திருக்கும் பரம்பொருளை அறிதல், இறைஞானத்துள் மூழ்குதல் என்பன விளக்கம் பெற்றன.

அந்நிலைகளை அடைந்த அருளாளர் எல்லாப் பொருட்களிலும், இடங்களிலும், நிலைகளிலும் இறைவனைக் காணுகின்றனர். அனைத்துப் பொருட்களின் மாட்சியிலும் இறையின் காட்சியைக் காணுகின்றனர். ஒவ்வொரு அணுவிலும் இறைமாட்சி ஆட்சி புரிவதைக் காட்சியாகக் காண்பர். அதனையே "ஆதியும் அவனே, அந்தமும் அவனே தோற்றுவதும் அவனே, மறைந்திருப்பதும் அவனே அவன் சகலவற்றையும் நன்கறிந்தோன்" என்ற திருக்குர்ஆனின் வாசகங்கள் வலியுறுத்துகின்றன.

"ஊனாகிய யூனிலுயிராகி யெவ்வுலகுமாய் ஒன்றா யிரண்டு மாகி
உள்ளாகி வெளியாகி யொளியாகி யிருளாகி யூருடன் பேரு மாகி
கானாகி மலையாகி வளைகடலு மாகிமலை கானக விலங்கு மாகி
கங்குல் பகலாகி மதியாகி ரவியாகிவெளி கண்ட பொருளென வையுமாகி
நானாகி நீயாகி யவனாகி யவளாகி நாத மொடுபூத மாகி

நாடுமொளி புரிய வடியேனுமுமை நம்பினேன்
நன்மை செய்தாளு தற்கே"

(முகயித்தீன் சதகம். 22)

என்ற குணங்குடி மஸ்தான் சாகிபின் பாடல் எல்லாப் பொருட்களிலும் இறைக்காட்சியைக் காணல் என்பதற்கு ஏற்ப அமைகின்றது.

அருட்பாவிலும் அனைத்துப் பொருள்களிலும் அவன் காட்சி புலப்படுவதாகப் பல பாடல்கள் அமைந்துள்ளன.

1. "அம்புவியிலே புவியின் அடியிலே முடியிலே
அம்மண்டலந் தன்னி லே
அகத்திலேபுவியின் அகிலத்திலே அவைக்
காண வடிவாதி தனிலே
விம்பமுற வேநிறைந் தாங்கவை நிகழ்ந்திட
விளங்கும் அவை அவையாகியே
மேலும் அவைஅவையாகி அவைஅவை அலாததொரு
மெய்ந்நிலையும் ஆன பொருளே"

2. "நீரிலே நீர்உற்ற நிறையிலே நிறைஉற்ற நிலையிலே நுண்மைதனிலே நிகழ்விலே நிகழ்வுற்ற திகழ்விலே நிழலிலே நெகிழிலே தண்மைதனிலே நீரிலே அந்நீரின் உப்பிலே உப்பிலுறும் ஒண்சுவையிலே திரையிலே,

3. ஒள்ளிய நெருப்பிலே ஒப்பிலா ஒளியிலே சுடரிலே மேல் ஓட்டிலே சூட்டிலே உள்ளாடும் ஆட்டிலே உறும்ஆதி அந்தத்திலே தெள்ளிய நிறத்திலே அருவத்திலே எலாம் செயவல்ல செய்கைதனிலே,

4. அறைகின்ற காற்றிலே காற்றுப்பிலே காற்றின் ஆதிநடு அந்தத்திலே ஆனபலபலகோடி சத்திகளின் உருவாகி ஆடும்அதன் ஆட்டத்திலே,

5. வானிலே வானுற்ற வாய்ப்பிலே வானின் அருவத்திலே வான்இயலிலே வான் அடியிலே வானின் நடுவிலே முடியிலே வண்ணத்திலே கலையிலே,

6. என்றிரவி தன்னிலே இரவிசொரூபத்திலே இயல்உருவிலே அருவிலே ஏறிட்ட சுடரின் உட்சுடரிலே எறிஆத பத்திரளிலே,

7. அணிமதியிலே மதியின் அருவிலே உருவிலே அவ்வுருவின்

உருவத்திலே அமுதகிரணத்திலே அக்கிரண ஒளியிலே அவ்வொளியின் ஒளிதன்னிலே,

8. கரையிலாக் கடலிலே கடல் உப்பிலே கடற்கரையிலே கடல் இடையிலே கடல்முதலிலே கடல்திரையிலே நுரையிலே கடல்ஓசை அதன்நடுவிலே வரையிலா வெள்ளப் பெருக்கத்திலே வட்டவடிவிலே வண்ணம் அதிலே மற்றதன் வளத்திலே உற்றபல சத்தியுள் வயங்கி அவை காக்கும்ஒளியே,

9. உற்றியலும் அணுவாதி மலைஅந்த மானஉடல் உற்ற கருவாகிமுதலாய் உயிராய் உயிர்க்குள் உறும்உயிராகி உணர்வாகி உணர்வுள் உணர்வாகி பற்றியலும் ஒளியாகி ஒளியின் ஒளியாகி .... விளங்கு பொருளே" (நடராஜபதி மாலை)

மேற்குறிப்பிட்ட அருட்பாப் பாடல்கள் அனைத்தும் அங்கிங்கெனாதபடி எங்கும் இறைவனைக் காணும் போக்கிற்குச் சிறந்த சான்றுகள்.

## நான்காம் நிலை நான் அழிந்த நிலை (ஃபனா) :

இதன்பொருள் அழித்துக்கோடல் என்பதாகும். இறை தியானத்தில் மூழ்க்கி நான் என்ற உணர்வு மறந்த நிலையை எய்தப்பெறுவதற்கு இச்சொல் பயன்படுத்தப்படுகிறது. "இது பௌத்தர்களின் உச்சமான ஆன்மீக நிலையான நிர்வாண நிலைக்கும் மேலான நிலையாகும். ஏனெனில் அது அத்துடன் நின்றுவிடும் போது இது அதற்கு மேலான ஃபனாவுல் ஃபனாநிலைக்கும், அதாவது தன்னையே தான் இறைவனளவில் அழித்துக் கொண்டதை அறியாநிலைக்கும் அதற்குமேல் இறைவனில் தரிபடுவதான பகா நிலைக்கும் அழைத்துச் செலகிறது" என்பதை இஸ்லாமிய கலைக் களஞ்சியம் குறிப்பிடும். மேற்கூறிய விளக்கத்தினின்றும் பெறப்படும் கருத்துக்கள்:

(1) பௌத்தர்களின் நிர்வாண நிலையிலும் உயர்ந்தது.

(2) தன்னையே இறைவனில் அழித்துக்கொண்ட அறியாநிலை

(3) இறைவனில் தரிபடும் நிலை

அவை அனைத்தும் தன்னை மறத்தல் என்பதனில் தொடங்கி தன்னையே அழித்தல் என்பதாக மாறுகின்ற, தான் அதுவாதல் என்ற தத்துவ விளக்கமாகும்.

அண்டர்ஹில் இந்நிலையை, "பற்றின்மை ஏற்பட்டு தெய்வ அன்பில் ஈடுபட்டவுடன் மற்றது விலக்கல்" என்கிறார். மற்றது விலக்கலில் தொடங்கி, படிப்படியாக நான் என்ற உணர்வை

அழித்தலாகிறது. தன்னை இழந்த நலம் என்று சுந்தரனுபூதியும் குறிப்பிடுகிறது.

திருஅருள்மொழி என்ற நூலும் அதனையே பின்வருமாறு குறிப்பிடுகிறது. "சுவாதீனம் என்னும் நாலாம் பூமியிலே கடவுளைத் தவிர வேறொன்றும் நினைவில் இராது. வேறு யாதொன்றும் வேண்டாத இந்நிலையில் ஒரு பெரும்புயல் வீசும். அதன் ஒவ்வொரு வீச்சிலும் பெரும் நாடுகள் அழிந்துவிடும். ஏழு கடல்களும் அப்போது ஒரு சிறுகுட்டையாகிவிடும். ஏழு கிரகங்களும் ஒரு பொறி போல் ஆகிவிடும். எட்டுச் சுவர்க்கங்களும் ஒரு திரைபோலாகிவிடும். ஏழு நகரங்களும் ஒரு பெரும் பனிக்கட்டியாய் விடும்" இவ்விளக்கம் உணர்வு கலந்த படிமநிலையில் அமைவதால் தெளிவில்லை எனினும் ஆன்ம அனுபவ வெளிப்பாட்டின் நிலைகள் எனலாம். மேற்குறித்த நிகழ்வுகள் இந்நிலையை எய்தப்பெற்றவரது உணர்வுப் போராட்டத்தின் வீரியப்போக்கினை எடுத்துக்காட்டுகிறது. பெரும்புயல் வீசுவதுபோல அலைக்கழிக்கப்படும் மனதிற்கு இயற்கைப் பொருட்களும் துச்சமாகிவிடுகின்றன. தொன்மை வாய்ந்த எண்ணங்கள் சுவடற்றுப்போகின்றன. சொர்க்கம், நரகம், கிரகம் என்பவைகள் ஏதுமற்றதாக எடுத்தெறியப்படுகின்றன. அனைத்தும் ஒரு பனிக்கட்டியாகி உருகிவிடுவதைப் போன்று நான் என்ற நிலை அழிந்து, எல்லாம் மறந்து இறை அன்பில் ஈடுபட்டுவிடுகிறார்கள் என்றுதான் கூறவேண்டும்.

ஆன்மா இந்நிலையில் தன்னை இருள் அடர்ந்த இரவில் (Dark night of the Soul) இருப்பதாக எண்ணிக்கொள்கிறது என்பர். அந்நேரம் அது எழுப்பும் அவல ஓசை மரணஓலத்தை ஒக்கும். "இந்நிலையைக் குறிக்கப் போந்த இத்தாலியக் கவிஞர் தாந்தே (Dante) நான் இருண்ட மரங்களடர்ந்த பள்ளத்தாக்கில் இருப்பதைக் கண்டேன் (I found myself in the dark valley of wood) என்று கூறுகிறார். அதே ஓலத்தின் பிரதிபலிப்பை றகுமான் கண்ணியிலும் காணமுடிகிறது."

"ஏகப் பெருவெளியில் இருட்கடலிற் கம்பமற்ற
காக மதுவானேன் கண்ணே றகுமானே"

என்பது ஆன்மா இருளடர்ந்த இரவில் அல்லற்பட்டதை உணர்த்தும்

திருஅருட்பாவும் அத்தகைய இருண்மை நிலைகளைக் குறிப்பிடுகிறது.

"1. ...... <u>இருட்டறையில்</u> கிடந்த சிறியேனை....

2. ..... <u>திசையறியமாட்டாதே திகைத்த</u> சிறியேனை......

3. <u>இருள்இரவில் ஒருமூலைத்</u> திண்ணையில் நான்பசித்தே
இளைப்புடன் படுத்திருக்க .....

4. பற்றுதலும் விடுதலும் உள்அடங்குதலும் மீட்டும்
படுதலோடு சுடுதலும் <u>புண்படுதலும்</u> ...

5. <u>கங்குலிலே</u> வருந்திய என் வருத்தமெல்லாம் (அருள்விளக்க மாலை)

6. "ஏகாந்தமாகி வெளியாய் இருந்த திங்கென்னை முன்னே
<u>மோகாந்த காரத்தின்</u> மீட்ட ..... (உத்தர ஞானசிதம்பரமாலை)

7. "<u>பனி இடர்</u> பயந்தீர்த்தெனக்கு .......

8. புன்னிகரில்லேன் <u>பொருட்டிருட்டிரவில்</u>
போந்தருள் அளித்த .....

9. "தரித்திடேன் சிறிதும் தரித்திடேன் எனது
தளர்ச்சியும் துன்பமும் தவிர்த்தே
தெரித்திடல் அனைத்தும் தெரித்திடல்வேண்டும்
தெரித்திடாய் <u>எனில்இடர் எனைத்தான்</u>
எரித்திடும் அந்தோ என்செய்வேன் எங்கே
எய்துகேன் யார் துணை என்பேன்
திரித்த நெஞ்சகத்தேன் சரித்திரம் அனைத்தும்
திருவுளம் தெரிந்தது தானே" (இறைதிருக்காட்சி)

10. "<u>மருளும்துயரும்</u> தவிரும்படி என்
மன்றிடை நீ வருவாய் அபயம்
<u>இருளும் பலமும்</u> பெறுவஞ்சக நெஞ்
சின்னன என்றிகழேல் அபயம் அபயம்" (அபயம் இடுதல்)

11. "எள்ளலாம் பயத்தால் துயரினால் அடைந்த
இளைப்பெலாம் இங்கு நான் ஆற்றிக்கொள்ளவே
அடுத்தேன்" (பிள்ளைப் பெரு விண்ணப்பம்)

12. "கூடுங்கருணைத் திருக்குறிப்பை இந்றைப் பொழுதே குறிப்பித்து
வாடுஞ்சிறியேன் வாட்டம் எலாந்தீர்த்து வாழ்வித்திடல்
வேண்டும்" (ஆன்மவிசாரத் தழுங்கல்)

மேற்கூறிய தொடர்களில் இருட்கடல், இருட்டறை, திசையறியாநிலை, இருள்இரவு, கங்குல், மோகாந்தகாரம், பனியிடர்பயம், இருட்டிரவு, இடர்எரித்திடும், இருளும்பயமும். மருளும்துயரும், வாட்டமும் என வரும் சொற்கள் யாவும் மனத்தின் இருண்மைநிலை குறித்த அனுபவச் சொற்கள்.

அத்தகுநிலையில் தோன்றும் துன்பங்களுக்கும், மனதினில் இருள் கவிந்தாற்போல் உணர்தற்கும் அடிப்படைக் காரணமாக அமைவது நான் என்ற உணர்வுதான், அவ்வுணர்வே இன்ப துன்பங்களை இனம்பரித்துக் காட்டுகிறது. சுய பச்சாதாபத்தில் துடிக்கச் செய்கின்றது. அகந்தையில் ஆழ்த்துகிறது. நான் என்ற உணர்வுடையோர்களை அது இருள் அடர்ந்த இரவிற்குள் இட்டுச் செல்கிறது. எனவேதான் மஸ்தான் சாகிப் அவர்கள்.

"நான் சாமுன் சாவ நாடினேன் நான்சாமுன்
நான் சாவ அருள் புரியவும்" .

என்று வேண்டுகிறார்.

இராமலிங்கர் சற்று மாறுபட்டு, "நான்" என்பதே அவனாக மாறவேண்டும் என்கிறார், நான் அழிதல் என்பது உட்கிடை.

"தான் நான் எனும் பேதந்தன்னைத் தவிர்த்தான் நான்
ஆனான் சிற்றம்பலவன்" (சுத்தசிவ நிலை)

என்ற அருட்பாவால் நான் என்ற உணாவின் பேதத்தைத் தவிர்த்து இறைவனே நானாக மாறிவிட்டான் என்பதை உணரலாம்.

சூபிகள் இந்நிலையில் ஆன்மாவின் அவலநிலையைச் சுட்டி இருள் படர்ந்த இரவில் அதன் செயல்பாடுகளைக் கூறியுள்ளனர். அருட்பாவும் துன்ப உணர்வின் இருண்மை நிலைகளை அவ்விதமே காட்டியுள்ளது. அத்துன்பங்களுக்கு நான் என்ற உணர்வே காரணம் என்று சூபிக் கொள்கையும் அருட்பாவும் கூறுகின்றன. ஆனால், நிவாரணம் கூறுவதில் வேறுபடுகின்றன. நான் அழியவேண்டும் என்கிறது சூபித்துவம். அருட்பா நான் அழிதல் மட்டுமல்லாது அந்த நானாகவே இறை மாறவேண்டும் என்கிறது.

## ஐந்தாம் நிலை : ஒன்றில் நிலைத்து நிற்றல் (தௌஹீத்)

இதன் பொருள் ஒன்றாகச் செய்தல். ஒன்று என வலியுறுத்தல். அதாவது "அல்லாஹ் ஒருவனே வணக்கத்திற்குரியவன். அவனைத் தவிர வேறொருவனும் இல்லை என்பதே ஆகும். லா இலாஹ் இல்லல்லாஹீ என்ற மூலமந்திரம் அதுவே. அது இருவகைப்படும். முதலாவது பகுதி இறைவன் ஒருவனே என்று ஒப்புக்கொள்ளும்

பகுதி. இதற்கு தௌஹீத் ஃபிஸ்ஸிபத் என்று பெயர். எல்லா மதங்களிலும் முன்னையது வலியுறுத்தப்பட்ட போதிலும் பின்னையது அதிகமாக வலியுறுத்தப்படவில்லை. எனவே, அவற்றில் உருவ வழிபாடும் வீரர் வழிபாடும் ஏற்படலாயின. இஸ்லாம்தான் மேலே கூறப்பட்ட இரண்டையும் வலியுறுத்தி வெற்றி கண்டது"

அருட்பாவும் அத்தகைய ஒருமைநிலைக்குக் கட்டியங்கூறியது. அதற்கு முன்னர் இருந்த கடவுள் கருத்தாக்க உருவ வழிபாட்டுச் சிந்தனைகளினின்றும் இறைவன் அருள் வடிவினர்! அவ்வருள் பெருஞ்சோதியாகத் தோன்றி இவ்வுலக இருண்மைகளை அகற்றும். அவ்வருள் பெருஞ்சோதியே தனித்துவமாக பெருங்கருணை வடிவமாகவும் விளங்குகிறது. மேற்குறித்த கருத்துக்களின் வழி எழுந்த தாரக மந்திரமே!

"அருட்பெருஞ்சோதி அருள்பெருஞ்சோதி
தனிப்பெருங்கருணை அருள்பெருஞ்சோதி"

என்பதாம்.

இறைவன் ஒருவனே வணங்குதற்குரியோன் இறைவன் ஒருவனேயன்றி வேறொருவருமில்லை என்ற சூபித்துவ சிந்தனையுடன் ஒன்றுபடுவதோடு அவனே கருணை வடிவினன் என்றும் அருட்பா கூறுகிறது.

திருஅருள்மொழியும் அவ்வொருமை நிலை குறித்து, "ஐந்தாவதாகிய ஒருமைப் பூமியில் ஒருவனிடம் உள்ளதெல்லாம் பறிபோய்விடும், ஒன்றே மிஞ்சும்! பரம்பொருளின் குணங்களை மட்டுமன்றி அதனையே தியானிக்கும் பக்குவம் உண்டாகும்"

இவ்வுலகப் பற்றை நீக்கிய ஆன்மாவின் உள்ளத்தில் இருந்து இருமைப் பண்பு அகல பல்வேறுபட்ட படைப்பினங்களில் ஓர் ஒற்றுமையைக் காணநேரிடும். அந்த ஒன்றின் ஆதிக்கமே ஓயாது உள்ளத்தில் நிலைத்துவிடும். அத்தகைய ஊசலாட்ட நிலையை பீர்முகம்மது அப்பா பாடலால் அறியலாம்.

"கலத்திலோ கீழோ மேலோ சார்ந்திடு நடுவோ முன்னோ
நிலத்திலோ பின்னோ வுள்ளோ நீங்கிடும் புறமோ வாக்கோ
குலத்திலோ வாணோ பெண்ணோ கூறிய விரண்டோ வொன்றோ
நிலைத்த தெவ்விடமோ வுன்றன் நேர்மையை யறிந்திலனே"

மேற்குறித்த அவ்விருமைச் சிந்தனை அருட்பாவிலும் இடம் பெற்றுள்ளது.

ஏகமோ அன்றி அனேகமோ என்றும்
இயற்கையோ செயற்கையோ சித்தோ
தேகமோ பொதுவோ சிறப்பதோ பெண்ணோ
திகழ்ந்திடும் ஆணதோ அதுவோ
யோகமோ பிரிவோ ஒளியதோ வெளியோ
உரைப்பதற்றோ........ (அருட்பெருஞ்சோதி அட்டகம்)

இங்கு இயற்கை-செயற்கை, சித்து-தேகம், பொது-சிறப்பு, பெண்-ஆண், யோகம்-பிரிவு, ஒளி-வெளி என்ற இருமைப் பண்புகளில் எதுவாக இருக்கும் என்று உரைப்பற்ற நிலையை உணர்த்தக் காணலாம். மற்றோர் இடத்தில் இவ்விருமை நிலையில் ஐயம் நீங்கி ஒருமையென உணர்ந்த நிலை கூறப்பட்டுள்ளது.

1. "ஒன்றது இரண்டது ஒன்றின் இரண்டது
ஒன்றினுள் ஒன்றது ஒன்றெனும் ஒன்றே
ஒன்றல இரண்டல ஒன்றின் இரண்டல
ஒன்றினுள் ஒன்றல ஒன்றெனும் ஒன்றே
ஒன்றினில் ஒன்றுள ஒன்றினில் ஒன்றில
ஒன்றுற ஒன்றிய ஒன்றெனும் ஒன்றே.

2. அலகிலாச் சித்தாய் அதுநிலை அதுவாய்
உலகெலாம் விளங்கும் ஒருதனிப் பொருளே
பொருளினுட் பொருளாய் பொருளது பொருளாய்
ஒருமையின் விளங்கும் ஒருதனிப் பொருளே

3. ஒருநிலை இதுவே உயர்நிலை எனும்ஒரு
திருநிலை மேவிய சிவமே சிவமே

4. என்றும் உள்ளதுவாய் எங்கும் ஓர்நிறைவாய்
என்றும் விளங்கிடும் ....

என்று ஒன்றாகக் காணுதல் கூறப்பட்டது. இனி ஒன்றாகக் கண்ட இறைவனிடம் தான் ஒன்றுதல் என்பதும் நிகழ்கின்றது. இறைவனின் கல்யாண குணங்களைத் தன் குணமாக்கி ஆன்மாவினிடம் சேரும் குறைகள் இறை குணங்களில் அழிந்துவிட ஒன்றுதல் நிகழும். இதனையே தென்காசி பெண்பாற் சூபி ரசூல் பீவி பின்வருமாறு பாடுகிறார்!

"நானே ஒன்னில் பனாவாய் நீயே பகாவாக
தானோ யரசாளும் தான்தான் றகுமானே"

அருட்பாவும் அத்தகைய ஒன்றிப்பு நிலையினை பின்வருமாறு எடுத்துக்காட்டுகிறது. அகவலில்,

"தன்பொருள் அனைத்தையும் தன் அரசாட்சியில்
என்பொருளாக்கிய,
தன் வடிவனைத்தையும் தன் அரசாட்சியில் என் வடிவாக்கிய,
தன் சித்தனைத்தையும் தன் சமூகத்தினில் என் சித்தாக்கிய,
தன் இயல் என் இயல் தன் செயல் என் செயல் என்ன இயற்றிய,
தன் உரு என் உரு தன் உரை என் உரை என்ன இயற்றிய"

என்று பொருள், வடிவு, சித்து, இயல், செயல், உரு, உரை என்பன அனைத்தும் ஒன்றிக் கலந்ததைக் குறிப்பிட்டுக் காட்டுகிறது. மற்றோர் இடமானது,

"நானோ புரிகின்றேன் புரிதல் நானோ நீயோ நான் அறியேன்
நான் நீ என்னும் பேதம் இலா நடஞ்செய் கருணை நாயகனே"
(இறை இன்பக் குழைவு)

என்று பேதமிலாது ஒன்றிப்பு நிகழ வேண்டுவதை உரைத்து நிற்கிறது.

இவ்வாறாக மேற்குறித்த விளக்கங்களின்வழி ஐந்தாம் நிலையில் இறைவனை ஒன்றாகக் காணுதல், ஒருமையில் உணர்ந்து ஒன்றுதல் பற்றிய கூறித்துவம், அருட்பா இரண்டிலும் இடம்பெற்றுள்ளது தெரிவு.

## ஆறாம் நிலை :

### இறைவனை அறிந்து பேராச்சரியத்தில் மூழ்குதல் : ஹைறாத்

ஹைறாத் என்பது அஜாயிப் எனவும்பொருள்படும். அதன் பொருள் அதிசயம்: வியப்பிற்குரிய பொருள் என்பதாகும். வியப்பிற்குரிய பொருள் இருவகைப்படும். ஒன்று இறைவனுடைய படைப்புகளில் வியப்புக்குரியவை மற்றொன்று மனிதன் செய்தவற்றில் வியப்பிற்குரியவை" இங்கு இறைவனுடைய படைப்புக்களில் வியப்புக்குரியவையே எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கின்றன.

இறைவனுடைய படைப்புகள் அத்தனையும் வியப்புக்குரியவை தாம். ஏனெனில் எவ்வித முன்மாதிரியும் இன்றியே அவன் ஒவ்வொரு பொருளையும் படைத்து இருக்கின்றான். இத்தகு ஆற்றல் இறைவன் ஒருவனுக்கே அன்றி வேறு எவருக்கும் இல்லை.

மனிதன் எவ்வளவுதான் அறிவு, ஆற்றல் உடையவனாக இருந்த போதிலும் அவனால் இறைவனின் படைப்புகளை மூலம் மாதிரியாகக் கொண்டே எதனையும் மண்ணாலோ மரத்தாலோ, இரும்பாலோ செய்யமுடியுமே யன்றி அதற்கு அப்பால் அவனால் உண்டுபண்ண இயலாது. எனவே, இறைவனின் படைப்புகள் வியத்தகு ஆற்றலுடையவை.

ஆறாவது நிலையாகிய "ஆச்சரிய பூமியில் யாத்திரை செய்வோன் ....... கண்ட காட்சி தெளிவாய் நினைவிற்கு வரும். ஆயினும் கண்டது கனவோ நனவோ என்ற சந்தேகம் அவனது மனதைக் குடைந்துகொண்டிருக்கும். காணுதற்கரிய அழகையும் பெறுதற்கரிய ஆனந்தத்தையும் அவன் அனுபவித்துக் கரைந்துருகுவான்"

அத்தகைய ஐயப்பாடு ஆச்சரியத்தோடு கலந்து வெளிப்படுகிறது.

"அருவில்லான் உருவில்லான் அணுவுமில்லான்
ஆணில்லான் பெண்ணில்லான் அலியுமில்லான்
கருவில்லான் குருவில்லான் கவியில்லான்
காசிதனில் எட்டாத கருணையாளன்
திருவில்லான் நாவில்லான் ஈயுமில்லான்
திசையெட்டோடு பதினாறு கோணுமில்லான்
மருவில்லான் ஓரெழுத்தாய் நின்றாடுஞ்
சோதி மணிநாதக் கடவுள்"

(ஞானாமிர்த சாகரம், காப்பு கடவுள்வாழ்த்து.1)

என்றுரைக்கும் பீவி இறைக்காட்சியைக் கண்டு கணிக்கமுடியாது வகைப்படுத்துகின்றார். இராமலிங்கரோ,

"ஆணிப்பொன்னம்பலத்தே கண்ட காட்சிகள்
அற்புதக் காட்சியடி
சந்நிதியில் சென்று நான்பெற்ற பேறது
சாமி அறிவாரடி" (மெய்யருள் வியப்பு)

என்று அவ்வனுபவக் காட்சிகளின் பெருமையினை இறைவன் மட்டுமே அறிவான் என்று கூறுகிறார்.

"உன்னைக் கண்டுகொண்டேன் கண்டவுடன் - இங்கென்னையே
உலகெலாம் கண்டுகொண்ட உவப்பிதென்னையே.......
சோதிமலையில் கண்டேன் நின்னைக்கண் களிக்கவே
துய்ந்தேன் அமுதம் அகத்தும்புறத்தும் பரிமளிக்கவே

*ஓதிஉணர்தற்கரிய பெரிய உணர்வை நண்ணியே*

*ஓதாதனைத்தும் உணர்கின்றேன் நின்அருளை - எண்ணியே"*

என்று உவப்புடனே உணர்வில் கலந்த வியப்பினை வெளிப்படுத்துகிறார்.

*"நசைத்த மேல்நிலை ஈதென உணர்ந்தாங்கே*

*நண்ணியும் கண்ணுறா தந்தோ*

*திசைத்த மாமறைகள் உயங்கின மயங்கித்*

*திரும்பின எனிலதன் இயலை*

*இசைத்தல் எங்ஙனமோ ஐயகோ சிறிதும்*

*இசைத்திடுவேம் என நாவை*

*அசைத்திடற் கரியது ......" (ஆணிப் பொன்னம்பலக் காட்சி)*

என்று சொல்லறிய காட்சியது என்று கருத்துரைக்கிறார்.

அருள் அற்புதம், ஆணிப்பொன்னம்பலக் காட்சி, மெய்யருள் வியப்பு, அருட்பெருஞ்சோதி அகவல் என்ற அருட்பாப்பகுதிகள் அக்காட்சி அனுபவங்களை அதிகமாகக் காட்டுகின்றன.

இறைக்காட்சியைக் கண்டு பேராச்சரியத்தில் திளைத்து நின்ற நிலையை சூபித்துவம், திருஅருட்பா இரண்டுமே குறிப்பிடுகின்றன. காட்சி, ஐயம், தெளிவு என்ற நிலையில் இறைக்காட்சியும் அமைந்து நிற்கிறது. தெளிவின் பின்னர் வியப்பும், பெருமையும் கலந்த அனுபவத்தையும் காண முடிகிறது.

## ஏழாம் நிலை : தான் அற்றுப்போதல் (பகர்வபனா) :

"இந்நிலை நான்காம் நிலையாகிய பனா என்பதற்கு எதிராக அமைவது. தன்னை முற்றிலும் அழித்தல் என்ற பொருளில் இடம்பெறுகிறது. இதனை 'இபாது' என்ற சொல்லாலும் குறிக்கின்றனர்" பனா என்ற நிலையில் நான் என்ற உணர்வை அழித்தல் எனக் கண்டோம். ஒன்றை அழித்தல் என்பது வேறு. முற்றிலும் அற்றுப்போகச் செய்தல் என்பது வேறு. மேலெழுந்தவாரியாகக் கிள்ளியெறிதலையும் அழித்தல் என்ற பதத்தில் அடக்கி விடலாம். அது அப்போதைக்கு அழித்தல் மாத்திரமே. ஆனால் அடி ஆழத்தோடு மீண்டும் வெளிக் கிளம்பாதவாறு அழித்தல் இருக்கிறதே அதுவே அற்றுப்போதல் என்பதாகும். அவ்வாறே நான், தான் என்ற எண்ணங்கள் வேரோடு முற்றிலும் அழிக்கப்பட்டுவிடுமானால் அவ்வுள்ளம் இறைவனின் நிரந்தர இருப்பிடமாக ஆகிவிடுகிறது. அவ்வகையில்தான் அற்றுப்

போகச் செய்யும் இறுதிநிலையே இங்கு குறிப்பிடப்படும் பகர்வபனா என்பதாகும்.

"ஏழாவதாகிய வறுமையும் அழிவும் என்னும் பூமியில் சாதகன் பெறும் அனுபவத்தைச் சொல்ல வார்த்தைகள் கிடையா, ஒரு சூரியன் உதித்தவுடனே இருள் மூடியிருந்த கோடிக்கணக்கான பொருள்கள் தெளிவாகப் புலப்படுமன்றோ? எல்லாம் அவனுக்குப் பட்டப்பகல் போலத் தோன்றும். அவன் தன்னிடம் உடைமையே யற்ற பெரும் வறுமை குடிகொள்வதை உணர்வான். தான் என்பதே இறந்துவிடும். அந்த அரும்பெரும் பாழில் அறிவற்ற அமைதியே ஆட்சி செய்யும். சாதகன் தான் நாடிய அதனை அறிய வேண்டின் தான்ஒருவன் இருப்பதான எண்ணத்தையும் அறவே அழித்துவிட வேண்டும். அதனை அறிந்தவர் அதுவாவார். அவ்வுயர்ந்த நிலையை யாரே எடுத்துரைப்பார்" என்றதனால் தான் அற்ற நிலை அனைத்தும் இழந்தவனே அவனின் சிந்தனையில் ஆழ்ந்து நிற்க முடியும். அனைத்தையும் இழந்ததனால் அவனை ஆண்டி எனக் கூறி விடமுடியாது. இறைவனின் அருளரசாட்சியில் அவனுக்குக் கோலோச்சும் உரிமை கிடைத்து விடுகிறது. அதனையே அருட்பாவில் இராமலிங்கரும்,

"ஆதியீறறியா அருளரசாட்சியில் சோதிமா மகுடம் சூட்டிய,
எட்டிரண்டறிவித் தெனைத் தனிஏற்றிப் பட்டிமண்பத்தில் பதித்த,
தங்கோல் அளவது தந்தருட் ஜோதிச்
செங்கோல் செலுத்தெனச் செப்பிய தந்தையே" (அகவல்)

என்று குறிப்பிடுகிறார். இறையைப் போலவே அருளரசாட்சி, சோதிமா மகுடம், செங்கோல் செலுத்தல் என்பன உயிருக்கும் கிடைத்துவிடுகிறது. அது தானற்றுப் போய் அதுவாகவே மாறி விட்டதனால் அதனின் செயற்பாடுகள் இதற்கும் வழங்கப்பட்டன.

தன்னை அறிந்தவன் தன் தலைவனை அறிவான் என்ற நபி மொழிக்கேற்ப அந்தச் சாதகன் தன்னை அறிகிறான். அதாவது தன்னிலிருந்த தலைவனை அறிகிறான். அதனையே தக்கலை பீர்முகமது அப்பா பாடுகிறார்கள்.

"தன்னை யறிந்தல்லவோ தனது பொருளறிந்தால்
நானேதான் தானே தான் தம்பிரானாகும்"

-(பிஸ்மில் குறம்)

என்று இஸ்லாமிய அருளாளர் குறித்து நிற்பதும், ஒப்பு நோக்கக் கூடியது. ஆனால் அந்தத் தன்னையறிதல் என்பதும், தான்

அற்றுப்போதல் என்பதும் எளிதில் நிகழக்கூடியதன்று என்பதை அருட்பா எடுத்துக்காட்டுகிறது. தன்னையறிதலில் நிகழ்கின்ற உள்ள உணர்வுகளைக் களைதல் சாதாரண செயலன்று அது தந்திரம் போன்றது.

"தன்னையறிந்தின்பமுற வெண்ணிலாவே - ஒரு
தந்திரம் நீ சொல்ல வேண்டும் வெண்ணிலாவே
நாதமுடி மேலிருந்த வெண்ணிலாவே - அங்கே
நானும் வர வேண்டுகின்றேன் வெண்ணிலாவே.......
இராப்பகலிலாவிடத்தே வெண்ணிலாவே நானும்
இருக்க வெண்ணி வாடுகின்றேன் வெண்ணிலாவே"

என்ற வெண்ணிலாக் கண்ணிப்பாடலில் தந்திரம் என்று இராமலிங்கர் குறிப்பிடுகிறார். அத்தந்திரநிலை தனித்துவம் வாய்ந்தது: போக்குவரவற்றது; இராப்பகல் இல்லாதது;இறையும் உயிரும் இணையும் மத்திய இணைப்புநிலை அவ்விணைப்பை வேண்டி உயிர் பட்ட பாட்டினையும் குறிப்பிடுகிறார்.

"தூக்கமும் சோம்பும் என் துன்பமும் அச்சமும் ஏக்கமும் நீக்கிய,
துன்பெலாம் தவிர்த்துளே அன்பெலாம் நிரம்ப இன்பெலாம் அளித்த"

என்றதனால் அவரது அவல உணர்வு நிலை வெளிப்படுகிறது. துன்பம், ஏக்கம், அச்சம், தூக்கம், சோம்பல் என்பனவெல்லாம் நீக்கப்படுதலும் தானற்றுப் போதலின் படிநிலைகளாகும். அத்தகைய செயற்பாடுகளையெல்லாம் களைந்து இறைவன் தனதாக்கிக் கொண்டான் எனக் காட்டுகிறது அருட்பா.

"தூக்கங் கெடுத்தான் சுகங்கொடுத்தான் என்னுளத்தே
ஏக்கந் தவிர்த்தான் இருள்அறுத்தான் - ஆக்கமிகத் தந்தான்,
தான்நான் எனும் பேதந் தன்னைத் தவிர்த்தான் நான் ஆனான்,
நானே தவம்புரிந்தேன் நானிலத்தீர் அம்பலவன்
தானே வந்தென்னைத் தடுத்தாண்டான் - ஊனே
புகுந்தான் என்உள்ளம் புகுந்தான் உயிரில்
புகுந்தான் கருணை புரிந்து..." (அருட்பெருஞ்சோதி)

என்று இறைவனின் ஆட்கொண்ட தன்மையைக் காட்டுகிறார். தூக்கங்-கெடுத்தல், சுகங்கொடுத்தல், உள்ளத்து ஏக்கந் தவிர்த்தல், இருள்அறுத்தல், ஆக்கம் மிகத் தருதல், தான் நான் எனும் பேதந் தவிர்த்தல், தடுத்தாட் கொள்ளல், ஊன்புகுதல், உள்ளம் புகுதல்,

உயிரில் புகுதல் என்ற இறைவனின் தொடர்ந்த செயல்பாடுகளுக்கு வித்திடுவது தான் அற்றுப்போதல் என்ற இறுதிநிலையே.

இதுகாறும் அத்தார் என்ற சூபி இறையை அடைவதற்குக் கூறிய ஏழு படிநிலைகளுடனும் திருஅருட்பாவின் கருத்துக்கள் ஒப்புநோக்கி ஆராயப்பட்டன. அவற்றின் இணைவுப்போக்குகள் எடுத்துரைக்கப்பட்டன. மாறுபாடுகள் மதிப்பிடப்பட்டன. உறவுநிலைகள் உணர்த்தப்பட்டன. சூபித்துவமும் திருஅருட்பாவும் இறையை அடையும் சிந்தனையில் ஒன்றுபட்டு நிற்பதையே அவை காட்டுகின்றன

இனி மற்றுமொரு சூபிக் கொள்கையை ஒப்புநோக்கி ஆராய முற்படலாம்.

## தௌகிட்-இ-ஸிபாதி என்ற கொள்கையும் திருஅருட்பாவும்:

சூபிக் கொள்கைககள் காலந்தோறும் தொடர்ந்து மாற்றங்களைப் பெற்று வளர்ந்து வந்துள்ளன. இஸ்லாம் சமயத்தில் சூபிக் கொள்கையின் வளர்ச்சியைத் தொடர்ந்து காணத் தோழமைச் சங்கங்கள், சூபிகளின் சங்கங்கள், மடங்கள், கான்வாதஸ் என்பனவும் ஏற்பட்டன. அவற்றுள் குறிப்பிடத் தக்கவையாக பின்வருவன விளங்குகின்றன. "ஸாய்திய்யா (Zaydiyya). அய்யாதியா (Iyadiyya). அதாமிய்யா (Adhamiyya). அஜாமிய்யா (Ajamiyyah), தைபூரிய்யா (Tayfuriyyah), கார்க்கிய்யா (Karkhiyya). ஜீனாதிய்யா (Junadiyyah), ஹீபாஇரிய்யா (Hubairriyyah), சிஷ்ட்டிய்யா (Chishtiyyah), கஸாரோனிய்யா (Gazaroniyyah), துஸிய்யா (Tusiyyah), ஸீஹ்ராவர்த்தியா (Suhravardiyyah) பிர்தௌஸிய்யா (Firdavsiyya)" (கீழை மேலை நாடுகளில் மெய்ப்பொருளியல் வரலாறு, ப-277-282)

மேற்குறித்த சூபிக் கொள்கைகள் எல்லாம் தனிநபர்களின் கருத்துப்படி தனிநபரது பெயராலேயே சங்கம் அல்லது மடங்கள் சார்பாக எழுந்தவை. ஆனால் தௌகிட்-இ-ஸிபாதி (Tauhid-i - Sifati) என்ற கொள்கை பொதுவான நிலையில் கூறப்படும் கொள்கையாகும். கடவுள் கருத்தை அடிப்படையாகக் கொண்டு கூறப்பட்டது. கடவுளுக்கும் ஸீபிக்கும் உள்ள உறவுநிலையை எடுத்துக்காட்டுகிறது. எனவே, அக்கொள்கை மாத்திரம் இங்கு ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளது.

## தௌகிட் - இ - ஸிபாதி கொள்கை :

இக்கொள்கை சூபிக்களின் பொதுத்தன்மையைக் குறிக்கும் கொள்கையாக உள்ளது. "கடவுளின் உண்மையான பொருளை

அற்றுப்போதல் என்பதும் எளிதில் நிகழக்கூடியதன்று என்பதை அருட்பா எடுத்துக்காட்டுகிறது. தன்னையறிதலில் நிகழ்கின்ற உள்ள உணர்வுகளைக் களைதல் சாதாரண செயலன்று அது தந்திரம் போன்றது.

"தன்னையறிந்தின்பமுற வெண்ணிலாவே - ஒரு
தந்திரம் நீ சொல்ல வேண்டும் வெண்ணிலாவே
நாதமுடி மேலிருந்த வெண்ணிலாவே - அங்கே
நானும் வர வேண்டுகின்றேன் வெண்ணிலாவே.......
இராப்பகலிலாவிடத்தே வெண்ணிலாவே நானும்
இருக்க வெண்ணி வாடுகின்றேன் வெண்ணிலாவே"

என்ற வெண்ணிலாக் கண்ணிப்பாடலில் தந்திரம் என்று இராம லிங்கர் குறிப்பிடுகிறார். அத்தந்திரநிலை தனித்துவம் வாய்ந்தது: போக்குவரவற்றது; இராப்பகல் இல்லாதது;இறையும் உயிரும் இணையும் மத்திய இணைப்புநிலை அவ்விணைப்பை வேண்டி உயிர் பட்ட பாட்டினையும் குறிப்பிடுகிறார்.

"தூக்கமும் சோம்பும் என் துன்பமும் அச்சமும் ஏக்கமும் நீக்கிய,
துன்பெலாம் தவிர்த்துளே அன்பெலாம் நிரம்ப இன்பெலாம்
அளித்த"

என்றதனால் அவரது அவல உணர்வு நிலை வெளிப்படுகிறது. துன்பம், ஏக்கம், அச்சம், தூக்கம், சோம்பல் என்பனவெல்லாம் நீக்கப்படுதலும் தானற்றுப் போதலின் படிநிலைகளாகும். அத்தகைய செயற்பாடுகளையெல்லாம் களைந்து இறைவன் தனதாக்கிக் கொண்டான் எனக் காட்டுகிறது அருட்பா.

"தூக்கங் கெடுத்தான் சுகங்கொடுத்தான் என்னுளத்தே
ஏக்கந் தவிர்த்தான் இருள்அறுத்தான் - ஆக்கமிகத் தந்தான்,
தான்நான் எனும் பேதந் தன்னைத் தவிர்த்தான் நான் ஆனான்,
நானே தவம்புரிந்தேன் நானிலத்தீர் அம்பலவன்
தானே வந்தென்னைத் தடுத்தாண்டான் - ஊனே
புகுந்தான் என்உள்ளம் புகுந்தான் உயிரில்
புகுந்தான் கருணை புரிந்து..." (அருட்பெருஞ்சோதி)

என்று இறைவனின் ஆட்கொண்ட தன்மையைக் காட்டுகிறார். தூக்கங்-கெடுத்தல், சுகங்கொடுத்தல், உள்ளத்து ஏக்கந் தவிர்த்தல், இருள்அறுத்தல், ஆக்கம் மிகத் தருதல், தான் நான் எனும் பேதந் தவிர்த்தல், தடுத்தாட் கொள்ளல், ஊன்புகுதல், உள்ளம் புகுதல்,

உயிரில் புகுதல் என்ற இறைவனின் தொடர்ந்த செயல்பாடுகளுக்கு வித்திடுவது தான் அற்றுப்போதல் என்ற இறுதிநிலையே.

இதுகாறும் அத்தார் என்ற சூபி இறையை அடைவதற்குக் கூறிய ஏழு படிநிலைகளுடனும் திருஅருட்பாவின் கருத்துக்கள் ஒப்புநோக்கி ஆராயப்பட்டன. அவற்றின் இணைவுப்போக்குகள் எடுத்துரைக்கப்பட்டன. மாறுபாடுகள் மதிப்பிடப்பட்டன. உறவுநிலைகள் உணர்த்தப்பட்டன. சூபித்துவமும் திருஅருட்பாவும் இறையை அடையும் சிந்தனையில் ஒன்றுபட்டு நிற்பதையே அவை காட்டுகின்றன

இனி மற்றுமொரு சூபிக் கொள்கையை ஒப்புநோக்கி ஆராய முற்படலாம்.

## தௌகிட்-இ-ஸிபாதி என்ற கொள்கையும் திருஅருட்பாவும்:

சூபிக் கொள்கைககள் காலந்தோறும் தொடர்ந்து மாற்றங்களைப் பெற்று வளர்ந்து வந்துள்ளன. இஸ்லாம் சமயத்தில் சூபிக் கொள்கையின் வளர்ச்சியைத் தொடர்ந்து காணத் தோழமைச் சங்கங்கள், சூபிகளின் சங்கங்கள், மடங்கள், கான்வாதஸ் என்பனவும் ஏற்பட்டன. அவற்றுள் குறிப்பிடத் தக்கவையாக பின்வருவன விளங்குகின்றன. "ஸாய்தியயா (Zaydiyya). அய்யாதியா (Iyadiyya). அதாமிய்யா (Adhamiyya). அஜாமிய்யா (Ajamiyyah), தைபூரிய்யா (Tayfuriyyah), கார்க்கிய்யா (Karkhiyya). ஜீனாதிய்யா (Junadiyyah), ஹீபாஇரிய்யா (Hubairriyyah), சிஷ்ட்டிய்யா (Chishtiyyah), கஸாரோனிய்யா (Gazaroniyyah). துஸிய்யா (Tusiyyah), ஸீஹ்ராவர்த்தியா (Suhravardiyyah) பிர்தௌஸிய்யா (Firdavsiyya)" (கீழை மேலை நாடுகளில் மெய்ப்பொருளியல் வரலாறு, ப-277-282)

மேற்குறித்த சூபிக் கொள்கைகள் எல்லாம் தனிநபர்களின் கருத்துப்படி தனிநபரது பெயராலேயே சங்கம் அல்லது மடங்கள் சார்பாக எழுந்தவை. ஆனால் தௌகிட்-இ-ஸிபாதி (Tauhid-i - Sifati) என்ற கொள்கை பொதுவான நிலையில் கூறப்படும் கொள்கையாகும். கடவுள் கருத்தை அடிப்படையாகக் கொண்டு கூறப்பட்டது. கடவுளுக்கும் ஸீபிக்கும் உள்ள உறவுநிலையை எடுத்துக்காட்டுகிறது. எனவே, அக்கொள்கை மாத்திரம் இங்கு ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளது.

## தௌகிட் - இ - ஸிபாதி கொள்கை :

இக்கொள்கை சூபிக்களின் பொதுத்தன்மையைக் குறிக்கும் கொள்கையாக உள்ளது "கடவுளின் உண்மையான பொருளை

ஸீபி அறிகின்றபோது அவரைத் தவிர வேறு ஒன்றும் அங்கு இல்லை. அந்த வேளையில் ஸீபி கேட்பது-கடவுள் கேட்பது, அவர் காண்பது - கடவுள் காண்பது, அவர் பேசுவது - கடவுள் பேச்சு, அவர் வாழ்வு - கடவுள் வாழ்வு, அவர் அறிவு-கடவுள் அறிவு, அவர் செயலாற்றல் - கடவுள் செயலாற்றல், அவர் ஆற்றல் -கடவுளின் ஆற்றல் என இறைவன் அருளால் ஸீபி அறிகின்றார். இவற்றை எல்லாம் கடவுள் அடிப்படையில் பெற்றிருக்கின்றார். இவ்வை எல்லாக் குணங்களும் கடனாகக் கொள்ளப் பெறுகின்றன. இவைகள் கடவுளுக்கே உரியனவாயினும், புலன் கடந்த பொருளியல் கருத்தின்படி தனக்கே கூறப்பெறுகின்றன. இதுவே தௌகிட் - இ - ஸிபாதி என்னும் கொள்கையாகும்" (மேலது)

இக்கொள்கை முன்னர் ஆராயப்பட்ட சூபி அத்தார் கூறிய படிநிலைகளில் இறுதி நிலையுடன் பொருந்துவனவாக உள்ளது. தான் அற்றுப்போதல் என்ற நிலையில் இறைவனுடன் கலத்தல் நிகழ்வதாகக் கண்டோம். அதன் பின்னர் சூபியும் இறையும் ஒன்றாகிவிடுகின்றனர். அக்கருத்தை வலியுறுத்துவதாகவே இக்கொள்கையும் விளங்குகிறது.

சூபியின் செயல்கள் அனைத்தும் இறைவன் செயல்கள். அவன் செயற்பாடுகளே அருளாளரின்செயல்களாகப் பரிமளிக்கின்றன. அவன் இயக்க அவர்கள் இயங்குகின்றனர் என்பதை இக்கொள்கை வலியுறுத்துகிறது.

"பாட்டுவித்தால் பாடுகின்றேன் பணிவித்தால் பணிகின்றேன்
பதியே நின்னைக் கூட்டுவித்தால் கூடுகின்றேன்
குழைவித்தால் குழைகின்றேன் குறித்த ஊனை
ஊட்டுவித்தால் உண்கின்றேன் உறங்குவித்தால்
உறங்குகின்றேன் உறங்கா தென்றும்
ஆட்டுவித்தால் ஆடுகின்றேன் அந்தோ
இச்சிறியேனால் ஆவதென்னே" (தற்சுதந்திரம் இன்மை)

என்ற அருட்பா இக்கொள்கைக்குத் தக்க சான்றாக அமைகின்றது. இயக்குனராக இறைவனிருந்து இயக்க, இயக்கங்கள் உயிருள் ஒவ்வொரு நிலையிலும் இயங்குகின்றன என்பதை உணர்த்தும் பாடலது.

கிறித்தவ அப்பாலைய அருளியல் நிலையில் இத்தகைய போக்கினை லேடி ஜீலிஸஸ் (Lady Julises) என்பவரது பெறுவானைப் பெறுதல் என்ற நிலையில் இதே இணைவு இயக்கநிலையைக் காணமுடிகிறது. கிறிஸ்துவின் உன்னதப்பாட்டு-

(Hymen of Jesus) எனும் பாடல் ஆன்மாவிற்கும் இறைவனுக்கும் இடையே நடைபெறும் உரையாடலாக உள்ளது.

"நான் காக்கப்படுவேன் - காப்பேன்
நான் தொலைந்துவிடுவேன் - இழப்பேன்
நான் பிறப்பேன் - பெறுவேன்
நான்உண்ணப்படுவேன் - உண்பேன்
நான் கேட்பேன் - கேட்பிப்பேன்" (Mysticism, P-134)

என்ற சொல்லாடல்கள் உயிருக்கும் இறைக்கும் உள்ள இணக்கத்தை எடுத்துக் காட்டுகின்றன.

உயிரை அணைத்துக் கொண்ட இறையின் கூற்றாக இஸ்லாமியக் கலைக் களஞ்சியம் கூறுவதை நோக்குமிடத்து அவ்விணைப்பு வலுவானதென்று புரிகின்றது. அவ்விணைப்பு நிலையைப் பற்றி இறைவன் ஹதீதுல் குஸ்தியில் பொழுது, "என் அடியான் என்னை அணுகுகின்றான். நான் அவனை நேசிக்கின்றேன்.நான் அவனை நேசிக்கும்போது நான் அவனுடைய காதாக ஆகிவிடுகின்றேன். எனவே அவன் என் செவிமூலம் செவியுறுகிறான். நான் அவனுடைய கண்ணாகிவிடுகிறேன். எனவே அவன் என் கண்வழியாகக் காண்கிறான். நான் அவனுடைய நாவாக ஆகிவிடுகிறேன். எனவே அவன் என் நாவால் பேசுகிறான். நான் அவனுடைய கையாகி விடுகிறேன். எனவே, அவன் என் கையால் செயலாற்றுகின்றான் என்று இயம்புகின்றான்" என்று இறை கூறுவதாகக் கூற்று இடம் பெறுகிறது.

அவ்வாறு பெறப்பட்ட இணக்கமே அருளாளர்களிடத்து சமூகத்தை வழிப்படுத்த எழுந்த துணிவுரைகளாக ஒலிக்கின்றன.

"நான் உரைக்கும் வார்த்தைஎலாம் நாயகன்றன் வார்த்தை
நம்புமினோ நமரங்காள் நற்றருணம் இதுவே ............
ஏனுரைத்தேன் இரக்கத்தால் எடுத்துரைத்தேன் கண்டீர்
யானடையும் சுகத்தினை நீர்அடைதல் குறித்தே" (மரணமிலாப் பெருவாழ்வு)

என்று தான் பெற்ற இன்ப இணைவு சுகத்தை இவ்வையகத்துள் உள்ளவரும் பெறவேண்டும் என்ற பேரவாவினை அருட்பா வெளிப்படுத்துகிறது.

இவ்வாறு தௌகிட் - இ - ஸிபாதி என்ற சூபித்துக் கொள்கைக் கருத்துக்கள் கிறித்தவம், திருஅருட்பா என்பவற்றிலும் இடம் பெற்றுள்ளன.

## சூபித்துவம் காட்டும் மனிதப்பாகுபாடுகள் :

கடவுள் கருத்தை ஏற்றுக்கொள்வதை அடிப்படையாகக் கொண்டு ஆத்திகர், நாத்திகர் எனப் பொதுவாகப் பகுத்துக் கூறுவர். சூபித்துவமும் சூராவாக்கிய என்பதனுள் மூன்று வகை மனிதப் பாகுபாடுகளைப் பகுத்துக் காட்டுகிறது. அவை,

1. வலது கைத் தோழர்கள்
2. இடது கைத் தோழர்கள்
3. கடவுளுக்கு அருகே இருப்பவர்கள்

என்பவை. இனி ஒவ்வொரு பாகுபாடுகளையும் விளக்கமாகக் காணலாம்.

### வலதுகைத் தோழர்கள் :

"வலதுகைத் தோழர்கள் என்பவர்கள் காணப்படாத கடவுளை நம்புகின்றவர்கள். விடாது தொழுபவர்கள். இனி வரப்போகும் உலகைப் பற்றி அவர்கள் உள்ளத்தில் உறுதி பெற்றவர்கள் இவர்கள். இறைவனால் சரியான வழியில் வழிகாட்டி நடத்தப் பெற்றவர்கள்."

அத்தகையோரை அனைத்துச் சமய வரலாற்றிலும் காண்கிறோம். சைவ சமயத்து நாயன்மார்கள், வைணவ சமய ஆழ்வார்கள், கிறித்தவ பாதிரிமார்கள், பௌத்த பிக்குகள், போன்றோரும் இத்தகு வலது கைத் தோழாகளே. இவர்கள் இறைவனால் சரியான வழியில் வழிகாட்டப்பட்ட தோடு மட்டுமில்லாமல் உலகத்தவரையும் அவ்வழியில் வழிநடத்திச் சென்றவர்கள். தனித்து மட்டுமல்லாது குழாமாக இறைச் சிந்தனையை நாளும் உலகுக்கு பரப்பியவர்கள்.

### இடதுகைத் தோழர்கள் :

"இடது கைத் தோழர்கள் என்பவர்கள் பொய்க் கடவுளைத் தேடிச் செல்பவர்கள். இவர்களுக்கு வழிகாட்டப் பெறுவதை, தவறிழைத்ததால் மாற்றிக் கொண்டவர்கள். இவர்கள் செல்ல வேண்டிய உண்மையான திசைக்கு வழியை இழந்தவர்கள். இப்பாகுபாடு அவர்கள் செயலுக்குக் காரணமாய் இருக்கின்ற அறிவைச் சார்ந்து அமைந்ததாகும். சரியான வழியை அறியும் அறிவு, தவறான வழியின் மயக்கம் இவற்றால் அவர்களின் செயல்கள் நிகழ்கின்றன" என்று இடது கைத் தேழர்களின் தன்மை, செயற்பாடுகள் குறித்து சூபித்துவம் விளக்கம் தருகிறது. சமய வரலாற்றை நோக்குமிடத்து தன் சமயத்தவரைத் தவிர்த்து, அடுத்த

சமயத்தாரைக் குறிப்பிடும்போது மேற்குறித்த நிலையிலேயே குறிப்பிடுகின்றனர். அது காரண காரியங்களை ஆராயாது எடுத்த எடுப்பிலேயே சட்டென மறுத்துவிடுகின்ற அநாகரிகவாதம். உண்மையிலேயே உள்ளன்போடு அவர்களுக்கு வழிகாட்டும், நோக்கத்தோடு அவர்களது தவறுகளைச் சுட்டிக்காட்டி திருத்த முற்படும் அருளாளர்களும் உள்ளனர். அத்தகைய வழிகாட்டும் நோக்கத்துடனும், மெய்வழியில் உலகத்தவரை வழிநடத்த வேண்டும் என்ற எண்ணத்தில் கூறப்பட்ட கருத்துக்களை அருட்பாவின் இறுதியில் மிகுதியாகக் காணலாம். இராமலிங்கரும் தனது நோக்கில் இடது கைத் தோழர்களை இனங்காட்டுகிறார்.

1. "மதம் எனும் பேய் பிடித்தாட்ட ஆடுகின்றோர் எல்லாம்
மன்றித்தே வள்ளல்செயும் மாநடம் காண்டுவரோ
சதம் எனவே இருக்கின்றார். படுவதறிந்தில ரே
சாகாத கல்விகற்கும் தரம் இவர்க்கும்உளதோ" (அனுபவ மாலை)

2. "ஆயா மையாலே நீர்ஆதி அனாதி
ஆகிய ஜோதியை அறிந்து கொள்கில்லீர்

3. சாமாந்தர் ஆகாத் தரஞ் சிறிதுணரீர்
தத்துவ ஞானத்தை இற்றெனத் தெரியிர்

4. எத்துணை கொள்கின்றீர் பித்துலகீரே

5. வட்டிமேல் வட்டி கொள் மார்க்கத்தில் நின்றீர்
வட்டியை வளர்க்கின்ற மார்க்கத்தை அறியீர்

6. மன்சொல்லும் மார்க்கத்தை மறந்து துன்மார்க்க
வழிநடக்கின்றீர் அம்மரணத் தீர்ப்புக்கே
என்சொல்ல இருக்கின்றீர் பின்சொல்வதறியீர்
எத்துணை கொள்கின்றீர் பித்துலகீரே

7. துன்மார்க்க நடையிடைத் தூங்குகின்றீரே
தூக்கத்தை விடுகின்ற துணைஒன்றும் கருதீர்
சன்மார்க்க சங்கத்தைச் சார்ந்திட விழையீர்
சாவையும் பிறப்பையும் தவிர்ந்திட விரும்பீர்" (உலகர்க்கும் உய்வகை கூறல்)

8. "சாதியிலே மதங்களிலே சமயநெறிகளிலே
சாத்திரச் சந்தடிகளிலே கோத்திரச் சண்டையிலே
ஆதியிலே அபிமானித் தலைகின்ற உலகீர்
அலைந்தலைந்து வீணேநீர் அழிதல் அழகலவே

9. காடுவெட்டி நிலந்திருத்திக் காட்டெருவும் போட்டுக்
கரும்பை விட்டுக் கடுவிரைத்துக் களிக்கின்ற உலகீர்
பட்டதெல்லாம் போதும்இது பரமர்வரு தருணம்
ஈடுகட்டி வருவீரேல் இன்பம் மிகப்பெறுவீர்
எண்மை உரைத்தேன் அவன்நான் உண்மையுரைத்தேனே

10. கைவிளக்குப் பிடித்தொரு பாழ்ங்கிணற்றில் விழுகின்ற
களியர் எனக்களிக்கின்றீர் கருத்திருந்தும் கருதீர்
மெய்விளக்க எனது தந்தை வருகின்ற தருணம்......
மேவிய தீண்டடைவீரேல் ஆவி பெறுவீரே

11. வையகத்தீர் வானகத்தீர் மற்றகத்தீர் நுமது
வாழ்க்கை எலாம் வாழ்க்கை என மதித்து மயங்காதீர்
மையகத்தே உறுமரண வாதனையைத் தவிர்த்த
வாழ்க்கையதே வாழ்க்கை..." (புனித குலம்பெறுமாறு புகலல்)

மேற்குறித்த சான்றுகளில் வகையறியாது வாழும் மக்களின் போக்குகள் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன. அவற்றோடமையாது அவர்களுக்குச் சரியான வழி ஈதென உணர்த்தப்படுகின்றது. எனவே இடதுகைத் தோழர்களை இனங்காட்டுதலோடு மட்டுமன்றி அவர்கட்கு உறுதிப்பொருளை உரைத்து வழிப் படுத்தவும் அருளாளர் முயன்றிருக்கின்றனர் என்பது தெளிவு. திருஅருட்பா அப்பணியைத் தெளிவாகவும் விளக்கமாகவும் ஆற்றியிருக்கிறது.

## கடவுளுக்கு அருகே இருப்பவர்கள் :

மூன்றாம் பகுப்பாகிய இப்பகுப்பு மிகவும் உன்னத நிலையைக் குறிப்பதாக உள்ளது. கடவுளுக்கு அருகே இருப்பவர்கள் யார்? அவர்கள் தன்மை என்ன? என்பதற்கு விளக்கத்தை நோக்குமிடத்து, "கடவுளால் வழிகாட்டப்பெற்று சரியான வழியில் செல்பவர்கள் மட்டும் அன்றி படைப்போனுக்கும், படைத்த பொருளுக்கும் உள்ள தொடர்பை அறிந்தவர்களும் ஆவர், தெளிவாகக் கூறவேண்டுமானால் படைத்தோனைத் தெய்வமாகக் கருதி அவனையே வழிபடுபவர்கள். அவன் உதவியையே நாடுபவர்கள். நாம் தொழுவதற்கும் நமக்கு உதவி புரிவதற்கும் அவனை விட வேறு ஒருவரும் இலர் என்று நம்புபவர்கள்" என்று தெளிவாக இனங்காட்டப் பட்டுள்ளார்கள். அவ்விளக்கந்தனைச் சான்றுகளுடன் ஒப்பிட்டுக் காணலாம்.

## கடவுளால் வழிகாட்டப் பெற்று சரியான வழியில் செல்பவர்

திருஅருட்பாவும் கடவுளால் வழிபடுத்தப்பட்ட செய்தியை எடுத்துரைக்கின்றது.

1. "நாடாக் கொடிய மனம்அடக்கி நல்லமனத்தைக் கனிவித்துப்
பாடாப் பிழையைப் பொறுத்தெனக்கும் பதம் ஈதாண்ட
பதிக்கொடியே" (சிற்சத்திதுதி)

2. "எல்லார்க்கும் கடையாகி இருந்தேனுக்கருள்புரிந்தே
எல்லார்க்கும் துணையாகி இருக்க வைத்தாய்" (தனித்திரு
அலங்கல்)

## படைத்தோனைத் தெய்வமாகக் கருதி வழிபடுபவர்கள் :

அருட்பாவின் ஏராளமான பாடற் கருத்துக்கள் இப்பகுப்பில் அடங்குவனவாகவே உள்ளன. சான்றாக ஒரு பாடலை மட்டும் எடுத்துக் காட்டலாம்.

"படைத்திடல் முதல் ஐந்தொழில் புரிந்திலங்கும்
பரம்பர ஒளிஎலாம் அணுவில்
கிடைத்திடக் கீழ்மேல் நடுஎனக் காட்டாக்
கிளர் ஒளியாய் ஒளிக்கெல்லாம்
அடைத்த காரணமாய்க் காரணங்க கடந்த
அருட்பெருஞ் சோதியாம் ஒருவன்
கடைத்தனிச் சிறியேன் உளம்புகுந்த மர்ந்தான்
கடவுளைத் தடுப்பவர் யாரே" (வரம்பில் வியப்பு)

என்ற பாடலில் படைத்த தெய்வத்தின் தன்மை இன்னதென எடுத்துக் கூறி அவனைத்தெய்வமாக ஏற்ற நிலையையும், அவனைத் தெய்வமாகத் தான் அடைவதற்குத் தடை விதிக்க யாரால் முடியும் என்ற பெருமித வினாவையும் எழுப்பியிருப்பதை அறிய முடிகிறது.

## இறைவனின் உதவியையே நாடுபவர்கள் :

இறைவனால் பெறுகின்ற உதவி என்பது எல்லாவற்றையும் அவனே தருகிறான் என்ற எண்ணத்தை அடைவதே ஆகும். அனைத்துக் காரியங்களிலும் அவனே நமக்கு உதவி புரிகிறான் என்ற எண்ணத்துடன் வாழ்வர்.

"நான் குறித்த பொருள்கள் எலாம் நாழிகை ஒன்றதிலே
கிடைக்க எனக்களித் தகத்தும் புறத்தும் அகப்புறத்தும்

*கிளர்ந்தொளி கொண்டோங்கிய மெய்க்கிளை*
*எனும்பேரொளியே" (அருள்விளக்க மாலை)*

என்ற அருட்பா வரிகள் இறை உதவியைப் பெற்ற தன்மையினைக் காட்டுகின்றன.

**சமாதி வற்புறுத்தல் :**

மனித உயிர் போன பின்பு உடலை எரியூட்டாது மண்ணில் புதைக்கவேண்டும் எனக் கூறுதலே சமாதி வற்புறுத்தலாம்.

உலகில் உள்ள பெரும்பான்மை மக்கள் பின்பற்றும் சமயங்களான கிறித்தவமும், இஸ்லாமியமும் இறந்த பின்னர் உடலைச் சமாதி வைப்பதையே கடைபிடித்து வருகின்றன.

கிறித்தவத்தில் ஞானஸ்தனாமும், சமாதியில் அடக்கம் செய்யப் படுதலும் இயேசு கிறிஸ்துவுடன் ஒப்பிட்டு எண்ணப்படுகிறது.

"கிறிஸ்து இயேசுவுக்குள் ஞானஸ்தானம் பெற்ற நாமனைவரும் அவருடைய மரணத்திற்குள் ஞானஸ்நானம் பெற்றோம் என்பதை அறியீர்களா? ஆகவே இறந்தோரிடமிருந்து கிறிஸ்து பரம தந்தையின் மாட்சிமையால் எழுப்பப்பட்டது போல நாமும் புத்துயிர் பெற்றவர்களாய் வாழும்படி ஞானஸ்நானத்தின் வழியாய் அவரோடு இறந்து புதைக்கப்பட்டோம்" (ரோமர்-64)

இங்கு இரு செய்திகள் வற்புறுத்தப்படுகின்றன. முதலாவது இறந்தவரைப்புதைத்தல் என்பது. அடுத்ததாக இயேசு எழுப்பப்பட்டது போல அடக்கம் செய்யப்பட்டவர் அனைவரும் மீண்டும் எழுப்பப்படுவர் எனக்கூறுவது. அதனை வலியுறுத்தும் வகையில், "மனித உடல் இறப்பிற்குப் பின்னர் விதை போல விதைக்கப்படுகிறது" **(The secret cannons, P-47 - D.Hannan)** என்ற கருத்தும் கிறித்தவப் புனித விதிகளில் குறிப்பிடப்பட்டுள்ளது.

அதனைப் போலவே இராமலிங்கரும் குறிப்பிடுகிறார்:

*"பரன் அளிக்கும் தேகம் இது சுடுவதபராதம் எனப் பகர்கின்றேன் நீர்*
*சிரம்நெறிக்கச் சுடுகின்றீர் செத்தவர்கள் பற்பலரும் சித்தசாமி*
*உரனளிக்க எழுகின்ற திருநாள் வந்தடுத்தன ஈதுணர்ந்து நல்லோர்*
*வரனளிக்கப் புதைத்தநிலை காணீரோ கண்கொட்ட மாட்டினீரே"*
*(சமாதி வற்புறுத்தல்)*

என்ற வரிகளில் இருந்து, சமாதி வற்புறுத்தலில் உறுதியான போக்கினை இராமலிங்கர் கொண்டிருந்தார் எனக் கருத இடமுண்டு.

இஸ்லாமிய சமயமும் இறந்தபின்னர் அடக்கம் செய்வதையே வற்புறுத்துகிறது. அடக்கம் செய்யும் முறையைக் காகத்தின் மூலமாக அல்லா மக்களுக்கு விளக்கமளித்தார் என்று குரான் குறிப்பிடுகிறது.

நா. முத்துக்குமாரசாமி என்பவர், கிறித்தவமும் இஸ்லாமும் குறிப்பிடுவதைப் போல இராமலிங்கரும் சமாதி வற்புறுத்தலை வலியுறுத்திய கருத்தைப் பின்வருமாறு விமர்சனம் செய்கிறார்! "இந்து சமயத்துக்கு மாறுபட்ட ஒரு கோணத்தில் சிந்தனை செய்தே, பண்டைய தமிழர் மேற்கொண்டிருந்த புதைத்தல் முறைக்குப் புத்துயிர் ஊட்டித் தமது இறவாநெறிக் கொள்கைக்கு அவர் ஆக்கம் தேடினார் என்பதை நாம் உணரவேண்டும்" (விஞ்ஞான அருளாளர் வள்ளலார் - நா.முத்துகுமாரசாமி) என்கிறார் அவர். அக்கூற்றில் புதைத்தல் என்பது பண்டையத் தமிழர் முறை என்பது சிந்தனைக்குரியது. தொன்றுதொட்டு வந்த பழக்கத்தின் எச்சமாகத் தமிழகத்தில் இந்துக்களில் சிலர் புதைத்தல் முறையைப் பின்பற்றுகின்றனர் என்பதும் மறுக்கவியலாத உண்மை.

சமாதி வற்புறுத்தல் என்பது இராமலிங்கருக்கு ஆரம்ப கால உடன்பாடா? கடைசிக்கால உடன்பாடா? பிறரால் தெரிந்து பின்னர் செய்யப்பட்ட உடன்பாடா? என்பது ஆய்விற்குரியது.

கிறித்தவத்தின் செல்வாக்கும், கிறித்தவர் வருகையும் ஒரு காரணமாக இருக்கக்கூடும். பாண்டிச்சேரியில் கிறித்தவரின் ஆதிக்கம் அதிகம் இருந்த போது, அருகாமையில் உள்ள வடலூருக்கும் பாண்டிச்சேரிக்கும் தொடர்பு நெருக்கம் ஏற்பட வாய்ப்புள்ளது. எது எவ்வாறிருப்பினும் முதல் ஐந்து திருமுறைகளில் குறிப்பு எதுவுமில்லை. ஆறாந் திருமுறையில்தான் வலியுறுத்தப்பட்டுள்ளது. எனவே மரணமில்லாப் பெருவாழ்வு என்ற கோட்பாடு இராமலிங்கரிடம் வலுப்பெற்றவுடன் எழுந்த கருத்து உடன்பாடாகவே அதனைக் கொள்ளமுடியும்.

உடலை விட்டு உயிர்போன பின்பு இறந்துவிட்டார் எனக் குறிப்பது சமய வழக்கன்று. இந்துக்கள் "சிவலோக பதவியடைந்தார், வைகுந்த பதவி அடைந்தார், என்கின்றனர். கிறித்தவர்கள் 'கர்த்தருக்குள் நித்திரையடைந்தார்' எனக் குறிப்பிடுவர். சன்மார்க்கத்தைச் சார்ந்தவர்கள் 'உயிரடக்கம் கொண்டார்' என்றுதான் குறிப்பிடுகின்றனர். ஒருவர் இறந்த பின்பு, அவர் இறக்கும் தருணத்தில் எந்நிலையில் இருந்தாரோ அவ்வாறே உயிரடக்கம் செய்கின்றனர் என்பதைக் கள ஆய்வில் அறிய

முடிந்தது". (வடலூரில் தெம்மூர் இராஜமாணிக்கம் முதலியார் என்பவரின் மனைவி இராஜ வல்லியம்மாள் இறந்த பின்னர், அவரைக் குளிப்பாட்டாது இறந்த நேரத்தில் அணிந்த அதே ஆடை, நகைகளுடன் அடக்கம் செய்துள்ளனர்.)

## திருக்காப்பிட்டுக் கொள்ளல் :

சூபி ஞானிகளிடம் ஒரு குறிப்பிட்ட வழக்கம் காணப்படுகிறது. இந்தியாவில் இப்பொழுது சிஷ்டிய (**Chishtia**) நக்ஷ்பந்திய்யா (**Naqsh Bandiyya**), குவாத்திரிய்யா (**Quadriyyah**) ஸீஹ்ரவார்தியா (**Suhrawardiyyah**) என்ற நான்கு ஸீபி சங்கங்கள் மேம்பட்ட நிலையில் உள்ளன. அதில் "சிஷ்டியா சங்கத்தைச் சேர்ந்தவர்கள் 'சில்லா' என்பதை மேற்கொள்பவர்கள். அவர்கள் ஓர் அறையில் தங்களை அடைத்துக்கொண்டு மிகக் குறைந்த உணவு, உடைகளைஏற்று, தூக்கம் இன்றி நாற்பது நாட்கள் இருப்பவர்கள்" என்பதை அறிகிறோம்.

இராமலிங்கரும் இறுதியில் சித்தி வளாகம் என்ற இடத்தில் ஓர் அறைக்குள் சென்று திருக்காப்பிட்டுக் கொண்டார். பின்னர் வெளியில் வரவே இல்லை. உடலோடு இறைவனுடன் கலந்து விட்டார் என்றெல்லாம் அவரது வரலாறு பலவாறாகப் பேசப் படுகிறது. அவரது மறைவு குறித்துத் தெளிவான தகவல்கள் இன்றுவரை இல்லை. ஆயினும் திருக்காப்பிட்டுக் கொண்ட நிகழ்வு உண்மையென்பதை வடலூரில் இன்றும் அவ்வறை புனிதமாகப் போற்றப்படுவதில் (படம் காண்க) இருந்து அறிந்துகொள்ளலாம். இவ்வாறு தனியறைக்குள் சென்று திருக்காப்பிட்டுக் கொள்ளுதல் என்ற செயல் சூபிகளிடமும் இராமலிங்கரிடமும் காணப்படுகிறது.

# 5. சமணமும் திருஅருட்பாவும்

சமய ஒருமைப்பாடு எனும் உணர்வு இராமலிங்கரிடம் இருந்ததால் பிற சமயக் கருத்துக்களின் தாக்கங்கள் இருக்கலாம் என்று எண்ணுவது இயல்பே. பிற சமய கருத்துக்களில் நல்லனவற்றை ஏற்று, அல்லனவற்றை புறக்கணித்தும் வந்திருக்கிறார். உருவ வழிபாட்டை ஏற்காமை, சமாதி வற்புறுத்தல் போன்ற கருத்துக்களில் கிறித்தவ, இஸ்லாமிய சமயக் கருத்துக்களுடன் ஒத்துவருகின்ற அருட்பா ஆசிரியர் உயிர்க்கொலை என்ற கருத்தை சிறிதும் ஏற்பதில்லை. இறைவனால் படைக்கப்பட்டவை அனைத்தும் மனிதன் அனுபவிப்பதற்காகவே என்ற கருத்தில் உறுதியாக நின்ற அச்சமயங்கள் புலால் மறுப்பு, உயிர்க் கொலை தவிர்த்தல் என்ற நெறியில் சிந்திப்பதில்லை. ஆனால் இராமலிங்கர் புலால் மறுப்பு, அகிம்சை, உயிர்க்கொலை தவிர்த்தல், ஜீவகாருண்யம் போன்றவற்றை சன்மார்க்கத்தில் பெரிதும் வற்புறுத்துவார்.

“ஊன் உண்ணாமையை வலியுறுத்தியவர்கள் ஜைன அறவோர்களே அன்றி வேறொருவரும் இல்லை” (Jainism, P-3) என்ற ஹெர்பெட் லாரென்ஸின் கூற்று இங்கு நினைவு கூறத்தக்கது.

ஊன் உண்ணாமை என்ற அடித்தளத்தில் சமணமும் திருஅருட்பாவும் சமஇடத்தை பெற முடியும். அதனால் அவற்றிற்கிடையே உள்ள கருத்தலகுகளை ஆராய்ந்து ஒப்புமை உறழ்ச்சிகளை எடுத்துக்காட்டுவது கடமையாகிறது.

**சமணம்**

ஜைனம் என்று அழைக்கப்படும் சமண சமயம் பழமை வாய்ந்தது. பாமர மக்களோடு தொடர்புடையது. ஊழினை வெல்லலாம் என்று உறுதி அளிப்பது. தெ.பொ. மீ கருத்து பின்வருமாறு:

“சைன மதம் இந்திய வரலாற்றில் பேரும் புகழும் பெற்றது. சைனர்கள் கிறித்தவ பாதிரிகளைப் போல தம்முடைய கொள்கைகளை பொதுமக்கள் பேசிய மொழிகளிலேயே மக்களின் இளமை முதல் பரப்பியதால் அவ்வம் மக்களது தாய்மொழியை வளர்த்த பெருமையும் ஆராய்ந்த சிறப்பும் அவர்களுக்கு உண்டு. 'ஐம்பொறிகளை அடக்கி வென்றவர், ஊழினைக் கடந்து வென்றவர்' என்ற பொருளில் இம்மதத்தை கண்டவர்க்கு ஜினர் என்று பெயராகும். அவர் கண்ட உண்மை சைனம் என்றும் அவரைப்

பின்பற்றுவோரை சைனர் என்றும் தமிழில் வழங்குவர்." என தெ.பொ. மீ அவர்கள் சமண சமயத்தை நமக்கு அறிமுகப் படுத்தும் நிலை இது. (சமணத் தமிழ் இலக்கிய வரலாறு) இருந்தாலும் அதில் ஜைன சமயத்தின் வரலாற்றுச் சிறப்பும், சமணம் பொதுமக்களிடம் இயல்பாக பழகிய நிலையும் புலனாகின்றன.

ஜீனர் என்பவர் கண்டுரைத்த ஜைனமதம் பற்றி மேரு மந்தர புராணத்தில் ஸ்ரீ வாமன முனிவர் கூறுவதை ஆராய்வது நல்லது.

1. "சர்வஜீவ தயாபரனும் சர்வ ஹித காரணனும் ஆன ஜீநனால் ஏனைய ஜீவன்கள் மாற்றத்தினின்றும் மீண்டு பரமசுகமடைந்துய்யுமாறு உபதேசிக்கப் பெற்றதும்.
2. கொல்லா விரதமே மூலமந்திரம் என்றும், பரமாத்மனே தெய்வமென்றும், எல்லா உயிர்களிடத்தும் அன்பும் தயவும் பூண்டு அவைகளுக்கு இதம் புரிதலே உண்மை வேள்வி.
3. தனக்குள் அநாதி காலமாய் படிந்து உரம் பெற்றுள்ள கர்மமாகிற களங்கத்தினைத் தியானமாகிற அக்கினியால் எரித்தொழித்து ஆத்ம ஜோதியைப் பெறுவதே தவம்
4. சம்சாரம் அநித்யமாகையால் வீடே பெறற்பாலதென்றும், வீடுபெறும் வழி நற்காட்சி, நல்ஞானம், நல்லொழுக்கம் மூன்றும் ஒருதலைப்பட்டு நிற்பது என்பதும் உணர்த்தி ஸ்யாத்வாதம் என்ற பெயர் பூண்டு விளங்குவதுமாகிய சமயமே ஜைன சமயம்" (மேருமந்தர புராணம், ப-III)

பரமசுகமடைதல், உயிர் இரக்கம், ஆத்மசோதியைப் பெறுதல், வீடுபேறு அடையும் வழி என்பனவற்றோடு அருட்பாக் கருத்துக்கள் இயைந்து செல்வதும் உண்டு. மேற்கூறிய கருத்துக்களோடு அருட்பாச் செய்திகளை ஒப்புநோக்கி இனிக் காணலாம்.

**பரம சுகமடைதல் :**

**சமணம்** : அனைத்து உயிர்களிடமும் கருணை காட்டும் தயாபரனாம் ஜீநனால் ஏனைய ஜீவன்கள் மாற்றத்தினின்றும் மீண்டு பரமசுகமடைந்துய்ய முடியும் என்று சமணம் பூரணமாக நம்புகிறது.

**திருஅருட்பா :**

"விண்டதனால் என் இனி நீர் சமரச சன்மார்க்க
மெய்ந்நெறியைக் கடைப்பிடித்து மெய்ப்பொருள் நன்குணர்ந்தே

*எண்டகு சிற்றம்பலத்தே எந்தைஅருள் அடைமின்*
*இறவாத வரம்பெறலாம் இன்பமுறலாமே" (மரணமிலாப் பெருவாழ்வு, பா-5579)*

ஜீனரால் ஏற்படுத்தப்பட்ட சமண சமயத்தை பின்பற்றினால் உய்வடையலாம் அல்லது ஜீனரின் வழியைப் பின்பற்றினால் பரமசுகமடையலாம் என்பது சமண சமயக் கருத்து. அதனைப் போன்றே இராமலிங்கரின் சன்மார்க்க நெறியை பின்பற்றினால் உயிர்கள் மரணமிலாப் பெருவாழ்வு பெறலாம் அல்லது இராம லிங்கரின் வழியைப் பின்பற்றினால் இறவாத வரமும் இன்பமும் பெறலாம் என்பது திருஅருட்பாக் கருத்து.

**உயிர் இரக்கம் :**

***சமணம்*** *: 1. கொல்லா விரதமே மூலமந்திரம்.*

*2. பரமாத்மனே தெய்வம்.*

*3. எல்லா உயிர்களிடத்தும் அன்பும் தயவும் பூண்டு அவகளுக்கு இதமாக வாழ்வதே உண்மை வேள்வி.*

*திருவருட்பா :*

*1. "கொல்லா நெறியே குருவருள் நெறி எனப் பல்கால் எனக்குப் பகர்ந்த மெய்ச்சிவமே" (அருட்பெருஞ்ஜோதி அகவல்)*

*2. "எல்லா உயிர்கட்கும் இன்பந் தருவதற்கு அகத்தும் புறத்தும் விளங்குகிற அருட்பெருஞ்சோதி உண்மைக்கடவுள் ஒருவரே உள்ளார்". (சமரச சுத்த சன்மார்க்கப் பெருவிண்ணப்பம்)*

*3. "உலகினில் உயிர்களுக்குறும் இடையூறெலாம் விலகிநீ அடைந்து விலக்குக" (அருட்பெருஞ்ஜோதி அகவல்-1589)*

கொள்ளாவிரதமே சமணத்திற்கு மூலமந்தரம், கொல்லா நெறியே அருட்பாவின் குருவருள் நெறி. சமணத்தில் பரமாத்மனே தெய்வம். அருட்பெருஞ்சோதி ஆண்டவரே அருட்பா காட்டும் கடவுள். எல்லா உயிர்களிடமும் அன்பும் தயவும் பூண்டு அவைகளுக்கு இதமாக வாழ்வதே சமணத்தில் சொல்லப்பட்ட உண்மை வேள்வி. எல்லா உயிர்களும் இன்புற்று வாழ அவைகளுக்கு ஏற்படும் இடையூறுகளைக் களைந்து அன்பு செலுத்தி சுத்தசன்மார்க்க நிலை அடைதலே அருட்பாக் காட்டும் உத்தம வேள்வி.

## ஆத்ம ஜோதியைப் பெறுதல் :

*சமணம்* : காலந்தோறும் தொடர்ந்து வரும் கர்ம வினைகளைத் தியானத்தில் அழித்து ஆத்ம ஜோதியைப் பெறுவதே தவம்.

*திருவருட்பா* : "எந்த வேலை செய்யினும், எந்த விவகாரஞ் செய்யினும் சிவ சிந்தனையோடு செய்து பழகுதல் வேண்டும். இந்த தேகத்தில் புருவ மத்தியில் நமது ஆன்ம அறிவென்கிற கற்பூரத்தில், கடவுள் அருள் என்கிற தீபம் விளங்குவதாகப் பாவித்துப் பார்த்து, அதில் பழகிப்பழகிக் கடவுளிடத்தே உண்மையாகிய அன்பையும், ஜீவர்களிடத்தே உண்மையாகிய காருண்யத்தையும் இடைவிடாமல் வைத்து, ஓங்கார பஞ்சாக்ஷர ஞாபகஞ் செய்தல் வேண்டும், சிவபஞ்சாக்ஷர ஞாபகஞ் செய்தல்வேண்டும்! அவசியம்" (திருவருட்பா உரைநடைப்பகுதி, ப-244)

கர்ம வினைகளைப் போக்கத்தியானம் செய்து ஆத்மஜோதியை வெளிக்கொணரும் தவத்தைச் செய்யவேண்டுகிறது சமணம். அத்தவத்தை எம்முறையில் செய்தால் புருவ மத்தியில் ஆத்மஜோதியைக் கொணர முடியும் என்றுவிளக்குகிறது திருஅருட்பா.

## வீடுபேறு அடையும் வழி :

*சமணம்* : வீடு பெற நற்காட்சி, நல்ஞானம், நல்ஒழுக்கம் என்ற மூன்றும் ஒருதலைப்பட்டு நிற்கவேண்டும் என்று சமணம் வற்புறுத்தும். காரணம் சம்சாரம் நிலையற்றதால் நிலைபேறுடைய வீட்டை விரும்பினர்.

*திருஅருட்பா* : அருட்பாவிலும் நிலையாமை உணர்வும், வீடுபேற்று எண்ணமும் விரவிக் கிடப்பதைக் காணலாம்.

"..... இப்பொய்யுடல் வீழ்ந்தால்
செய்கட்டி வாழ்கின்ற செருக்கற்று நரகில்
சிறுபுழு ஆகித் திகைத்திடல் அறியீர்" (உலகர்க்கு உய்வகை கூறல்)

இப்பாடல் மூலம் பொய்யுடல் வீழும் நிலையில்லாத வாழ்க்கையே சம்சார வாழ்க்கை என்பதை அருட்பாவும் நினைவுபடுத்துகிறது. கூடுவிட்டுப் போயின் பின்னர் எதுபுரிவீர் எங்கே குடியிருப்பீர் என்ற வினாக்களையும் தொடுக்கின்றது அருட்பா.

இனி, வீடுபேறு அடையும் வழியினை விரிவாகக் காணலாம்

**நற்காட்சி :**

*சமணம் :* நற்காட்சி என்பது, "எது எது நல்லது என்பதை முதலில் அறிவதே" (பகவான் மகாவீரர்) ஆகும். மகாவீரர் வாழ்க்கை வரலாறு என்னும் நூல் அதனை விளக்கமாக எடுத்துரைக்கிறது. அந்நூல் நல்லவை பற்றிக் குறிப்பிடும் போதே நல்லன அல்லாதவற்றையும் கூறி விளக்குகிறது.

"நற்காட்சி என்பது குதர்க்கவாதம் செய்யாமலும், அசம்பாவிதமான சந்தேகங்களுக்கு இடம்கொடாமலும், தேவமூடம், உலகமூடம், பாசண்டிமூடம் எனும் மூன்று மூடநம்பிக்கைகளும் இடம்கொடாமலும் இருப்பதே ஆகும்.

1. **தேவமூடம் :** தெய்வம் நம்மை வாழ்விக்கும் அல்லது வீழ்த்திவிடும் என ஆர்வமுற்றும் அச்சமுற்றும் வாழ்வது.
2. **உலகமூடம் :** கங்கை காவேரி போன்ற நதிகளில் நீராடினால் பாவம் அகன்றுவிடும் என்று நம்புவது.
3. **பாசண்டிமூடம் :** போலித் துறவிகளையும் அவர்களின் போதனைகளையும் நம்புவது மதிப்பது (பகவான் மகாவீரர் வாழ்க்கை வரலாறு - அ.லெ.நடராஜன்)

எனவே, எவற்றை ஏற்கவேண்டும், எவற்றை விலக்கவேண்டும் என்பவைகளை எடுத்துரைப்பதாக நற்காட்சி அமைகின்றது.

*திருஅருட்பா :* உபதேசக் குறிப்புகளில் காட்சி பற்றிய குறிப்பு இடம் பெற்றுள்ளது. வகைப்படுத்தியும் கூறப்பட்டுள்ளது.

"பூர்வம் - புறப்புறம், இந்திரியக் காட்சி.

பூர்வ பூர்வம் - புறம், கரணக்காட்சி.

உத்தரம் - அகப்புறம், ஜீவக்காட்சி.

உத்தரோத்த- அகம், ஆன்மக்காடசி" (திருவருட்பா. உ.நப)

என்பனவற்றில் குறிப்பிடப்பட்டுள்ள இந்திரியம், கரணம், ஜீவன், ஆன்மா என்பன மிக முக்கிய பொருண்மையுடையன. அவற்றின் காட்சிகளை இவ்விடத்து விளக்கி உரைக்காவிடினும், அவற்றைப்புறக்கணித்த காட்சிகள் எவை உண்டு என்று சிந்திக்கவேண்டும். அவ்வாறாயின் அனைத்துக் காட்சிகளிலும் மேற்குறித்த நான்கு காட்சிகள் இடம்பெறுவதை உணர முடியும்.

சமணம் குறித்த மூவகை மூடங்களை அருட்பாஎவ்வாறு கொண்டுள்ளது என்பதை ஒரு பாடலின் மூலமாகவே தெளிவுறுத்திவிடலாம்.

1. *"சாதியிலே மதங்களிலே சமயநெறிகளிலே*
*சாத்திரச் சந்தடிகளிலே கோத்திரச் சண்டையிலே*
*ஆதியிலே அபிமானித் தலைகின்ற உலகீர்*
*அலைந்தலைந்து வீணேநீர் அழிதல் அழகலவே*
*நீதியிலே சன்மார்க்க நிலைதனிலே நிறுத்த*
*நிருத்தமிடும் தனித்தலைவர் ஒருத்தர் அவர்தாமே*
*வீதியிலே அருட்சோதி விளையாடல் புரிய*
*மேவுகின்ற தருணம் இது கூவுகின்றேன் உமையே"*
*(புனித குலம் பெறுமாறு புகலல்)*

என்ற பாடலின் முதல் நான்கு வரிகள் சமணத்தைப் போலவே உலக மூடத்தையும், பாசண்டி மூடத்தையும் விலக்கவேண்டி வற்புறுத்தும் வரிகள். ஆனால், இறுதி நான்கு வரிகள் சமணத்திலிருந்து மாறுபட உள்ளன. தெய்வம் நம்மை வாழ்விக்கும் அல்லது வீழ்த்திவிடும் என்ற ஆர்வமுற்றும் அச்சமுற்றும் வாழ்வதுமாகிய தேவமூடத்தை விலக்கவேண்டும் என்று சமணம் உரைக்கின்றது. தெய்வம் பற்றிய கருத்தில் வேறுபாடு உண்டு. சமணத்தில் கடவுள் என்று தனியான ஒருவரும் இல்லை. பிற்காலத்தில் கடவுள் கோட்பாட்டை ஏற்றுக்கொண்டாலும் ஓர் மௌன சாட்சியாகவே மதித்தனர். மகாவீரர் தனது அருளுரையில், "பகவான் உலகத்துப் பொருள்களைப் பார்க்கிறான், அறிகிறான் அவன் படைப்பதோ அழிப்பதோ இல்லை" (ஆகமஞான மலர்) எனக் குறிப்பிடுகிறார். இருபத்து நான்காம் தீர்த்தங்கரரான மகாவீரர் காலத்தில் கடவுள் கருத்தை மறுபரிசீலனை செய்ய நேர்ந்தது. இறைவன் இருப்பதாக ஏற்றுக்கொண்டாலும் செயற்பாடு இல்லை என்ற கருத்தில் படைப்பும் அழிப்பும் இல்லை என்றார் அவர். ஆனால் இராமலிங்கர் கடவுள் என்ற ஒருவரால்தான் உயிர்கள் உய்ய முடியும் என்று உணர்ந்தார். உலகிற்கும் உணர்த்தினார். அக் கடவுள் அருட்பெருஞ்சோதி ஆண்டவர் என இனங்காட்டினார். எனவே, உலகமூடம், பாசண்ட மூடம், என்பவற்றில் சமணமும் அருட்பாவும் ஒன்றுபட்டாலும் தேவமூடத்தில் வேறுபடுகின்றன.

**நல்ஞானம் :**

நற்காட்சியை அடுத்து இடம்பெறுவது நல்ஞானம். "எது எது நல்லது என்பதை முதலில் அறியவேண்டும். பிறகு இது தான் மிக நல்லது என்பதைத் தெளியவேண்டும்" (பகவான் மகாவீரர்) எனவே காட்சியின் விளைவு ஞானம் ஆகும். "நற்காட்சி

ஏற்பட்டதன் பின்னர், நல்ஞானத்தைப் பெற முயல வேண்டும். நற்காட்சியும் நல்ஞானமும் சொல்லும் பொருளும் போல, விளக்கும் ஒளியும் போல ஒன்றுடன் ஒன்று நெருங்கிய தொடர்பு கொண்டவை. நல்ஞானம் என்பது எதையும் சரியானபடி அறிந்துகொள்ள, தெரிந்துகொள்ள, புரிந்துகொள்ள உதவும் மிகையாகவோ குறைவாகவோ, தவறாகவோ எதையும் காட்டாது. எதையும் உள்ளது உள்ளபடி சரியாகக் காட்டும் பண்பு அதற்கு உண்டு. சந்தேகம், குழப்பம், தெளிவின்மை அதனால் நிவர்த்தியாக வேண்டும்" என்பர். நல்ஞானம் இன்னதெனவும், அதன் தன்மைகள் யாவையெனவும் அறிந்தபின் அது ஐந்து நிலைகளில் வளரும் என்று சமணம் குறிப்பிடுகிறது.

"அ. மதிஞானம் - புலன் அறிவு

ஆ. சுருதி ஞானம் - நூல் அறிவு

இ. அவதிக் ஞானம் - வெதுதூரத்தில் இருப்பவற்றை அறியும் ஆற்றல்.

ஈ. மனப்பரியை ஞானம் - பிறர் மனத்தில் இருப்பதை அறியும் ஆற்றல்

உ. கேவல ஞானம் - வாலறிவு, முழுதுணர் ஞானம்"

(பகவான் மகாவீரர் வாழ்க்கை வரலாறு - ப-141, 143)

தன்னையறிதல், பிறவற்றை அறிதல், பிரபஞ்சத்தை அறிதல் என்ற விரிவாக்க வளர்நிலைகள் நல்ஞானத்தில் காட்டப் பட்டுள்ளன.

**திருஅருட்பா :** இராமலிங்கர் புலனறிவு, நூலறிவு இரண்டையும் சேர்த்து ஒன்றாகவும், தூரத்தில் உள்ளனவற்றை அறியும் அறிவு, பிறர்மன அறிவு என்பனவற்றை ஒன்றாகவும், வாலறிவைத் தனிஅறிவாகவும் காட்டுகிறார். எனவே, திருஅருட்பா மூவகை ஞானத்தைக் குறிப்பிடுகிறது எனலாம். அவை "உபாய ஞானம், உண்மை ஞானம், அனுபவ ஞானம். நட்சத்திரப்பிரகாசம் போல் தோன்றிய ஜீவ அறிவே உபாய ஞானம் சந்திரப் பிரகாசம் போல் தோன்றி அறியும் ஆன்ம அறிவே உண்மை ஞானம். எல்லா வஸ்துக்களையும் தெரிந்து அனுபவிக்கச் செய்கின்ற சூரியப்பிரகாசம் போன்ற கடவுளறிவே அனுபவ ஞானம்" (உரைநடைப்பகுதி, ப-293) என்பார் இராமலிங்கர்.

**உபாய ஞானம் –** ஜீவ அறிவு, நட்சத்திரப் பிரகாசம் (குறைந்த ஒளிநிலை, இருள்நீங்காது)

**உண்மை ஞானம் –** ஆன்ம அறிவு, சந்திரப் பிரகாசம் (சிறிது இருள் நீக்கும், ஒளிநிலை)

*அனுபவ ஞானம் - கடவுளறிவு, சூரியப் பிரகாசம் (முற்றும் இருள் நீங்கிய நிலை)*

| வ.எண் | சமணம் | திருஅருட்பா |
|---|---|---|
| 1. | மதி ஞானம் (புலன்அறிவு) | உபாய ஞானம் (ஜீவஅறிவு) |
| 2. | சுருதிஞானம் (நூலறிவு) | (விண்மீன் ஒளி) |
| 3. | அவதிக்ஞானம் (தூரஅறிவு) | உண்மைஞானம் (ஆன்ம அறிவு) |
| 4. | மனப்பரியைஞானம் (பிறர்மனஅறிவு) | (நிலவொளி) |
| 5. | கேவல ஞானம் (வாலறிவு) | அனுபவ ஞானம் (கடவுளறிவு) (கதிரொளி) |

சமணம் ஐவகை ஞானங்களைக் குறிப்பிட்டுள்ளது. திருஅருட்பா மூன்று வகை ஞானங்களைக் குறிப்பிட்டுள்ளது. சமணத்தின் முதலிரு ஞானங்கள், அருட்பாவின் முதல் ஞானத்துடனும், மூன்றாம் நான்காம் ஞானங்கள் அருட்பாவின் இரண்டாவது ஞானத்துடனும், ஐந்தாவது ஞானம் அருட்பாவின் மூன்றாவது ஞானத்துடனும் பொருந்துவதாக உள்ளன.

சமணம் குறிப்பிடும் ஜீவ அறிவு, நூல் அறிவு என்பன அருட்பா குறிப்பிடுகின்ற நட்சத்திரப் பிரகாசம் போன்று தன்னைச் சுற்றி விளக்கம் பெறக்கூடிய ஜீவ அறிவே.

சமணம் குறிப்பிடுகின்ற வெகுதூரத்தில் இருப்பவற்றை அறியும் ஆற்றல், பிறர் மனத்தில் உள்ளவற்றை அறியும் ஆற்றல் என்பன அருட்பா கூறும் சந்திரப் பிரகாசம் போன்று மற்றவற்றையும் அறிகின்ற ஆன்ம அனுபவ அறிவே.

இறுதியாக, சமணம் குறிப்பிடுகின்ற முழுதுணர் அறிவாகிய வாலறிவு (வாலறிவன்-கடவுள்) அருட்பா காட்டும் சூரியப் பிரகாசம் போன்ற அனைத்தையும் விளக்கி நிற்கும் கடவுளறிவே.

**நல் ஒழுக்கம் :**

***சமணம் :*** "மனம் வாக்கு காயம் இந்த மூன்றையும் அதனதன் போக்குக்கு விட்டுவிடாமல், கட்டுப்படுத்தி நல்வழியில் செலுத்துவது, ஒழுகுவது நல்ஒழுக்கம் எனப்படும்" (பகவான் மகாவீரர் வாழ்க்கை வரலாறு - 143)

அவ்வொழுக்கத்தை இரு வகையாகப் பகுத்தும் காட்டுவார்.

"ஒன்று அக ஒழுக்கம் மற்றொன்று புற ஒழுக்கம். அகவொழுக்கம் மனதைப் பற்றியது. புறவொழுக்கம் உடலையும் பிற புறப் பொருள்களையும் பற்றியது. மனத்தில் மாசு இல்லாமல் இருத்தல் அகவொழுக்கம். பொய் பேசுதல் பிறர் பொருளை விரும்புதல், துன்பம் தருவனவற்றை எண்ணுதல் முதலியனவும், அழுக்காறு, அவா, வெகுளி, கடுஞ்சொல் முதலியனவும் மனதில் தோன்றும் மாசுகள் ஆகும்" (ஆகமஞான மலர், ப-11)

**திருஅருட்பா :** திருஅருட்பா காட்டும் ஒழுக்கம் நான்கு வகைப்படும்

1. இந்திரிய ஒழுக்கம்
2. கரண ஒழுக்கம்
3. ஜீவ ஒழுக்கம்
4. ஆன்ம ஒழுக்கம்

**1. இந்திரிய ஒழுக்கம் :** இந்திரிய ஒழுக்கம், கன்மேந்திரிய ஒழுக்கம், ஞானேந்திரிய ஒழுக்கமென இருவகைப்படும். அவையாவன: "கொடிய வார்த்தை முதலியவை யாடாமலும் செவிபுகாமலும் நிற்றல், நாத முதலிய ஸ்தோத்திரங்களை அதிசயிக்காமல் உற்றுக் கேட்டல், மற்றவைகளைக் கேளாதிருத்தல், அசுத்தங்களைத் தீண்டாதிருத்தல் கொடூரமானவற்றைக் கேளாதிருத்தல், பாராதிருத்தல், ருசியின் மேல் விருப்பமில்லாதிருத்தல், சுகந்தம் விருப்பமில்லாமல் அனுபவித்தல், இனிய வார்த்தையாடுதல், பொய் சொல்லாதிருத்தல், ஜீவர்களுக்கு இம்சை நேரிடுங்காலத்தில் அதை எந்தவிதத் தந்திரத்திலாவது தடை செய்தல், பெரியோர்கள் எழுந்தருளியிருக்கும் இடத்திற்குச் செல்லுதல், உயிர்களுக்கு உபகார நிமித்தம் சஞ்சரித்தல் உயிர்களுக்கு மனத்தாலும், வாக்காலும், சரீரத்தாலும், தனத்தாலும் தன் சக்தியின் அளவு மீறாமல் உபகரித்தல் மல ஜலாதிகளை அளவு மீறாமலும் குறையாமலும் சிரமமாய்க் கழியும்படி சரபேத அஸ்தவரிச தந்திரத்தாலும், ஔஷதிகளாலும், ஆகாரத்தாலும், பௌதிக பக்குவத்தாலும் செய்வித்தல் முதலியன இந்திர ஒழுக்கமாகும்.

**2. கரண ஒழுக்கம் :** கரண ஒழுக்கமாவது, உண்மையான கடவுள் ஒருவரே என்று சத்திய சங்கல்பம் கொள்ளல் சிற்சபையின் கண்மனஞ் செல்லுவது, தவிர, வேறு எந்தவகை ஆபாசத்திலும் செல்லாமல் அதை இழுத்து மேற்குறித்த இடத்தில் அதாவது, கடவுளிடத்தில் நிறுத்துவது, பிறர் குற்றம் விசாரியாது இருத்தல், தன்னை மதியாதிருத்தல், செயற்கைக் குணங்களாலுண்டாகிய கெடுதிகளை நீக்கி இயற்கையாகிய சத்துவமயமாக நிற்றல், பிறர் மேல் கோபியாதிருத்தல், அக்கிரம அதிக்கிரமப் புணர்ச்சி செய்யாதிருத்தல் முதலிய இவற்றையே கரண ஒழுக்கமென்பர்.

3. ஜீவ ஒழுக்கம் : ஜீவ ஒழுக்கம் எல்லா மனிதரிடத்தும் ஜாதி, சமயம், மதம், ஆசிரமம், கோத்திரம், சூத்திரம், குலம், சாத்திரம், தேசமார்க்கம், உயர்வு, தாழ்வு முதலியனவாகிய பேதம் அற்றுத்தானாக நிற்றலாம்.

4. ஆன்ம ஒழுக்கம் : எண்பத்து நான்கு லட்சம் யோனி பேதமுள்ள ஜீவர்களிடத்திலும் இரக்கம் வைத்து; ஆன்மாவே சபையாகவும் அதனுள்ளொளியே பதியாகவும் கண்டு பூரணமாக நிற்றல் ஆன்ம ஒழுக்கமாகும்" (உரைநடைப்பகுதி ப-310 & 311)

மேற்குறித்த ஒழுக்க வகைகள் மனிதனின் பொருளியல் அருளியல் வாழ்வுகளுக்கான ஒழுக்கங்களை முழுதும் வற்புறுத்துகின்றன.

சமணம் எளிய பகுப்புகளாக அக ஒழுக்கம், புற ஒழுக்கம் என்ற இரண்டினைக் குறிப்பிடுகின்றது. திருஅருட்பா இந்திரிய ஒழுக்கம், கரண ஒழுக்கம், ஜீவ ஒழுக்கம், ஆன்ம ஒழுக்கம் என்று நால்வகையாகக் காட்டுகிறது. அந்நால்வகை ஒழுக்கங்களிலுமே சமணம் குறிப்பிடும் அகப்புற ஒழுக்கங்களை இணைத்துக் கொள்ள முடியும்.

மனதில் மாசில்லாது இருத்தல் அகஒழுக்கம் எனச் சமணம் குறிப்பிடுகிறது. மனத்தில் தோன்றும் மாசுகளையும் அது இனங்காட்டுகிறது. பொய் பேசுதல், பிறர் பொருளை விரும்புதல், துன்பம் தருவனவற்றை எண்ணுதல் முதலியனவும், அழுக்காறு, அவா, வெகுளி, கடுஞ்சொல் முதலியனவும் மனதில் தோன்றும் மாசுகள் எனக் குறிப்பிடப்பட்டுள்ளன. சமணம் வலியுறுத்திய வற்றையே பொய் சொல்லாதிருத்தல், உயிர்களுக்கு உபகார நிமித்தம் சஞ்சரித்தல் என்று இந்திரிய ஒழுக்கத்திலும், பிறர் குற்றம் விசாரியாது இருத்தல், பிறர்மேல் கோபியாதிருத்தல் என்று கரண ஒழுக்கத்திலும் குறிப்பிடுகிறது.

அழுக்காறு, அவா, வெகுளி, கடுஞ்சொல் என்பனவற்றை அருட்பா விளக்கிஉரைக்கிறது. 'கோபம்' எனத் தனியாக விளக்குமிடத்து "சினம் வெகுளியென்பவற்றின் பொருள், சினம், உள்வேக்காடு, புடநியாயம் போல், இது தேகத்தைச் சீக்கிரம் நாசஞ்செய்யும். வெகுளி, மீசை துடித்தல், கண்சிவத்தல், கைகால் உடம்பு துடித்தல் முதலாகியவற்றை வெளிப்படையாகக் காட்டுதல். இதுவும் ஆயுளை நஷ்டம் செய்யும். ஆகையால் எந்த வகையிலும் கோபங் கூடாது. அதை அவசியம் ஒழிக்க வேண்டியது" (உரைநடை- ப-272) என்பார் இராமலிங்கர்.

கோபத்தின் தன்மைகளையும், கோபங் கொண்டார் அடையும்

மாற்றங்களையும், கோபத்தால் ஏற்படும் எதிர்விளைவுகளையும் எடுத்துக் கூறி அதை அறவே ஒழிக்கவேண்டும் என வற்புறுத்தியுள்ளது. அழுக்காறு, அவா, கடுஞ்சொல் எனத் தனித்தனியாக சமணம் குறிப்பிட்டவைகளை திருஅருட்பா மொத்தமாகக் குறிக்கிறது. "காமக் குரோதாதிகள் முதலிய பெருங்குறைகளை அவசியம் நீக்கவேண்டியது" (உரைநடை ப-272) என்பார் இராமலிங்கர்.

அவா என்பதையும், அழுக்காறின் அடிநிலையாகத் தோன்றும் வெறுப்பையும் இணைத்துப் பேசுகிறது திருஅருட்பா, "விருப்பு வெறுப்பு என்பதற்குப் பொருள்! விருப்பென்பது வேண்டுதல், பந்தம். பூர்வ பாவனையை விட்டு அதிசயமாகப் பார்த்து விரும்புதலால் பூர்வ பாவனை தடைப்பட்டுதான் கெடுவன். ஆதலால் விருப்பென்பது எள்ளளவும் கூடாது, வெறுப்பென்பது வேண்டாமை, துவேசம், எதிர்கண்ட வஸ்துவைப் பற்றாதிருத்தல். இதர வஸ்துவைக் கெடுதலென்று நினைப்பதால் வெறுப் பென்பதும் கூடாது. விருப்பு வெறுப்பு அற்று அருள் வடிவாவதே சுத்த சன்மார்க்கம்" என்று திருஅருட்பா விளக்கும்.

விருப்பு வெறுப்பு என்பதன் விளக்கங்களையும், அதன் தன்மைகளையும், அதனால் ஏற்படும் விளைவுகளையும் காட்டியுள்ளது அருட்பா. அவற்றை விடுத்தால் அருள் வடிவம் எய்தலாம் என்று பயனையும் எடுத்துக்கூறியுள்ளது.

திருஅருட்பா தனித்தனியாக விளக்கியவற்றை சமணம் மொத்தமாக்கி மூவகைப் பகுப்புக்குள் அடக்கிவிட்டது. "ஒரு ஆன்மா வீடுபேற்றை அடைவதற்கு ஜைன சம்பிரதாயப்படி மூன்று பண்புகள் அவசியம் ஆகும். அதனையே ஜைன சமயத்தில நற்காட்சி, நல்ஞானம், நல்ஒழுக்கம் என்று சொல்வார்கள். அறநெறி ஒழுக்கத்துக்கு இந்த மூன்றும் மிகமிக அவசியமாகையால், இவற்றை மும்மணிகள் என்றும் ஜைன சமயத்தினர் கூறுவர்" (பகவான் மகாவீரர் ப-32)

மனித சமுதாயம் மேம்பாடு அடையவேண்டும் என்ற நோக்கத்துடன உரைக்கப்பட்ட மும்மணிகள் சமணத்தில மட்டுமின்றி அருட்பாவிலும் இடம்பெறக் காணலாம்.

## பெண்மையின் நிலைப்பாடு :

மனித சமுதாயம் மேம்பாடடைய வலியுறுத்திய சமயங்கள் பெண்மைக்கு அளித்த நிலைப்பாடு என்பது விவாதத்திற் குரியதாகவே உள்ளது. மானுடத்தின் சரிபாதியாகச் சொல்லப் படுகின்ற பெண்மைச் சக்தி ஆன்மீக உலகில் சிலபோது

தாழ்த்தப்படுகிறது. உமையொரு பாகன் என்று பாதியாக ஒரு சமயம் ஏற்றுக்கொண்டாலும், வேறொரு சமயம் மறுபிறப்பில் ஆணாகப் பிறந்தால் தான் வீடுபேறு எனச் சொல்லி விலக்கி வைக்கிறது. அத்தகு பிரச்சனைகள் காலந்தோறும் விவாதித்து விமர்சிக்கப்பட்டு வருபவை. எனவே கடும் விமர்சனங்களுக்கும் தாக்குதல்களுக்கும் உட்பட்ட பெண்மையின் நிலைப்பாடு குறித்து சமணமும், அருட்பாவும் கொண்டுள்ள கருத்துக்களை இங்குக் காண்போம்.

**சமணம் :** சமய வாழ்வில் பெண்மைக்கு இடம் தர மறுக்கிறது சமணம். பெண்மை குறித்து தனியாகக் குறிப்பிட்டு எதனையும் கடமையாகவோ, கோட்பாடாகவோ, பின்பற்றும் வழிமுறைகளாகவே குறிப்பிடவில்லை. பெண்மை குறித்த கண்ணோட்டமே அதற்கு இல்லை என்றுதான் கூறவேண்டும். பெண்ணாகப் பிறந்தவர் அனைவரும் மறுபிறவியில் அல்லது அடுத்து வரும் பிறவிகளில் ஆணாகப் பிறந்து, அதன் பின்னரே சமய வாழ்க்கை குறித்தும், வீடுபேறு குறித்தும் சிந்திக்க வேண்டும் என்ற கருத்தை வன்மையாகக் கொண்டுள்ளது சமண சமயம். அக்கருத்தே பிற சமயத்தாராலும் சமுதாயத்தாராலும் ஏற்றுக் கொள்ள இயலாது பெரிதும் விமர்சிக்கப்பட்டது.

**திருஅருட்பா :** திருஅருட்பாவில் அத்தகு பெண் புறக்கணிப்புப் போக்குடைய கருத்துக்கள் அதிகமாகக் காண இயலவில்லை. முதல் ஐந்து திருமுறைகளில் பெண்ணாசை குறித்து கடுமையாக விமர்சனம் செய்கிறது அருட்பா. பெண்களைக் காம வாழ்வின் வடிவமாகக் காட்டிச் சாடியிருக்கின்றது. சில சான்றுகளை இவண் காணலாம்.

1. பெண்கள் பால் "மனம் சென்றே விழுகின்ற தென்னை"
(நெஞ்சு நிலைக்கிரங்கல்)
2. "பெண் பேய்கள்"
3. "வஞ்ச மாதர் மயக்கம்" (உய்கைத் திருப்பதிகம்)

என்றவாறு காட்டப்பட்ட இடங்கள் நான்கு திருமுறை வரையுள்ள பாடல்களில் தான் காணமுடிகின்றன. ஐந்தாம் திருமுறையில் அத்தகு சாடல் போக்கு மாறுகின்றது.

பெண்மையைத் தனியாகக் குறிப்பிட்டுச் சொல்லாமல் ஒட்டு மொத்தமாக.

"மோகாந்த காரம் அறுத்தவர்ஒத்தப் பொதுவில்
முயங்கி நடம்புரிகின்ற முக்கணுடை அரசே" (அருட்பிரகாச மாலை)

எனவரும். இங்கு மோகாந்தகாரம் அறுத்தவர் இறைவனை அடையலாம் என்று அறிவுறுத்தும் போக்கு மட்டுமே இடம்பெறுவதை உணரலாம்.

ஆறாந் திருமுறையில் இராமலிங்கர் தன்னையே பெண்ணாக மாற்றிக் கொள்ளும் அடிக்கருத்திலும் முரண்நிலை காணப்படுகிறது. முதல் நான்கு திருமுறைகளில் பெண்மையைச் சாடியவர், ஐந்தாம் திருமுறையில் மோகாந்த காரம் என ஒரு சொல்லால் சுருக்கியுரைத்தார். ஆறாந்திருமுறையில் தன்னையே பெண்ணாக மாற்றிக் கொண்டார். அதனால் இறையை நாயகனாகவும், தன்னை நாயகியாகவும் கொண்டு பாடப்பட்ட பாடல்களே அதிகமாக இடம்பெற்றுள்ளன.

இராமலிங்கரின் அருள் அனுபவங்களைத் தெளிவாக விளக்கியும், இறுதி வடிவம் தந்து விளக்கமாக நிற்பதுமான அனுபவ மாலை எனும் பகுதி அதனை வலியுறுத்துகின்றது.

"தெருட்சார்பில் இருந்தோங்கு சமரச சன்மார்க்கத்
திருச்சபைக்கண் உற்றேன் என்திருக் கணவருடனே"

(அனுபவமாலை)

என்று இறைவனுடன் இணைந்து இருந்த நிலையைக் குறிப்பிடுகிறார் இராமலிங்கர்.

தன்னை நாயகியாகவும், இறையை நாயகனாகவும்கொண்ட நாயகி நாயக பாவனையால் சன்மார்க்கத்தில் பெண்களுக்கும் இடம் அளித்துள்ளாரோ என எண்ண வைக்கிறது. தமது உபதேசக் குறிப்புகள் என்ற பகுதியில் மகளிர் சமத்துவ நிலை எனக் குறிப்பிட்டு பின்வருமாறு கருத்துரைக்கிறார். "பெண்களுக்கு யோகம் முதலிய சாதனங்கள் அவசியம் கற்பிக்கவேண்டியது. மேலும் பேதமற்று அபதேமாய்ப் படிப்பு முதலியவையும் சொல்லிகொடுக்க வேண்டியது. தத்துவம் முதலியவற்றின் சொரூபரூபாதி களைத் தெரிவித்துச் சரளமாக்கினால், பின் தடையின்றி நம்முடைய துரிய ஆசிரம காலத்தில் ஒத்திருப்பார்கள். 'தெய்வந் தொழாஅள்' என்னும் தேவர் குறளால் இதை அறிக" (உரைநடை - 322) என்பார்.

மேற்குறித்த உரையில் பெண்களுக்குக் கற்றுத்தர வேண்டியவை எவை, ஏன் கற்றுத் தரவேண்டும் என்பது பற்றிய சிந்தனை ஓட்டத்தைக் காண முடிகிறது.

முற்பகுதியில், பெண்களுக்கு யோகம் கற்றுத்தரப்பட வேண்டும். அறியாமை நீங்கக் கற்பிக்கவேண்டும் என்று வலி யுறுத்தினார். பெண்களைக் கல்வியறிவற்றவராக்கி அடைத்து வைத்த சமூகத்தில் இதுவோர் புரட்சிக் கருத்து. பெண்கள் கல்வி

பெறவேண்டும் என வலியுறுத்திய வாசகங்கள் வலிமை வாய்ந்தவை. 'தத்துவம் முதலியவற்றின் சொரூப ரூபாதிகளைத் தெரிவித்துச் சரளாமாக்கினால், பின் தடையின்றி நம்முடைய துரிய ஆசிரம காலத்தில் ஒத்திருப்பார்கள்' என்பதில் சமநிலை என்ற கருத்து தொனிக்கும். ஆனால் ஒத்துழைப்பு என்ற கருத்தே மிகுந்து நிற்கிறது. "நம்முடைய" எனக் குறிப்பது, ஆண்களுடைய சமய வாழ்வுக்கு உறுதுணையாவர் என்பதாகவே கூறப்பட்டுள்ளது.

பெண்ணிற்கு சமய தத்துவங்களை அறிவிக்கச் சொல்வது எதன்பொருட்டு எனில், ஆண்களுக்குச் சமய வாழ்வில் ஊறு செய்யாது உதவுவதற்காக மாத்திரமே.

பெண்களுக்குச் சமய வாழ்வில் இடமும், வீடு பேறும் இல்லை எனச் சமணம் வெளிப்படையாகக் குறிப்பிட்டது போல திருஅருட்பா கூறவில்லை. சமயக் கல்வியை மிகவும் வற்புறுத்திற்று. ஆயினும், வாழ்க்கைத்துணை, தவ வாழ்விலும் துணையாக இருக்க வேண்டும் என்னும் கருத்தோடு கூறுகிறது. 'தெய்வந்தொழாஅள் என்னும் தேவர் குறளால் இதை அறிக' என இராமலிங்கர் குறிப்பிட்டது பின்வரும் மனுதர்மசாஸ்திரத்தின் கூற்றை அடியொற்றி அமைந்ததாகவே உள்ளது.

"ஒரு உண்மையான மனைவியானவள் தன் கணவனை கடவுளாகவே எண்ணிவழிபடவேண்டும், அதுவே அவளது நற்பண்புகளின் இலக்கணமாகும். அவள் தேடும் ஆத்ம சாந்தியும் அவ்வாறு நடந்து கொள்வதில்தான் உள்ளது" (The Sacred Books of the East, Vol - XXV, P-196)

மேற்குறித்தக் கருத்துப் பரிமாற்றங்கள் போன்று, மரபுவழியாக உள்ள பெண்மைச் சிந்தனையேயன்றி அருட்பா தனக்கெனத் தனியானதொரு பெண்கள் முன்னேற்றச் சிந்தனைகளைக் கொண்டிருக்கவில்லை என்றே கூற முடிகிறது.

## தோற்றுவித்தோரும், வழிந்தோரும் :

சமண சமயத்தைத் தோற்றுவித்தவர், ஆதிரிஷபதேவர், இவர் ஜினர் என்றும் அழைக்கப்படுகிறார். சமரச சுத்த சன்மார்க்க சங்கத்தைத் தோற்றுவித்தவர் இராமலிங்க அடிகள். சமண சமயத்தைப் பின்பற்றுவோர் சமணர் அல்லது ஜைனர் என்று அழைக்கப்படுகின்றனர். சன்மார்க்கத்தைப் பின்பற்றுபவர்களை சுத்த சன்மார்க்கிகள் என்று அழைக்கின்றனர்.

சமய வாழ்க்கைக்காக துறவு பூண்டு தன் வாழ்நாள் முழுவதையும் சமய வளர்ச்சிக்கு அர்ப்பணித்துக் கொண்டவர்

களை சமணசமயம் தீர்த்தங்கரர் எனக் குறிப்பிடுகிறது. சன்மார்க்கம் சாது என்று அழைக்கின்றது.

சமணம் :

சமணம் என்பது ஆதி ரிஷபரால் தோற்றுவிக்கப்பட்டாலும் கூட அதில் தீர்த்தங்கரர்கள் முக்கிய இடம் பெறுகின்றனர். கிறித்தவத்தில் இயேசுவின் பன்னிரு சீடர்கள், சைவத்தில் அறுபத்துமூன்று நாயன்மார்கள், வைணவத்தில் பன்னிரு ஆழ்வார்கள் போல சமணத்திலும் தீர்த்தங்கரர்கள் குறிப்பிட்டுச் சொல்லப்படுகின்றனர். "சமண சமயம் வளர்ச்சியும் ஆளுமையும் அடைந்தது தீர்த்தங்கரர்களின் முக்கிய பங்கினால்தான். அவர்கள் இந்திய சமயச் சிந்தனை ஓட்டத்தில் தனக்கெனத் தனி முத்திரை பெறக்கூடிய பங்களிப்பினைச் செய்துள்ளனர். அவர்களது அகிம்சைக் கொள்கை முக்கியத்துவம் வாய்ந்தது" (Gommateswara Commemoration) என்றதனால் அக்கருத்து வலுவாகிறது. அத்தகு சிறப்புடைய தீர்த்தங்காரர்கள் தொடர்ந்த வருகையுடைய ஒரு குழுவாகக் கணக்கிடப் பட்டுள்ளனர். அவர்களின் மொத்த எண்ணிக்கை இருபத்துநான்கு என கூறப்படுகின்றது. அவர்களது பெயர்களை உள்ளடக்கிய, (பின்னிணைப்பு — . காண்க) வழக்கில் உள்ளதுமான சித்தரகவி சிறப்புடையது.

திருஅருட்பா :

இராமலிங்கர் தான் கண்ட சன்மார்க்கத்தினை திருஅருட்பாவின் உரைநடைப்பகுதியில் குறிப்பிடுகிறார். சுத்த சன்மார்க்கிகளின் தன்மை குறித்துவிளக்குமிடத்து "சுத்த சன்மார்க்கத்துக்கு முக்கிய தடைகளாகிய சமயம் மதம் முதலிய மார்க்கங்களை முற்றும் பற்றறக் கைவிட்டவர்களும், காமக்குரோதம் முதலியவைகள் நேரிட்ட காலத்தில் ஞான அறிவினால் தடுத்துக் கொள்பவரும், கொலைபுலை தவிர்த்தவர்களும் ஆகிய இவர்கள் தான் சுத்த சன்மார்க்கத்துக்கு உரியவர்கள் ஆவார்கள். மரணம், பிணி, மூப்பு, பயம், துன்பம், இவை முதலியவைகளைத் தவிர்த்துக் கொள்வார்கள். அதாவது செயற்கையாகிய குணங்களைத் தவிர்த்துக் கொள்வார்கள். அதாவது செயற்கையாகிய குணங்களை நன்முயற்சியால் தடுத்துக் கொள்பவர்களுக்குக் கேவலாதிகார மரணம் நீங்கும்" (உரைநடை -304) என்று குறிப்பிடுகிறார். அத்தகைய பக்குவ நிலைக்கான பயிற்சி உடையவர்கள் அணியவேண்டிய ஆடையின் நிறத்தையும் வரையறை செய்கிறார். "தத்துவத்தைச் செயித்து தயவை நடத்துவதற்கு யுத்தக்குறி அல்லது அடையாளமாகத் தரிப்பது காவி, வெற்றியான பிறகு அடைவது தயவு. ஆதலால் வெற்றிக்கொடி

வெள்ளை. தயவு வெள்ளையென்பதற்கு நியாயம். தயவென்பது சத்துவம், சத்துவமென்பது சுத்தம், சுத்தமென்பது நிர்மலம், நிர்மலமென்பது வெள்ளை வருணம், வெள்ளை என்பது ஞானம், ஞானமென்பது அருள், அருளென்பது தயவு, தயவென்பது காருண்யம்" என்ற விளக்கத்தால் ஈர்க்கப்பட்ட சன்மார்க்கிகள் வெள்ளை உடையையே அணிகின்றனர். பணியின் நிமித்தம் வேறு நிற உடைகள் அணிந்தாலும், சன்மார்க்க சங்கக் கூட்டங்களுக்கு வருகின்ற போதும், சன்மார்க்கப் பணி மேற்கொள்ளும் போதும் வெள்ளையாடையே அணிகின்றனர். (பின்னிணைப்பு:படம் காண்க).

சமண சமயத்தில் தொடர்ந்த பாரம்பரியத்தை உடைய தீர்த்தங்கரர் போல சன்மார்க்கத்தில் இல்லை. தற்போது சன்மார்க்கத் துறவிகளை ஒருமுறைப்படுத்தி அழைக்கும் பழக்கம் வழக்கத்திற்கு வந்துள்ளது. அதனைத் துவக்கி வைத்தவர் இன்னாரெனத் தெரியவில்லை. ஆனால், நடைமுறைப்படுத்தியவர் சமரச சன்மார்க்க ஆராய்ச்சி நிலையத்தின் நிர்வாகியாக உள்ள ஊரனடிகளாவார். "அடிகளாருக்கு இப்போது பெயர் சாது கருணைப் பிரகாசர். அடிகளாருக்குப் பின் அவரது பதவிக்கு வருவோர்க்கும் இதே பெயர் வழங்கும். சன்மார்க்க சங்கத்துச் சாதுக்கள்" என்று பெருமான் ஓரிடத்திற் குறிப்பிடுவதைக் கருதி, முத்தையாவையும் சண்முகனாரையும் சாது என்று வழங்கத்தொடங்கினார் அடிகள். அவர்கள் சாது முத்தையாவாகவும் சாது சண்முகனாராகவும் ஆயினர். சன்மார்க்கத்தில் துறவிகளைச் சாது என்று வழங்குவது இவ்வாறு நிலைத்து விட்டது" (நான் கண்ட வடலூர், ப-22) என்றதனால் சன்மார்க்கத் துறவிகள் சாதுக்கள் எனப்பட்டதை அறியமுடிகிறது.

சமண சமயத் துறவிகள் தீர்த்தங்கரர்கள் என்று அழைக்கப்பட்டனர். சன்மார்க்கத் துறவிகள், சாதுக்கள் என்றழைக்கப்பட்டனர். இரு சாராருக்குமே அடிப்படைக் குணங்களாக அமைந்தவை அன்பு, அருள், தயை, கருணை, அகிம்சை என்பன.

## மகாவீரரும் இராமலிங்கரும் :

சமண சமயத் தீர்த்தங்கரர்களுள் குறிப்பிட்ட இடத்தைப் பெற்றவர் மகாவீரர். இவர் காலத்தில்தான் சமணம் புத்துயிரும் புதுவாழ்வும் பெற்று உலகெங்கிலும் பரவிற்று. "சமண சமயத்தைத் தோற்றுவித்தவர், சமண சமயத்தைச் சார்ந்த 24 தீர்த்தங்கரரில் முதல்வரான பகவான் ரிஷபதேவர். இதனை வளரச் செய்தவர் இருபத்துநான்காம் தீர்த்தங்கரரான பகவான் மகாவீரர்" (Lord

Mahaveera's Souvenir, Feb-1975. P-5) அத்தகு சிறப்புடைய மகாவீரரையும், திருஅருட்பா பாடிய இராமலிங்கரையும் ஒப்பிட்டு ஊரனடிகள் பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

"ஜைன சமயத்தின் உயிர் ஜீவகாருண்யம் - அகிம்சை. வள்ளலார் கண்ட சமரச சன்மார்க்கத்தின் உயிரும் ஜீவகாருண்யமே. 'இரக்கமே என் உயிர், ஜீவகாருண்ய ஒழுக்கமே கடவுள் வழிபாடு' என்பன வள்ளலார் வாக்கு. சிற்றுயிர்க்கும் தீங்கு செய்யலாகாது என்பது மகாவீரர் கொள்கை. வள்ளலாரின் சமரச சன்மார்க்கக் கொள்கையும் அதுவே." (சன்மார்க்க விவேகவிருத்தி 1-5-91 இதழ் ப-56) என்ற கருத்து அறிமுக நிலையில் அமைந்த ஒப்பீடாகும். இனி மகாவீரர் கருத்துக்களையும், இராமலிங்கர் கருத்துக்களையும் விளக்கமாக ஒப்பிடலாம்.

| மகாவீரர் | இராமலிங்கர் |
|---|---|
| 1. உயிர்களுக்கு இடையே வேற்றுமை இல்லை | "எத்துணையும் பேதமுறாது எவ்வுயிரும் தம்முயிர் போலெண்ணி" (தனித்திரு அலங்கல்) |
| 2. தனியான கடவுள் என்று ஒருவரும் இல்லை. எந்த உயிர் ஆன்ம சாதனை செய்து தன் தூய ஆன்ம நிலையை அடைகிறதோ, அதுவே கடவுள் தன்மை அடைகின்றது. | "அருட்பெருஞ்ஜோதித் தனித் தலைமைக் கடவுளே (உரைநடை - 448) |
| 3. பகவான் உலகத்துப் பொருட்களை பார்க்கிறான், அறிகிறான் அவன் படைப்பதோ, அழிப்பதோ இல்லை. | "உலகுயிர்த் திரளெலாம் ஒளி நெறி பெற்றிட இலகும் ஐந்தொழிலையும் யான்செயத் தந்தனை போற்றினின் பேரருள் போற்றிநின் பெருஞ்சீர் ஆற்றலின் ஓங்கிய அருட்பெருஞ் ஜோதி" (அகவல்) |
| 4. எந்த உயிரையும் புண் படுத்தும் எண்ணங்கள் கொள்ளக்கூடாது. | "உயிர்க்கொலை செய்தோர்க்கு உபகாரஞ் செய்தேனோ" (உரைநடை - ப-26) |

| | |
|---|---|
| 5. பொய் பேசுவதும், பொய் பேச நினைப்பதும் பாவமே | "பொய்யாத வாய்மைகளே புகன்றிடுதல் வேண்டும்" (சுத்த சன்மார்க்க வேண்டுகோள்) |
| 6. திருடுவதும் திருட நினைப்பதும் பாபமே. | "களவு செய்வோருக்கு உளவு சொன்னேனோ கள்ளக் கருத்தொழில்" (பொன்வடிவப் பேறு) |
| 7. புலனடக்கத்துடன் இரு. வெகுளி முதலானவை கொள்ளாதே | "கோபம் ஆகா" (உரைநடை ப-26) |
| 8. மாயை செய்வது பாபம் | "திரைகண்ட மாயைக் கடல் கடந்தேன் "மனக்கேத மாற்றி வெம்மாயை நீக்கி மலிந்த வினை தனக்கே விடை கொடுத்தாணவம் தீர்த்தருள் (பேரருள் வாய்மையை வியத்தல் 3865) |
| 9 நம்முடைய துன்பத்திற்குக் காரணம் முந்தைய தவறுகளே தவற்றைத் திருத்திக் கொண்டால் இன்பம் அடையலாம். | "முன்பாடு பின்பயன் தந்திடும் எனவே உரைக்கின்றோர் மொழிகள் எல்லாம் இன்பாடும் இவ்வுலகில் என்னறிவில் இலை அதனால் எல்லாம் வல்லோய்... அருட்சோதி அளித்துக் காத்தல் உன்பாடு." (தனித்திரு அலங்கல்) |
| 10. மூட நம்பிக்கை அறிவுக்கு ஒரு பூட்டுக்கட்டை | "கலையுரைத்த கற்பனையே நிலையெனக் கொண்டாடும் கண்மூடி வழக்கமெல்லாம் மண்மூடிப் போக" (திருக்கதவம் திறத்தல்) |

மேற்குறித்த அட்டவணையில் இருந்து நாம் அறியலாகும் செய்திகள்.

1 உயிர் பற்றிய செய்தி
2. கடவுள் குறித்த கருத்து
3 உலகியல் பற்றிய கருத்து
4. ஒழுக்கநெறி குறித்த அறிவுரை
5 தவம் பற்றிய செய்தி
6. முக்தியடையும் நெறிகள்
7 சிறந்த இலட்சியம்.

இவையனைத்தும் குறித்த கருத்துகள் மகாவீரர், இராமலிங்கர் ஆகிய இருவருக்கும் உள்ள சிந்தனைகளின் வீச்சுகள். அவை உலகியலுக்கு வழிகாட்டியாக விளங்கும் தகுதியுடையன.

### உயிர் பற்றிய செய்தி :

உயிர்களுக்கு இடையே வேற்றுமையில்லை என்கிறார் மகாவீரர். எவ்வுயிரையும் தம்முயிர் போல எண்ணிச் சிறிதளவும் பேதமில்லாது வாழ வேண்டும் என்கிறார் இராமலிங்கர். உயிர்களுக்கிடையே வேற்றுமை பாராது தம்முயிர் போல எண்ணுமாறு மகாவீரரும் இராமலிங்கரும் ஒத்த கருத்துரைக்கின்றனர்.

### கடவுள் குறித்த கருத்து

தனியான கடவுள் என்று ஒருவரும் இல்லை. எந்த உயிர் ஆன்ம சாதனை செய்து தன் தூய ஆன்ம நிலையை அடைகிறதோ அதுவே கடவுள் தன்மை அடைகிறது என்கிறார் மகாவீரர். அருட்பெருஞ்சோதி வடிவில் இறைவன் உள்ளான். அவனே தனித்தன்மைக் கடவுள் என்கிறார் இராமலிங்கர்.

மகாவீரர் கடவுளை ஏற்கவில்லை. எல்லா உயிர்களும் கடவுள் தன்மை பெறலாம் என்கிறார். இராமலிங்கர் தனித் தலைமைக் கடவுள் உண்டு. அவன் அருள்மயமான ஜோதி வடிவினன் என்கிறார். கடவுட் கருத்தில் இருவரும் வேறுபட்டுக் கருத்துரைக்கின்றனர்.

### உலகியல் பற்றிய கருத்து

இறை சக்திக்கும் உலகியலுக்கும் உள்ள தொடர்பை இருவரும் எடுத்துரைக்கின்றனர். முதலில் கடவுள் என்று ஒருவரும் இல்லையென உரைத்த மகாவீரர் பின்னர், அவன் படைப்பதோ அழிப்பதோ இல்லை பார்க்கிறான், அறிகிறான் அவ்வளவு மட்டுமே என்கிறார். இராமலிங்கர் கடவுள் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐந்தொழில்களையும் செய்கிறான் என்கிறார்.

கடவுள் உலகியலோடு செயலாற்றவில்லை என்கிறார் மகாவீரர். ஐந்தொழிலையும் உலகில் செயற்படுத்துகிறான் என்கிறார் இராமலிங்கர்.

### ஒழுக்கநெறி குறித்த அறிவுரை :

எந்த உயிரையும் புண்படுத்தும் எண்ணங் கொள்ளக் கூடாது.

பொய் பேசுவதும். பொய்பேச நினைப்பதும் பாபமே. திருடுவதும் திருட நினைப்பதும் பாபமே. வெகுளி முதலானவை கொள்ளாதே என்று மகாவீரர் ஒழுக்கநெறி செல்லுமாறு அறிவுரை கூறுகிறார்.

இராமலிங்கரும் அதே கருத்துக்களை எடுத்துரைக்கிறார். உயிர்க் கொலை செய்யாதே, உயிர்க்கொலை செய்பவர்க்கு உபகாரஞ் செய்யாதே, பொய்யாத வாய்மைகளே புகன்றிடுதல் வேண்டும். கள்ளக்கருத்தொழிதல், களவு செய்வோருக்கு உளவு சொல்லாதே, கோபம் ஆகா என்பன இராமலிங்கர் கூறும் அறிவுரைகள்.

தீய செயல்களைச் செய்யாதே என்று மகாவீரர் அறிவுறுத்துகிறார். அதனோடமையாது அப்படிப்பட்ட எண்ணங்களைக் கருத்தை விட்டு விலக்க வேண்டும் என்றும், அக்கருத்துடையார்க்கு உதவியும் செய்தல் கூடாதென்றும் குறிப்பிடுகிறார் இராமலிங்கர்.

## தவம் பற்றிய செய்தி :

தவத்திற்கு அடிப்படையான புலனடக்கம் குறித்து இருவருமே ஒத்த கருத்துரைக்கின்றனர். புலனடக்கத்துடன் இரு என்கிறார் மகாவீரர் தனித்திரு, பசித்திரு, விழித்திரு என்கிறார் இராமலிங்கர்.

## முக்திடையும் நெறிகள் :

நம்முடைய துன்பத்திற்குக் காரணம் முந்தைய தவறுகளே. அவற்றைத் திருத்திக் கொண்டால் இன்பம் அடையலாம். மூடநம்பிக்கை அறிவுக்கு ஒரு முட்டுக்கட்டை என்கிறார் மகாவீரர். இராமலிங்கரோ, முன்பாடு பின் பயன் தந்திடும் என உரைக்கும் வார்த்தைகள் என்னறிவில் இல்லை. இறைவனே நீதான் அருட்சோதி அளித்துக் காக்கவேண்டும் என்கிறார்.

இன்பமும் துன்பமும் அவரவர் கையில் உள்ளது என்ற கருத்துப்பட உரைக்கிறார் மகாவீரர், இறையருளால் அதனை மாற்ற முடியும் என்கிறார் இராமலிங்கர்.

மறுமலர்ச்சிப் போக்கு இருவருக்கும் உள்ளது என்பதைப் பின்வரும் கருத்தால் அறியலாம். மூடநம்பிக்கை அறிவுக்கு முட்டுக்கட்டையாக உள்ளது என்று மட்டுமே மகாவீரர் உரைக்கிறார் இராமலிங்கரோ அடியோடு அவை ஒழியவேண்டும் என்று எண்ணத்தில் கலையுரைத்த கற்பனையே நிலையெனக் கொண்டாடும் கண்மூடி வழக்கமெல்லாம் மண்மூடிப் போகட்டும் என்கிறார்.

## சிறந்த இலட்சியம் :

சிறந்த இலட்சியமாக இருவரும் குறிப்பது அகிம்சையே. அகிம்சையே முக்திக்கு வழி என்கிறார் மகாவீரர்.

ஜீவகாருண்யமே மோட்ச வீட்டின் திறவுகோல் என்ற கருத்துப்பட, "சீவகாருண்யம் என்கிற திறவுகோலைச் சம்பாதித்துக் கொள்ளாதவர்களானால், மோட்சமென்கிற மேல் வீட்டிற்கு முன்னும் பின்னுமாக ஏறிச் சமீபத்திற் காத்திருந்து மீளவும் அத்திறவுகோலைச் சம்பாதிக்கத் திரும்புவார்களல்லாது, கதவைத் திறந்து உள்ளே புகுந்து இன்பத்தை அடைந்து வாழமாட்டார்கள் என்று உண்மையாக அறியவேண்டும். இதனால் அறிவு விளங்கிய சீவர்களுக்கெல்லாம் சீவகாருண்யமே கடவுள் வழிபாடு என்றும் அறியப்படும்" என்றுரைக்கிறார் இராமலிங்கர்.

அகிம்சையும், ஜீவகாருண்யமும் அவசியம் என உரைத்த போதிலும் அவற்றைப் பெற்றதனால் நாம் அடைவன யாவை, நம்மை விட்டு விலகுவன எவை என்பதையும் குறிப்பிடுகின்றனர்.

"அகிம்சை என்பது மனிதநேயம், இரக்கம், அருட்குணம், பரிவு, அன்பு ஆகிய அனைத்துப் பண்புகளையும் உள்ளடக்கியது. அவற்றைப் பெற்றுவிட்டால் பிறர்க்கு உதவி செய்து வாழ்தலையும் சிறந்த வாழ்வையும் பெற்றுவிடமுடியும்" (Impact of Ahimsa on Human Affairs, Vaishali Institute Research Bulletin. No-4, P-37) என்று ஜோதி பிரசாத்ஜெயின் அவர்கள் குறிப்பிடுகிறார். அகிம்சையானது மனித வாழ்வில் எத்தகைய தாக்குரவுகளைச் செய்கின்றது என்ற அவரது கட்டுரையில் விளக்கமாக விவாதித்துள்ளார்.

ஜீவகாருண்யம் எவற்றையெல்லாம் தடுத்து நிறுத்துகிறது என்பதை இராமலிங்கர் பின்வருமாறு குறிப்பிடுகிறார். "பசி, கொலை, தாகம், பிணி, ஆபத்து, பயம், இன்மை, இச்சை என்பவைகளால் வரும் அபாயத்தை நிவர்த்தி செய்விப்பது சீவகாருண்யத்திற்கு லட்சியமாக இருக்கவும், இவ்விடத்துப் பசியினாலும் கொலையினாலும் வரும் அபாயங்களை மாத்திரம் நிவர்த்தி செய்விப்பது தலைப்படு காருண்யம் என்று குறித்தது ஏன் என்று அறியவேண்டிய சீவகாருண்ய ஒழுக்கத்தில் பரசீவ காருண்யமென்றும் அபரசீவ காருண்யம் என்றும் இரு வகையாம். அவற்றில் பசி நீக்கலும், கொலை நீக்கலும் பரசீவகாருண்யம். மற்றவை அபரசீவ காருண்யம்" (ஜீவகாருண்ய ஒழுக்கம், ப-92) என்றதனால் ஜீவகாருண்யம் பெறுகின்ற முக்கியத்துவத்தை அறியலாம். இங்கு பசி, கொலை, தாகம், பிணி, ஆபத்து, பயம், இன்மை, இச்சை ஆகியவை நம்மை விட்டு விலகுவன.

எனவே அகிம்சை, ஜீவகாருண்யம் என்பவையே சிறந்த லட்சியம் என்றுரைத்ததோடு அமையாது, அவற்றால் பெறக் கூடியவை எவை, நம்மை விட்டு விலகுவன எவை என்பதையும் இருவரும் வலியுறுத்தினர்.

**சமண விரதக் கொள்கைகளும் திருஅருட்பாவும் :**

சமண சமயத்தில் குறிப்பிட்டுள்ள விரதக் கொள்கைகள் மிகவும் இன்றியமையாத இடம் வகிப்பவை. சமண சமயத்தினரால், மிகவும் பக்தி சிரத்தையோடு பின்பற்றப்படுபவை. அதன் தன்மையினையும், சிறப்பினையும் ஹரி சத்ய பட்டாச்சார்யா என்பவர் பின்வருமாறு கூறுகிறார். "விரதம் அல்லது பணி எனக் குறிப்பிடுபவை. இயற்கைக் குணங்களையும் ஒருவனது உடைமை அல்லது ஆன்மாவையும் இணைப்பதற்கு அவசியமானவை. ஆன்மாவிற்கும் இயற்கைக் குணங்களுக்கும் இடையே உறவினை ஏற்படுத்துவதற்காக அறிவுபூர்வமாகச் செய்யப்பட்ட கண்டு பிடிப்புகளே விரதக் கொள்கைகள்" (Jain Moral Doctrine, P-52) என்ற அவரது கருத்து ஆழ்ந்த சிந்தனைக்குரியது.

மனிதனின் இயற்கைக் குணங்கள் நல்லவையே. அவற்றை அவன் இழந்து விடாதவாறும், அவற்றிலிருந்து பிறழ்ந்து விடாதவாறும் காக்கின்ற கவசங்களாக அவ்விரதங்கள் உள்ளன. தனிமனித மேம்பாடு என்பதே அதன் மேலோங்கிய தன்மையாகவும் விளங்குவதை இனி விரிவாகக் காண்போம்.

**சமண விரதக் கொள்கைகள் :**

சமணம் குறிப்பிடும் விரதக் கொள்கைகள் மூன்று வகையின. அவை அதனதன் தன்மைக்கேற்ப வேறுபடும் தன்மையன. ஆயினும் மூன்று வகைகளுமே மனித வாழ்வு வளம் பெறுவதற்வாக வகுக்கப்பட்டவை. அவை :

1. அணுவிரதம் 2 குணவிரதம்
3. சிஷ்டா 'விரதம் ஆகியன.

**அணுவிரதம் :**

அணுவிரதம் என்பது இல்லறத்தார்க்கு உரிய ஒழுக்கங்களைக் கூறுவது சமணம் குறிப்பிடும் இல்லற ஒழுக்கம் கடுமையானது. வேறு கொள்கைகளைப் போன்று சமணம் அறிவு விளக்கத்தை மட்டும் கூறுவதன்று. அதனோடு ஒழுக்கத்தையும் வற்புறுத்துகிறது.

"இல்லறத்தார்க்குரிய ஒழுக்கங்கள் ஐந்து. அவை கொல்லாமை அகிம்சை, பொய்யாமை, கள்ளாமை, பிறன்மனை நயவாமை

அல்லது கற்புடைமை, பொருள் வரைதல் அல்லது பகுத்துண்ணல் என்பன. இவ்வைந்தும் அணுவிரதம் எனப்படும். அணுவிரதம் என்பது சிறுநோன்புகள் என்று பொருள்படும்" (சமணம், சென்னைப் பல்கலைக்கழகப் பொன்விழா வெளியீடு, ப-52, தா.ஏ.ஞானமூர்த்தி)

அவ்வைந்து வகையான சிறுநோன்புகளும் அருட்பாவில் கூறப்பட்டுள்ள விதத்தை இனி ஒப்பிட்டுக் காணலாம்.

### அ. கொல்லாமை (அல்லது) அகிம்சை :

சமணர்களின் பல்வேறு அறங்களுள் தலையாயது அகிம்சை. அவ்வுணர்வு எல்லா ஒழுக்கங்களிலும் பரவி நிற்கவேண்டும் என்பது சமண சமயக் கொள்கையாகும். அகிம்சை என்பது இன்னாசெய்யாமை.

"அகிம்சைக் கொள்கை தொடக்க காலத்தில் இரக்க உணர்வினின்று பிறந்ததாகத் தெரியவில்லை. ஆன்மா உலகியலில் ஈடுபட்டுக் கறைபடக் கூடாது என்ற கருத்திலிருந்து அக்கொள்கை உண்டாகியது. அகிம்சை அல்லது இன்னாசொய்யாமை நாளடைவில் இரக்க உணர்வு அடிப்படையாகி விட்டது".

அகிம்சையுடன் தொடர்புடைய இரு செயல்கள் உயிர்க்கொலை தவிர்த்தல், எவ்வுயிர்க்கும் இரங்கல் என்பன. அவற்றை சமண, அருட்பாக் கருத்துக்களுடன் ஒப்பிடலாம்.

### உயிர்க்கொலை தவிர்த்தல் :

உயிர்க்கொலை கூடாது என வலியுறுத்தல். அதன் வேண்டுகோள் முறையிலும், தண்ட முறையிலும் வலியுறுத்தக் காணலாம்.

### தண்ட முறை :

இம்மையில் உயிர்க்கொலை புரிந்தால் மறுமையில் எத்தகைய தண்டனைகள் கிடைக்கும் என அச்சுறுத்தி அதனைத் தவிர்க்குமாறு சமண இலக்கியங்கள் கூறுகின்றன. சான்றாகச் சூளாமணியில்,

"மறிப்பல கொன்று மடப்பினை வீழ்த்தும்
கறிப்பல வெஃகிக் கறித்தவர் தம்மை
உறுப்புறுப் பாகவரிந்த தரிந்ததூட்டி
ஒறுப்பர் சிலரை யவருமொரு பால்"

என்று கூறப்பட்டுள்ளது. இது உயிர்க்கொலை புரிதலோடு

இறைச்சி உண்பவர் மறுமையில் அடையும் நரக வேதனையைக் குறிப்பால் தண்ட முறையில் உணர்த்துகிறது.

**வேண்டுகோள் முறை:** திருஅருட்பா அதனையே வேண்டுகோள் முறையில் எடுத்துரைக்கிறது.

"எல்லா உயிர்களும் இன்புற்று வாழ்க
கொல்லா விரதம் குவலயமெல்லாம் ஓங்குக"

என்பது சன்மார்க்கத்தில் இடம்பெறும் தாரக மந்திரமாகும்.

### எவ்வுயிர்க்கும் இரங்கல் :

கொல்லாமை மட்டுமல்லாது எவ்வுயிர்க்கும் இரங்கல் என்பதும் அகிம்சையுடன் தொடர்புடையது.

*சமணம் :* சமண இலக்கியமாகிய சீவக சிந்தாமணியில் சீவகன் பிறவுயிர் கண்டு இரங்குதலைக் குறிக்கிறது. "அந்தணர்கள் தமக்கென ஆக்கி வைத்த சோற்றினை ஒருநாய் சென்று உண்கிறது. அந்தணர்கள் அடிக்கின்றனர். அது உயிர் பிழைக்க ஒரு குளத்திலே பாய்ந்து நீந்துகிறது. அந்தணர்கள் விடாது வளைத்து அதன் கால்கள் ஒடியும்படி அடித்துத் துன்புறுத்தி அகல்கின்றனர். சீவகன் நீரில் அந்நாயை அணுகி, அது இறக்கும் நிலையில் இருப்பதைக் காண்கிறான். இரங்கி அழுகிறான். அதன் செவிகளில் ஐம்பத மந்திரத்தினை ஓதுகிறான். அதன் உயிர் அந்நாயின் உடம்பை விட்டகன்று ஓடி, வெள்ளி மலையுச்சியில் சேர்ந்து அழகொளிரும் தேவனாகிறது. இழிந்த உயிராகிய நாயின் துன்ப நிலைக்கு இரங்கி, அதற்குயர் பதவி தந்த சீவகன் பேரருட் திறத்திலிருந்து அவன் ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர் ஈறாக அனைத்து உயிர்க்கும் இரங்கி உதவி செய்யும் பான்மையன் என்பது தெளிவாகிறது". (சமணம், தா.ஏ. ஞானமூர்த்தி, ப-58)

*திருஅருட்பா :* திருஅருட்பாவில் வாடிய பயிரிலிருந்து வாடுகின்ற உயிர்கள் மீதெல்லாம் இரக்கங்கொண்ட நிலையைக் காண முடிகிறது.

1. வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடினேன் பசியினால் இளைத்தே வீடுதோறிரந்தும் பசியறாதயர்ந்த வெற்றரைக் கண்டுளம் பதைததேன் நீடிய பிணியால் வருந்துகின்றோர் என்நேர் உறக்கண்டுளந் துடித்தேன்.

2 நலிதரு சிறிய தெய்வமென்றயோ நாட்டிலே பலபெயர் நாட்டிப் பலிதர ஆடுபன்றிக் குக்குடங்கள் பலிக்கடா

*சமணம் :* "பொய்யாமையாவது மனம். மொழி, மெய்களால் பொய்யாது ஒழுகுதலாகும். தீமை பயக்கின்ற எந்த ஒழுக்கமும் பொய்மை ஒழுக்கமாகும்" என்கிறார் தா.ஏ.ஞானமூர்த்தி.

*திருஅருட்பா :* வாக்கினால் உண்டாகும் பாவங்களை வரையறுக்கிறது. "வாக்கினால் பொய் சொல்லல், கோட்சொல்லல், புறங்கூறல், வீணுக்கழுதல், இவை நான்கும் வாக்கினால் உண்டாகும் பாவங்கள்". (அருள்நெறி உ.ந. ப-344)

மனம், மொழி மெய்களால் பொய்யாது ஒழுகவேண்டும் என்கிறது சமணம். பொய்யினால் உண்டாகும் பாவங்களைக் கூறுகிறது திருஅருட்பா.

**கள்ளாமை :**

அடுத்தவர் பொருளைத் தனதாக்காமையே கள்ளாமை,

*சமணம் :* "கள்ளாமையாவது பிறர்க்குரிய பொருளை வஞ்சித்துக் கொள்ளுதல் கூடாது என்பதாகும்". (சமணம், தா.ஏ.ஞானமூர்த்தி)

*திருஅருட்பா :* "மனத்தினால் பரதாரகமணம் பண்ண நினைத்தல், அன்னியருடைய சொத்தைக் கிரகிக்க நினைத்தல், அன்னியருக்குத் தீங்கு செய்ய நினைத்தல், முடியாத காரியங்களை நினைத்து அக்காரியம் அன்னியர்களுக்கு முடிந்ததை நினைத்துப் பொறாமையடைதல் இவை நான்கும் மனத்தினால் செய்யும் பாவங்கள்". (அருள்நெறி ப-344) பிறர் பொருளை வஞ்சித்தல் கூடாது என்கிறது சமணம். அவ்வாறு எண்ணும் எண்ணங்கள் மனத்தினால் வரும் பாவங்களே என்கிறது திருஅருட்பா.

**பிறன்மனை நயவாமை அல்லது காமங்கடிதல் :**

*சமணம் :* "காமம் மிகுதியினாலேயே ஒருவன் பிறனுடைய மனைவியை அடைய விழைகிறான். இவ்விழைவால் அவன் இன்னல்களும் பாவமும் எய்துகிறான். பிறனுடைய இல்லாளிடத்தில் செல்கின்றவன் பகைமை, பாவம், அச்சம், பழி ஆகிய நான்கும் அவனை விட்டு நீங்கா என்று திருவள்ளுவர் கூறுகிறார்.

"பகை பாவம் அச்சம் பழிஎன நான்கும்
இகவாவாம் இல்லிறப்பான் கண்"

என்பதே அக்குறள்.

*திருஅருட்பா :* "தேகத்தினால் பிறர் மனைவியைத் தழுவுதல், வேதவிரோத ஆகாரங்களைப் புசித்தல், அன்னியர்களை இம்சை

செய்தல், தீங்கு செய்கிறவர்களைத் தடுக்காமல் அவர்களுக்கு உபகாரஞ் செய்தல் இந்நான்கும் தேகத்தாலுண்டாகும் பாவங்கள் ... தனது மனைவி தவிர அன்னியமான பெண்களைத் தாய் சகோதரி முதலியர்களாகச் சிந்தித்தல் மனத்தால் வரும் புண்ணியம்" (அருள்நெறி) என்று பிறன்மனை நயத்தலைப் பாவம் என்று கண்டித்தும், பிறன்மனையைச் சகோதரியாக எண்ணுமாறு வழிவகையும் கூறுகிறது அருட்பா.

## பொருள் வரைதல் அல்லது பகுத்துண்ணல் :

**சமணம் :** "பொருள் வரைதலாவது மிகுபொருள் விரும்பாமை. அளவற்ற பொருளாசை மனிதனிடத்தில் தீமைகளைப் பெருக்கிச் சமுதாயத்தினருக்கும் பல இன்னல்களை விளைவிக்கின்றது. மிகுபொருள் விரும்பாமை பகுத்துண்ணலுக்கு வழிவகுப்பதாகிறது. பகுத்துண்டலாகிய அறம் மக்கள் அனைவரும் அமைதியாகவும் இன்பமாகவும் வாழ வழிசெய்யும்". (தா.ஏ.ஞானமூர்த்தி)

**திருஅருட்பா :** மிகுபொருள் வரைதலைத் திருஅருட்பாவும் கண்டிக்கிறது.

"தொண்டாளப் பணந்தேடுந்துறையாள
உலகாளச் சூழ்ந்த காமப்
பெண்டாளத் திரிகின்ற பேய் மனத்தீர்" (சமாதிவற்புறுத்தல்)

என்று பொருளாசையானது பிற இன்னல்களுக்கும் கொண்டு விடும். அதனை விலக்க வேண்டுமென்றுரைக்கின்றது.

## பகுத்துண்ணலையும் பரிந்துரை செய்கிறது திருஅருட்பா

"கடவுள் தம் கட்டளைப்படி நடவாத சாதாரண குற்றமுடைய சீவர்களைத் தமது சக்தியால் அவர்கள் பெறத்தக்க இன்பங்களைப் பெறவொட்டாமல் தாம் கொடுத்த சௌக்கிய புவன போகங்களை விடுவித்து அந்தச் சீவர்களுக்கு நல்லறிவு வருவிக்கும் நிமித்தம் அந்தத் தேகத்தினின்றும் நீக்கி வேறொரு தேகத்தில் விடுக்கின்றார். அந்த சீவர்கள் சௌக்கிய புவன போகங்களை இழந்தபடியால், சௌக்கிய போஜனம் முதலியவற்றையும் இழந்து வேறுவேறு இடங்களில் ஆகாரம் முதலியவை இல்லாமல் வருந்துகின்ற போது தயவுள்ளவர்கள் அந்த வருத்தத்தைக் கண்டு ஆகாரம் முதலியவை கொடுக்கிறார்கள். அப்படிக் கொடுக்கின்றவர்களை நல்ல தயவுள்ளவர்கள், மேன்மேலும் சுகத்தை அடையக் கடவர்கள் என்று சந்தோஷித்து மேல்நிலையில் வைத்து உபசரிப்பாரல்லது கோபிக்க மாட்டார். ஆதலால் கடவுள் அருளாக்கினைக்குச்

சீவர்களிடத்தில் சீவர்கள் தயவு வைத்து உபசரிப்பதே சம்மதமென்று உண்மையறிந்து சொல்லுவதே உத்தரமென்று அறியவேண்டும்" (ஜீவகாருண்ய ஒழுக்கம்) என்றதனால் குற்றம் புரிந்தவர்க்கு மட்டுமல்லாது சகல ஜீவர்களுக்கும் உபசரித்தலை, பகுத்துண்ணலைத் திருஅருட்பாவும் வற்புறுத்துகிறது என்பதை அறியலாம்.

இவ்வாறு மிக அதிகமாகப் பொருளாசை கொண்டு பொருளீட்டுவதைக் கண்டிக்கவும், பகுத்துண்ணலைப் போற்றவும் செய்கின்றன.

## மற்றைய விரதங்கள் :

மேலே விளக்கிய அகிம்சை, பொய்யாமை, கள்ளாமை, பிறன்மனை நயவாமை, பொருள் வரைதல் ஆகிய அவ்வைந்து அணுவிரதங்களோடு மற்றைய ஐந்து விரதங்களும் சமணர்களால் பின்பற்றப்படுகின்றன. அவை :

"1. கள்ளுண்ணாமை 2. ஊன்உண்ணாமை

3. தேன் உண்ணாமை 4. இரவு உண்ணாமை

5. பெரியோரை வணங்குதல்

என்பன. அவ்வைந்தையும் சமணர்கள் தவறாமல் மேற்கொள்ள வேண்டும்". (தா.ஏ.ஞானமூர்த்தி - சமணம்)

மேற்குறித்தவைகளுள் கள்ளுண்ணாமை, ஊன்உண்ணாமை, பெரியோரை வணங்குதல் என்ற விரதங்களை அருட்பாவும் பரிந்துரைக்கின்றன. அவை கிறித்தவமும், திருஅருட்பாவும் என்ற ஆறாம் இயலில் மதிப்புகளுடன் ஒப்பிட்டு விரிவாக ஆராயப்பட்டுள்ளன. இங்கு மற்றைய இரு விரதங்களை விரிவாக ஆராயலாம்.

### 1. தேன் உண்ணாமை :

தேன் ஒரு மருத்துவப்பொருள், அது மனிதனுக்குச் சிலபோது அவசியமான உணவுபொருளாகவும் விளங்குகிறது. மலைவாழ் மக்களுக்கு அதுவே அன்றாட உணவுப்பொருளாகவும் விளங்குகிறது. அத்தகைய தேனை விலக்குமாறு சமணம் வற்புறுத்துகின்றது.

**சமணம் :**

சமண சமயம் தேன் உண்பதை விலக்குவதற்குப் பல காரணங்கள் உண்டு. தேனைக் கூட்டில் இருந்து எடுக்கும்போது

தேனீக்கள் பலவற்றோடு அதன்கண் உள்ள புழுக்களையும் கொல்லவேண்டியுள்ளது. எனவே அது உயிர்க்கொலை. மேலும் தேன் ஒருவகைக் கள்" என்று கூறி ஏற்க மறுக்கிறது.

*திருஅருட்பா :*

இராமலிங்கர் நித்திய கருமவிதியில் உணவுப்பொருட்களுள் விலக்குகள் எவையெனக் குறிப்பிட்டுள்ளார். "பழஞ்சோறு, பழங்கறி, எருமைப்பால், எருமைத்தயிர், மோர், நெய், செம்மறிப்பால், தயிர், மோர், நெய், கேழ்வரகு, வரகு, தினை, சாமை, பருப்புவகை, அதிரசம், அப்பம், சுசியம் முதலிய சிற்றுண்டி, தயிர்ச்சோறு, புளிச்சோறு முதலிய சித்திரான்னம், காரரிசிச்சோறு, முளைக்கீரை, அகத்திக்கீரை, முன்னை முதலான இலைக்கறி, சுரை, பூசுனை, பறங்கி, பீரிக்கு, புடல், பாகல், கடுகு, நல்லெண்ணெய், புளி, புகையிலை, கள், சாராயம், கஞ்சா, புலால், மாமிசம் முதலிய விலக்குகளை நீக்கி விதத்தவைகளையனு சரித்தல்" (நித்தியகருமவிதி) என்பன அவர் கூறியவை. அதில் தேன் இடம் பெறவில்லை. விலக்குவனவற்றிலும், விதித்தவைகளிலும் தேன் கூறப்படவில்லை. ஆனால் பாடற் பகுதியில் "இறைவன் இனியன் என்பதனை உணர்த்துவதற்காக இனிய சுவைப் பொருட்களை உவமையாக்குகிறார். ஐம்பொறிகளின் சுவைகளில் இன்றியமையாததும் எல்லோரும் அறிந்துகொள்ளத் தக்கதுமான சுவை, நாவின் சுவை. எனவேதான் சர்க்கரை, தேன், பால், கரும்பு முதலிய நாவிற்கினிய சுவைப்பொருட்கள் உவமையாக்கப் பட்டுள்ளன. அவை.

"ஆனந்தத் தேன், ஆனந்தத் தேம்பாகின்பதமே, உளங்கொளுந்தேன், சித்தாந்தத்தினும் தித்திக்கும் தேனே, தேன் நிலைத்த தீம்பாகே, மணி மன்றில் தேனே, என் உள்ளத்தில் உற்றினிக்கும் நறவே, சிந்தை களிக்க சிவானந்த மதுவுண்டு" என்கிறார் இராமலிங்கர்.

தேன் உண்ணாமையை சமணம் வலியுறுத்துகிறது. திருஅருட்பா உணவுப்பொருள்களான விதித்தவையிலும், விலக்கிவையிலும் தேனைக் குறிப்பிடவில்லை. ஆனால் இறைவனைத் தேனிற்கும், தேனின் சுவைக்கும் ஒப்புமை கூறியுள்ளார் இராமலிங்கர்.

**2. இரவு உண்ணாமை :**

இரவில் நுண்ணுயிர்கள் உணவில் கலந்துவிடக்கூடும் என்ற காரணத்தால் இரவுண்ணாமையைச் சமணம் வற்புறுத்துகிறது

எனக்கொள்ளலாம். உடல்நலத்தையொட்டியும் இரவுண்ணாமை வற்புறுத்தப்படுகிறது என்று ஜீவபந்து டி.எஸ். ஸ்ரீபால் அவர்கள் கூறுகிறார். "உண்ணும் உணவு செரிப்பதற்கு மூன்று மணிநேரம் தேவையென்றும் ஆதலால் இரவில் உறங்கப்போகும் சமயத்தில் உணவு உண்ணல் சுகாதாரக் கேடென்றும் கூறி வருவதைக் காண்கிறோம். மேலும் கதிரவன் மறைந்தால் எபிமிரா என்னும் கண்ணுக்கும் புலனாகாத விஷக்கிருமிகள் உற்பத்தியாகின்றன வென்றும் விஞ்ஞானிகள் கூறுகின்றனர். இதையெல்லாம் என்றோ அறிந்த ஜைன சமயத்தவர்கள் இரவுண்ணலைப் புகழவில்லை" என்று தமிழகத்தில் ஜைனம் என்ற தமது நூலில் அவர் கூறியுள்ளார்.

### திருஅருட்பா :

"இரவில் 10 நாழிகைக்குள் மத்தியான போஜனத்துக்கு அரைத்தரமாகப் புசித்தல், அதற்குமேல் இராத்திரி 15 நாழிகை பரியந்தம் மனத்தை யடக்கித் தியானித்திருத்தல். 15 நாழிகை தொட்டு இருபத்திரண்டரை நாழிகை (15 நாழிகை முதல் 22½ நாழிகை வரை = 12 மணி முதல் 3 மணிவரை) பரியந்தம் மனத்தை அடக்கித் தியானித்திருத்தல் என்று நித்திய கருமவிதியில் கூறப்பட்டுள்ளது. பகலுணவில் பாதியளவே இரவு உண்ண வேண்டும். உண்ட பின்பு 5 நாழிகை தியானம் செய்யவேண்டும். பிறகு இரவு 12 மணி முதல் 3 மணி வரை உறங்கவேண்டும் என்ற திருஅருட்பாவில் விதிகள் சமணத்துடன் ஒப்பிடக்கூடியன. உணவு உண்ட பின் அவ்வுணவு ஜீரணமாவதற்கு மூன்று மணிநேரம் ஆகும் என ஜீவபந்து அவர்கள் குறிப்பிட்டுள்ளார். அது அளவு குறிப்பிடப்படாத இரவு உணவிற்கு. ஆனால், அரையளவு உண்ணவேண்டும் என்று குறிப்பிடும் திருஅருட்பா 5 நாழிகை கழித்து உறங்கவேண்டும் என்கிறது.

எனவே செரித்தல் காரணமாக உணவு உண்ட பின்பு நேரங்கழித்தே உறங்கவேண்டும் என்பதில் சமணமும் திருஅருட்பாவும் ஒன்றுபடுகின்றன. ஆனால் சிறு உயிர்கள் விழக் கூடும் என்ற கருத்து சமணத்தைப் போல திருஅருட்பாவில் இடம்பெறவில்லை.

இவ்வாறு அனுவிரதங்கள் ஐந்தும், மற்றைய விரதங்கள் அனைத்தும் சமணத்திலும், திருஅருட்பாவிலும் கூறப்பட்டுள்ளன.

### குணவிரதம் :

குணவிரதம் என்பது மூன்று வகையாகப்பகுப்பட்டுள்ளது. அவை மனிதனின் வரையறுத்து வாழ்தல் என்ற பண்பை வளர்ப்பனவாக விளங்குகின்றன.

1. திசை விரதம்
2. அநர்த்த தண்ட விரதம்
3. போக உபயோகப் பரிமான விரதம்

என்பவையே அவை.

(1) **திசைவிரதம் :** திசை வரைதலாகும். எட்டுத் திசைகளிலும் ஒரு வரையறை செய்து கொண்டு அவ்வரையறைக்கு அப்பால் எக்காரணத்தைக் கொண்டும் போவதில்லை என்று உறுதி செய்வது திசை விரதம் எனக்கொள்ளப்படுகிறது. திருஅருட்பாவில் அத்தகைய முறையில் வரையறை எதுவும் குறிப்பிடப்படவில்லை. இறுதியில் இராமலிங்கர் தமக்கென ஒரு இடத்தை வடலூர் என்ற தளத்தில் வரையறுத்துக்கொண்டார். உத்தரஞான சிதம்பரம் என அதனை அழைத்து அங்கேயே தமது கொள்கை விளக்கத்தின் குறியீட்டுச் சின்னங்களை அமைத்துக் கொண்டார். சத்தியஞான சபை, சத்திய தருமச்சாலை என்றெல்லாம் அமைத்த பின்பு அவர் அவ்வடலூரை விட்டு வெளியே போவதில்லை என்று உறுதி செய்து கொண்டது தெரிய வருகிறது.

**(2) அநர்த்த தண்ட விரதம் :**

சமணம் : தண்டம் வரைதலைக் குறிக்கும். இஃது நான்கு வகைப்படும்.

1. பிறர்க்குத் தீங்கு நினையாது இருத்தல்.
2. விழிப்பின்மையால் பூச்சி முதலியவற்றைச் சாகும்படிச் செய்யாதிருத்தல்.
3. வாள் முதலியகருவிகளால் பிறர்க்குத் துன்பம் ஏற்படுமாகையால் அவற்றை இயன்றளவு குறைத்துக் கொள்வதோடு அவற்றால் பிறர்க்குத் துன்பம் நேரிடாதபடி கவனித்துக் கொள்ளல்.
4. சொல்வாக்கு, ஆற்றல் முதலியவைகளை பயன்படுத்தி பிறர்க்குத் துன்பம், தீமை செய்யாதிருப்பதும், பிறரை தீமை செய்யத்தூண்டாதிருத்தலுமாம் (சமணம் தா.ஏ.ஞானமூர்த்தி)

திருஅருட்பா : மேற்குறித்த அனைத்துக் கருத்துக்களும் இடம் பெறும் வகையில் திருஅருட்பாவில் அருள்நெறிப்பகுதி விளங்குகிறது.

"நன்மை தீமை என்பவை யாவை? நன்மை தீமை என்பவை புண்ணியபாவம். புண்ணியம் என்பது ஆரம்பத்தில் செய்வதற்கும் அனுபவிப்பதற்கும் துக்கமாயும், பின் சுகமாயும் விளங்கும். பாவமென்பது ஆரம்பத்தில் சுகமாயும் பின் துக்கமாயும் இருக்கும்.

புண்ணிய பாவங்கள் நம்மை எவ்வாறடைகின்றன. மனம் வாக்கு காயம் மூன்றினாலும் அடையும். மேலும் மனத்தினிடத்தில் நால் வகையும், வாக்கினிடத்தில் நால்வகையும். சரீரத்தினிடத்தில் நால்வகையும் ஆக பனிரெண்டு வகையாய் நம்மை அடையும். அவையாவன மனத்தினால் பரதாரகமனம் பண்ண நினைத்தல், அன்னியருடைய சொத்தை கிரகிக்க நினைத்தல், அன்னியருக்குத் தீங்கு செய்ய நினைத்தல், முடியாத காரியங்களை நினைத்து அக்காரியம் அந்நியர்களுக்கு முடிந்ததை நினைத்துப்பொறாமை அடைதல். இவை நான்கும் மனத்தினால் செய்யும் பாவங்கள்.

இவை போன்றவைகளைத் தவிர்த்து அந்நியர்களுக்கு நன்மை உண்டாக நினைத்தல், பொறாமை அடையாதிருத்தல், அந்நியர் சொத்தை தனதாக்க எண்ணாதிருத்தல், தனது மனைவி தவிர அந்நியமானபெண்களை தாய் சகோதரி முதலியவர்களாகச் சிந்தித்தல், இவை மனத்தால் வரும் புண்ணியங்கள். பொய், கோட் சொல்லாமை, இன்சொல்லாடல், தோத்திரம் செய்தல் இவை நான்கும் வாக்கினால் உண்டாகும் புண்ணியங்கள். அந்நியர்களுக்குத் தீங்கு உண்டாகுங்கால் விலக்கல் முதலான நன்மையான கிருத்தியங்களெல்லாம் தேகத்தால் உண்டாகும் புண்ணியங்கள்" என்று வரையறுத்து உரைக்கிறது. திருஅருட்பாவின் அக்கருத்துக்கள் சமண தண்ட விரதக் கொள்கையோடும் இணைந்தே விளங்குகின்றன.

நன்மை இவை, தீமை இவை என வரையறுக்கப்பட்டு விடுவதால் சமணத்தின் அநர்த்ததண்ட விரதமாகவே திருஅருட்பாவின் கருத்துக்களும் விளங்குகின்றன.

**(3) போக உபயோகப் பரிமாண விரதம் :**

"போகப் பொருள்களை வரையறுத்துக் கொள்ளுதல். உடுக்கும் உடை, உண்ணும் உணவுப்பொருட்கள் இவற்றுள் இன்ன பொருட்களை பயன்படுத்தல் இல்லையென வரையறை செய்துகொள்தல்" *(தா.ஏ.ஞானமூர்த்தி ப-75)*

திருஅருட்பாவிலும் அத்தகு உபயோகப் பொருள்கள் குறித்த வரையறை இடம்பெறுகிறது. உடை பற்றிய குறிப்பு அதிகம் இல்லை.

ஆனால் உணவுப் பொருட்களை பொருத்தமட்டில் அதிக வரையறைகளை இராமலிங்கர் கூறுகிறார். அவை இவ்வியலில் முன்னரே தேன் உண்ணாமை என்ற கூறில் கூறப்பட்டுள்ளது. விதித்தவை, விலக்கியவை என்று நித்திய கரும விதிஎன்ற பகுதியில் உபயோகப்பொருள்களை வரையறுத்துக் கூறியுள்ளார்.

**சிஷ்டாவிரதம் :**

*சமணம் : இவ்வகை விரதம் நான்கு வகைகளில் அமைந்துள்ளது. அவை.*

*"1. **தேசாவதாசிகம்** : என்பது திசை விரதம் போன்றது.*

*2. **ஸாமாயிக விரதம்** என்பது தியானத்தில் ஆழ்ந்து இருத்தல். கோயிலிலோ வீட்டிலோ அமைதியான ஓரிடத்தில் அமர்ந்து குறைந்த அளவு 48 நிமிடமாவது தியானம் செய்தல் வேண்டும். காலை, மாலை, நடுப்பகல் என்று மூன்று வேளைகளில் தியானம் செய்யலாம். காலையில் செய்வதே சிறப்புடையது. தியானம் செய்யும்போது மனம், வாக்கு, காயங்களினால் பாவச் செயல்களை கருதாமலும் பேசாமலும் இருத்தல் வேண்டும்.*

*3. **போஷதோபனாசம்** : போஷத விரதம் என்றும் கூறப்படும். இரவு பகலுமாகிய ஒருநாள் முழுவதும் உணவு கொள்ளாமலும் நீர் அருந்தாமலும் உயர்ந்த ஆடை அணிகலன்கள் அணியாமலும் இணை விழைச்சு இல்லாமலும் விரதம் காத்தல் வேண்டும். இதனை மாதத்தில் நான்கு நாள் செய்தல்வேண்டும்.*

*4. **அதிதி ஸம்விபாகம்** : என்பது வையா விரதம் எனவும் அழைக்கப்படும். துறவியாகிய சமண முனிவர்கள் ஏற்றுக் கொள்ளக்கூடிய பொருள்களில் எதையேனும் அளிப்பதாக விரதம் செய்துகொண்டு அதன்படி ஒழுகுதல் வையா விரதம். சமண முனிவர்கள் இல்லறத்தாரிடமிருந்து ஏற்றுக்கொள்ளக்கூடிய பொருள்கள் உணவு, நீர், பழம், கமண்டலம், மருந்து, உடை, கம்பளி, போர்வை, ஆசனம் முதலியவைகளாகும்." (சமணம் - தா.ஏ.ஞானமூர்த்தி, ப-76)*

*திருஅருட்பா : முதல் வகை விரதம் முன்னர் குண விரதத்தில் திசை விரதம் என்ற பகுதியில் விவாதிக்கப்பட்டுவிட்டது.*

*இரண்டாம் வகையாகிய ஸாமாயிக விரதமாகிய தியானத்தில் ஆழ்ந்திருத்தல் என்பதனைத் திருஅருட்பாவும் வற்புறுத்துகிறது. சமணத்தைப் போன்றே மூன்று வேளைகளிலும் தியானம் செய்யுமாறு கூறுகிறது.*

*"1. சூரியோதயத்திற்கு முன் நித்திரை நீங்கி எழுந்து விபூதி தரித்து சிறிது நேரம் உட்கார்ந்து கடவுளைத் தியானஞ்செய்தல் வேண்டும்.*

*2. பகற்போஜனஞ் செய்த பின், சற்று நேரங் கடவுளைத் தியானித்திருக்க வேண்டும்.*

3. இராத்திரி முன் பங்கில் தேக சுத்தி செய்து, விபூதி தரித்துச் சிவத்தியானஞ் செய்தல், தோத்திரஞ் செய்தல், சாத்திரம் வாசித்தல், உலகியல் விவகாரஞ் செய்தல் இவை முதலியவை கூடும்" (நித்தியகரும விதி)

மூன்றாவது வகை விரதமான போஷத விரதம் அருட்பாவில் சற்று மாறுபட்டு உள்ளது. ஒருநாள் முழுவதும் உணவருந்தாமல், நீர் அருந்தாமல் இணைவிழைச்சு செய்யாமல் விரதம் இருத்தல் என்ற குறிப்பு திருஅருட்பாவில் காணப்படவில்லை. சமணம் அத்தகு விரதத்தை மாதத்திற்கு நான்கு நாட்கள் செய்தல் வேண்டும் என்கிறது. ஆனால் இணைவிழைச்சு பற்றிக் குறிப்பிடும்போது 8 தினத்திற்கொரு விசை செய்தல் மத்திம பட்ஷம் என்று மாதத்திற்கு நான்கு நாட்கள் செய்தலே சிறப்புடையது என்கிறது திருஅருட்பா.

நான்காம் வகையாகிய அதிதிஸவியாகம் என்பது சமணத்துறவிகளுக்கு பொருள் தந்து உதவுதல் என்பதாகச் சமணம் குறிப்பிடுகிறது. ஆனால் அருட்பாவோ பிராயச்சித்தம் என்ற கண்ணோட்டத்தில்தான் துறவிகளுக்கு உதவுதலைக் குறிப்பிடுகிறது. "சத்தியற்றவர்களாயும் வார்த்திகர்களாயும் உள்ளவர்கள் மகான்களுக்குத் தொண்டு செய்தால் நீங்கும்" (அருள் நெறி) எனக் குறிப்பிடுகிறது.

### விரதங்களினடிப்படையில் மனிதப் பாகுபாடுகள் :

சமண சமயத்தில் மேற்கொள்கின்ற விரதங்களினடிப்படையில் இல்லறத்தான் பதினொரு நிலைகளில் பாகுபடுத்தப்படுகிறான். அந்நிலைகள் வருமாறு:

### தரிசனிகன் :

பனிரெண்டு விரதங்களை (அணு விரதம், குணவிரதம், சிஷ்டா விரதம்)யும் மேற்கொள்ளாவிட்டாலும், நற்காட்சி மட்டும் மேற்கொண்டிருப்பவன் தரிசனிகன். இவன் முதல் நிலை சாவகன்.

### விரதிகன் :

நற்காட்சியுடன் அணு, குண, சிஷ்டா விரதங்களை அவற்றின் அதிசாரம் இன்றி மேற்கொள்பவன் விரதிகன், இவன் இரண்டாம் நிலை சாவகன்.

### சாமாயிகன் :

இரவிலும் பகலிலும் குறிப்பிட்ட நேரம் வரை ஜபம், தியானம் ஆகியவற்றைச் செய்பவன் மூன்றாம் நிலை சாவகன்.

**புரோஷதோப வாசகன் :**

ஒரு மாதத்தில் நான்கு திதிகளில் நோன்பு நோற்பவன். இவன் நான்காம் நிலை சாவகன்.

**அச்சித்த விரதி :**

நன்றாகப் பழுக்காத பழங்களையும், பச்சைக் காய்களையும், வெற்றிலை போன்ற இலைகளையும் சாப்பிடாமல் விலக்கும் விரதி. இவன் ஐந்தாம் நிலை சாவகன். பச்சைப்பொருட்களில் ஓரறிவுயிர்கள் இருக்கின்றன. அவற்றிற்குத் துன்பம் தரக்கூடாது என்பதால் இவைவிலக்கப்படுகின்றன.

**இராத்திரிஅபுக்தன் (இரவு உண்ணான்) :**

இரவில் உண்பன, தின்பன, நக்குவன, பருகுவன என்னும் நால்வகை உணவுகளை முழுதும் துறந்தவன் ஆறாம் நிலை சாவகன்.

**பிரமசாரி :**

உடம்பின் இழிதகைமையை உணர்ந்து பெண் ஆசையை முற்றும் துறந்தவன் பிரமசாரி. இவன் ஏழாம் நிலை சாவகன்.

**அநாரம்பன் :**

கொலைக்குக் காரணமான தொழிலை மேற்கொள்ளாதவன் இந்நிலையினன். இல்வாழ்வான் தன் குடும்ப வாழ்க்கைக்கு ஏதேனும் ஒரு தொழிலைச் செய்யவேண்டும். அப்படித் தொழிலைச் செய்யும்போது ஓரறிவு உயிர் முதலான உயிர்க்குத் துன்பம் ஏற்படுகிறது. இத்தகைய துன்பம் கூடாது என்பதற்காகத் தொழிலையே விலக்குபவன் அநாரம்பன். இவன் எட்டாம் நிலை சாவகன்.

**அபரிக்கிரன் :**

பொருளாசையை விலக்கியவன். வீடு செல்வம் முதலான புறப்பற்றையும், காமம் முதலான அகப்பற்றையும் அறவே விலக்கித் தன் மனத்தை அற வழியில் செலுத்தும் தன்மை உடையவன். இவன் ஒன்பதாம் நிலை சாவகன்.

**அன்னுமதன் :**

இல்வாழ்க்கையில் ஒரு தொடர்பும் பிடிப்பும் இல்லாத தூயவன் இந்நிலையினன். இத்தகைய விரதி, உலகியல்

தொடர்பானவை பற்றி அறிவுரையும் வழங்குவதில்லை. ஊக்கமும் தருவதில்லை. இவனே பத்தாம் நிலை சாவகன்.

**உதிட்டபிண்டன் :**

எல்லாப் பற்றையும் துறந்து வீட்டை விட்டே வெளியேறித் துறவை மேற்கொள்பவன்.

பனிரெண்டு விரதங்களை மேற்கொள்ளும் இந்தப் பதினொரு நிலையினரும் உள்ளமும், உடலும் தூய்மை பெற்று முழுத்துறவுக்குத் தயாராகின்றனர் என்று ஜைன தத்துவமும் பஞ்சபரமேஷ்டிகளும் என்ற நூல் குறிப்பிடுகிறது.

திருஅருட்பா : மேற்குறித்த பதினொரு பாகுபாடுகளில் தரிசனிகன், விரதிகன், சாமாயிகன், அநாரம்பன், அபரிக்கிரகன், போன்ற ஐந்து நிலைகளையும் திருஅருட்பாவும் வலியுறுத்துகிறது.

புரோஷதோபவாசன் என்ற நிலையில் நான்கு திதிகளின் நோன்பு நோற்றலை திருஅருட்பா வலியுறுத்தவில்லை.

அச்சித்த விரதி என்ற நிலையிலும் வேறுபடுகிறது. உணவில் சேர்க்கவேண்டிய காய்கறிகள் இன்னவை என்றும், வெற்றிலை போடும் முறையிதுவென்றும் நித்திய கரும விதியில் குறிப்பிடுகிறது.

இராத்திரி அபுக்தன் என்ற நிலையில் உறங்குதற்கு ஐந்து நாழிகைக்கு முன்னர் உணவருந்தப் பணிக்கிறது.

பிரமச்சரியத்தை வன்மையாக மேற்கொள்ளும்படி வலியுறுத்த வில்லை.

அன்னுமதன் நிலையை இல்லறத்தானுக்கு வலியுறுத்தவில்லை.

உதிட்டபிண்டன் என்ற துறவு நிலையையும் திருஅருட்பா வற்புறுத்தவில்லை. ஆனால் இன்றைய சன்மார்க்கிகளில் சிலர் உதிட்டபிண்டர்களாக மாறி வருகின்றனர். தற்போது வடலூரில் வசிக்கும் ஊரனடிகள், துறவி கந்தசாமி போன்ற சிலர் வீட்டை விட்டே வெளியேறித் துறவை மேற்கொண்டு அருட்பாவினையும், இராமலிங்கரையும் உலகிற்கு உணரச் செய்யப்பாடுபட்டு வருகின்றனர்.

சமணம் குறிப்பிடும் பதினொரு வகை மனிதப்பாகுபாடுகளைப் பற்றிய கருத்துரைப்பதில் திருஅருட்பா இணைந்தும், மாறுபட்டும் விளங்குகின்றது. இருப்பினும் திருஅருட்பாவின் மனிதப் பாகுபாடு புலால் உண்ணாமை மையமிட்டு அமைகின்ற அகவினத்தார். புறவினத்தார் என்ற இருவகைப் பாகுபாடே ஆகும்.

## 6. கிறித்தவமும் திருஅருட்பாவும்

### (மதிப்புகள்)

மானுட வாழ்விற்கும் மதிப்புகளுக்கும் இடையே உள்ளார்ந்த ஆழமான உறவுநிலை ஒன்று இருந்து வருகிறது. மதிப்புடைய மனிதனே சிறந்த மானுடன் என்ற பாராட்டுதலைப் பெறுகிறான். அம்மதிப்பு நிலையைச் சமயஞ்சார்ந்த வாழ்க்கையிலும் சமயம் சாரா வாழ்விலும் ஒருவன் பெறமுடியும். சமய நம்பிக்கையில்லா மனிதர்களும் ஒழுக்க சீலர்களாய், மனித நேயத்துடன், நற்பண்புகளுடன், நன்மதிப்புகளுடையவர்களாய்த் திகழ்வதுண்டு. ஆனால், சமயச் சார்பு பெரும்பான்மையான மக்களுக்கு வழிகாட்டியாகத் திகழ்வதால் சமய நெறியில் மதிப்புகளை ஆராய வேண்டியது அவசியமாகிறது.

உலகில் சமயங்கள் பல தோன்றியுள்ளன. சமயங்கள் தோன்றிய அளவிற்கேற்ப சமயச்சீர்திருத்தங்களும் மிகுதியாகப் பரவியுள்ளன. சமயங்கள் தம் கருத்துக்களைக் காத்துக் கொள்ளும் நோக்கத்தில் சமய இலக்கியங்களையும் படைத்தன. அவைகளும் அச்சமயஞ்சார்ந்த மக்களுக்கு மதிப்புகளைக் கூறி வழி காட்டியுள்ளன.

தற்காலத்தில் சமய ஒருமைப்பாடு-சமயக் காழ்ப்பு என்ற இருவித ஊசலாட்ட மனநிலை வேரூன்றிவிட்டது. சமய நம்பிக்கைகளை எதிர்த்துப் பல சமூக இயக்கங்கள் தோன்றியுள்ளன. பகுத்தறிவுவாதம் பரவலாகப் பேசப்படுவதையும் பார்க்கிறோம். இருந்தாலும் சமயங்களுக்கிடையே இறுக்கமும், எதிர்ப்பும், பொறாமையும், போட்டியும் வளர்கின்ற சூழ்நிலைமாற வேண்டும் அதற்கு ஒப்பியல் ஆய்வு துணை செய்யும்.

சமயஞ்சாராது பகுத்தறிவு வாதம்பேசி, மூடநம்பிக்கைகளை விரட்டி, வாழ்வியல் பண்புகளைப் பின்பற்றி மதிப்புநிலை அடைந்த மனிதர்கள் சிறுபான்மையே. மக்கள் இனம் பெரும்பாலும் ஏதாவதொரு சமயத்தைச் சார்ந்து தான் வாழ்கிறது. எனவே விரும்பியோ, விரும்பாமலோ அச்சமயம் கூறுகின்ற மதிப்புகளை வாழ்வில் பின்பற்றவேண்டிய கட்டாயம் பலருக்கு ஏற்படுகிறது மதிப்புகளைப் பற்றிய அறிவு ஒருவனுக்கு இல்லையானால் மெய்ப்பொருள் அறிவைப் பெறமுடியாது.

அவ்வகையில் கிறித்தவ மதிப்புகளைத் திருஅருட்பாவுடன் ஒப்பிட்டுக் காணல் அவசியம், பரிசுத்த வேதாகமம் என்ற கிறித்தவ மறைநூல் காட்டும் மதிப்புகள் மட்டுமே இங்கு கிறித்தவ

மதிப்புகள் எனக் கொள்ளப்பட்டுள்ளன. முதலில் மதிப்புகளைப் பற்றிய பொதுவான கருத்துக்களை ஆராய்ந்து பின்னர் ஒப்பிடுவது நல்லது.

## மதிப்பு - விளக்கம் :

மதிப்பு என்பதற்கு பல்வேறுபட்ட விளக்கங்கள் தரப் பட்டுள்ளன. அவை பின்வருமாறு :

## தத்துவக் கலைக்களஞ்சியம் கூறுவது :

அ. மதிப்பு என்பது நல்லது, விரும்பத்தகுந்தது, தகுதி வாய்ந்தது என்பன போன்ற சொற்களின் பெயர்ச் சொல் வடிவம் எனலாம்.

ஆ. பரந்தநிலையில் மதிப்பு என்ற சொல்லுக்குச் சரியானது, நற்பண்பு, அழகு, உண்மை, கடப்பாடு மற்றும் தெய்வீகம் எனப் பொருள்கொள்ளலாம்.

இ. ஒரு எண்கதிர்க் கோட்டை நாம் எடுத்துக் கொண்டால் பூஜ்ஜிய மதிப்பிற்கு வலப்பக்கம் அமைந்த மிகை முழுக்களை (+) நாம் மதிப்பு என்பதற்கு உதாரணமாகக் கொள்ளலாம். அதேபோல் பூஜ்ஜியத்திற்கு இடப்பக்கமாக அமையும் குறை முழுக்களை (-) நாம் மதிப்பிலியாகக் கொள்ளலாம்.

ஈ. காலநிலை முழுமையையும் காட்டும் ஓர் அளவீடு போலவும், மதிப்பு விளங்குகிறது. அதில் நேர்மதிப்பு (Positive Value) எதிர்மதிப்பு (Negative Value) என இருபிரிவுகளாக உள்ளதைப் போல மதிப்பு என்பதற்கும் இரு பரிமாணங்களைக் கொள்ளலாம்". (Encyclopedia of Philosophy, Paul Edwards)

## அறம் மற்றும் சமயக் கலைக்களஞ்சியம் குறிப்பிடுவது

"மதிப்பு என்பது நேர்க்கோடு (Positive line) மற்றும் எதிர்க்கோடு (Negative line) போல் தோற்றமளிக்கிறது. அவை பொருள்குறித்துத் தோன்றும் மனப்பாங்கு எனவும், அவைகளில் முதலில் கூறியதை ஏற்றுக் கொள்ளுதல் அல்லது மறுத்தல், தொடர்ந்து செயல்படல் அல்லது விட்டு விலகுதல் என்பனவாகவும், இறுதியில் கொடுக்கப்பட்டதை ஈர்த்துக் கொள்ளுதல் அல்லது மறுதலித்தல் எனவும் கொள்ளலாம்".

## கோலியர்ஸ் கலைக்களஞ்சியம் தரும் விளக்கமாவது :

"பொருள்களிடம் ஏதாவது ஆர்வம் காட்டும்போது அவை மதிக்கத்தக்கவையாகின்றன."

**ரால்ஃப் பார்ட்டன் பெரி தரும் விளக்கம் :**

"நாடத் தகுந்தது எதுவும் மதிப்பு" (Colliers Encyclopedia P-164)

**தனராசு தரும் விளக்கம் :**

"உளதாம் தன்மை (Being) உடைய அனைத்தும் நலம் என்றாலும், அந்த நலம் மனிதனைக் கவர்ந்து தன்னை நாடச் செய்யும் பொழுது அது மதிப்பு ஆகும். ஆதலின் விரும்பத்தக்கது நலம் எனின், போற்றப்படுவது மதிப்பு எனலாம். நலத்தை அறிந்து ஏற்றுக்கொள்ளும் போது அது மதிப்பாகிறது." (தமிழ் இதழ்களில் மதிப்புகள், ப-14, தனராசு.அ)

மேற்குறித்த விளக்கங்களினின்றும் பின்வரும் கருத்துக்கள் பெறப்படுகின்றன. மதிப்பு என்பது,

1. நல்ல விரும்பத்தகுந்த தகுதி வாய்ந்த பண்பு
2. நற்பண்பும் அழகும் உண்மையும் கடப்பாடும் உடைய தெய்வீகப் பண்பு
3. மதிப்பு மிகை, குறை என இருவகைப்படும்
4. மதிப்பீடு நேர்மதிப்பு, எதிர்மதிப்பு என இரு விரிவாகும்.
5. மதிப்பு என்பது ஒரு பொருளைக் குறித்த மனப்பாங்கு
6. நாடத் தகுந்தது.
7. ஆர்வத்தின் விளைவு
8. நலம் நாடி அறிந்து ஏற்றுக்கொள்ளல்.

**மதிப்பும் மனிதனும் :**

மதிப்பு-மனிதன் என்ற சமன்பாடு மானுடத்தை மேம்பாட்டையச் செய்யும். மனித நேயத்தை வளம்பெறச் செய்யும். அச்சமன்பாடு மனித வாழ்வைச் செம்மையாக்க உறுதுணை நிற்கும். "மனிதனுக்கு மட்டுமே புலப்படக்கூடியது மதிப்பு எனலாம். சிலவற்றை உயர்ந்தவை, மேலானவை என்றும் அவற்றுக்கு எதிரானவற்றைத் தாழ்ந்தவை, இழிந்தவை என்றும் கருதுகிறான். உண்மை மேலானது என்று எண்ணும் மனிதன் பொய்மை இழிவானது என்ற மதிப்பிடுகிறான். தேர்ந்தெடுக்கும் உரிமை இருக்கும்போது ஒன்றினைச் சரியானது என்றும், பிறிதொன்றினைத் தவறானது என்றும் மனிதன் கணிக்கிறான்." (மேலது)

அவ்வாறு அவன் பகுத்தறிவது ஏன்? உயர்ந்தது தாழ்ந்தது என்று எப்படிக் குறிப்பிட முடியும்? தேர்ந்தெடுக்கும் உரிமையில்

பிறழ்வு நேரும்போது மதிப்புடைய ஒரு பொருள் மதிப்பற்றதாகவும், மதிப்பிலி ஒன்று மதிப்புடையதாகவும், நேர்மதிப்பு எதிர்மதிப்பாகவும், எதிர்மதிப்பு நேர்மதிப்பாகவும் மாறிவிடச் சாத்தியக் கூறுகள் மிகுதியும் உண்டு. அப்போது மனிதனை அம்மதிப்புகள் எவ்வகைகளில் நிறைவு செய்கின்றன எனக் கண்டுவிட்டால் தெளிவு ஏற்படும். "மனிதனை நிறைவு செய்வது மதிப்பு என்று கூறுவது இரண்டு வகையில் பொருந்தும், முதலாவது வகை, அவனது ஆசை, தேவை முதலியவற்றை நிறைவேற்றித் திருப்தி அளிப்பது (Satisfaction) ஆகும். இரண்டாவது வகை மதிப்பு மனிதத் தன்மையை முழுமையாக்குவது அல்லது உயர்த்துவது ஆகும்".

மனிதனை முழுமையாக்குவதே மதிப்புகள் எனக் கொண்டால் எவையெல்லாம் மதிப்புகள் என்று நிர்ணயம் செய்வது சற்றுக் கடினமானது. காலம், தேசம், இடம், இனம், செயல் ஆகியவற்றையெல்லாம் கடந்து உலக மக்கள் முழுமைக்குமான மதிப்புகளை வரையறுத்துத் தரமுடியுமா என்ற முயற்சியில் அமெரிக்காவைச் சேர்ந்த மூவர் 1982-ம் ஆண்டு முயன்றனர். நியூயார்க்கில் அவர்கள் செய்த ஆய்வின் மூலம் எண்பத்து எட்டு வகை மதிப்புகளை மதிப்பு வளர்ச்சி (Value development) என்ற நூலில் பட்டியலிட்டுக் காட்டியுள்ளனர். அம்மதிப்புகளை தனிமனித மதிப்பு, சமுக மதிப்பு என இருவகையில் பிரித்துள்ளனர். தனி மனித மதிப்புகளில் சாதனை, மெய்ம்மை, கபடமின்மை, தகுதி, எளிமை, நன்றியுணர்வு, உடலோம்பல், தன்னம்பிக்கை, கட்டுப்பாடு, தொழில் சோர்வுறாமை போன்றவைகளைச் சிறப்பாகக் கூறலாம். சமூக மதிப்பில் கூட்டுறவு, தொடர்பு, தோழமை, சமநிலை, இணக்கம், உடைமை, தாராள மனப்பான்மை, அவையில் அமர்தல் போன்றவைகளைக் குறிப்பிடலாம்.

## மதிப்பு வகைகள் :

மதிப்பின் விளக்கத்தில் கருத்து வேறுபாடு அமைந்திருப்பதைப் போன்றே மதிப்பை வகைப்படுத்துவதிலும் காணப்படுகிறது.

## பவுல் ரோபிக்செக் கூறும் வகைமை:

"1. முற்றிலும் பொருள் சார்ந்த மதிப்புகள் (Purely Subjective Values)

2. தொடர்புடைய மதிப்புகள் (Relative Values)

3. சரியான மதிப்புகள் (Absolute Values)" (Ethical Values in the Ages of Science P-24)

**சமயம் மற்றும் அறக் கலைக்களஞ்சியம் காட்டும் வகைமை:**

"1. இனிமை பற்றியஇன்ப மதிப்புகள் (Hedonic Values)
2. அழகு சார்ந்த முருகியல் மதிப்புகள் (Esthetic Values)
3. பயன்பாட்டு மதிப்புகள் (Utility Values)
4. அற மதிப்புகள் (Ethical Values)
5. சமய மதிப்புகள் (Religious Values)
6. தருக்க மதிப்புகள் (Logic Values)" (P-586)

**அலிஜன்ட்ரோ கோர்ன் குறிப்பிடும் வகைமை :**

"1. பொருளாதார மதிப்பு (Economic Value)
2. இயல்புணர்வு (Instinctive Value)
3. காமஞ்சார் மதிப்பு (Erotic Value)
4. முதன்மை மதிப்பு (Vital Value)
5. சமூக மதிப்பு (Social Value)
6. சமய மதிப்பு (Religious Value)
7. அற மதிப்பு (Ethical Value)
8. தருக்க மதிப்பு (Logical Value)
9. முருகியல் மதிப்பு (Aesthetic Value)" (Dictionary of Philosophy and Religion P-604)

**ஆய்வேடு காட்டும் வகைமை :**

தமிழ் இதழ்களில் மதிப்புகள் என்ற தலைப்பில் தனராசு என்பவர் ஆய்வு மேற்கொண்டுள்ளார். அதில்,

"1. புலன் நுகர் மதிப்புகள் (Sensible Values)
2. உடலியல் மதிப்புகள் (Physical Values)
3. புலமை மதிப்புகள் (Intellectual Values)
4. உளவியல் சார்ந்த மதிப்புகள் (Psychological Values)
5. பொருளாதார மதிப்புகள் (Economic Values)
6. அழகுணர் மதிப்புகள் (Esthetic Values)
7. அரசியல் மதிப்புகள் (Political Values)
8. பண்பாட்டு மதிப்புகள் (Cultural Values)
9. அற மதிப்புகள் (Moral Values)
10. சமய மதிப்புகள் (Religious Values)".

மேற்கூறியவற்றுள் வகைமை முறைகளிலும் சமய மதிப்புகள் இடம்பெறுவதைப் பார்க்கிறோம். தனிமனித, சமுதாய மேம்பாட்டிற்காகச் சமயங்கள் பணியாற்றியுள்ளன. திறம்பட வாழ்வதற்குரிய மதிப்புகள் இன்னதென வரையறுத்துத் தந்துள்ளன. "சமயம் மனிதனிடம் அன்பு, ஒருமைப்பாடு, தன்னம்பிக்கை போன்ற பண்புகளை வளர்க்கிறது. ஒரு சமுதாயத்தின் உறுப்பினர்கள் அவர்களுடைய சமயம் சுட்டிக்காட்டும் நெறிமுறைகளையும் (Norms) விழுமியங்களையும் (Values) முறையாகப் பின்பற்றி நடப்பதால் மட்டுமே நிலை பெற முடியும். இந்நிலையில் வாழும் நெறிகளை இவை இன்றியமையாதது எனச் சுட்டுக்காட்டுவதோடு அதனைக் கண்டிப்புடன் ஏற்றுச் செயல்பட வைப்பதன் மூலம் சமுதாயத்திற்குச் சமயம் பெரும் பங்காற்றுகிறது. சமுதாய அமைப்பில் கடுமையான மாற்றங்கள் ஏற்படும்போது அதன் கட்டுக்கோப்பு சிதறாமல் இருக்கச் சமயம் துணை நிற்கிறது. எனவே சமுதாயத்தின் சீரான நடைமுறைக்குச் சமயம் ஆணிவேராக இருக்கிறது" (இளங்கோவன்.ம, திருவருட்பா திருக்குறள் ஒப்பீடு ப-316) அவ்வகையில் பெரும்பான்மை மக்களால் பின்பற்றப்படும் சமயமான கிறித்தவ சமய மதிப்புகள் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன. அவற்றோடு திருஅருட்பா காட்டும் மதிப்புகளும் ஒப்பியல் நோக்கில் ஆராயப்பட உள்ளன.

## கிறித்தவ மதிப்புகளும் திருஅருட்பாவும் :

"கிறித்தவ மதிப்பீடுகள் கிறித்துவின் மதிப்பீடுகளே" என்பார் எஸ். மரிய அருள் இன்பராஜ். இயேசு கிறிஸ்து கூறிய மதிப்புகளையும், கிறித்தவ மறைநூலான பரிசுத்த வேதாகமம் குறிப்பிடுகின்ற மதிப்புகளையும் கிறித்தவ மதிப்புகளாகக் கொள்ளலாம். கிறித்தவம் குறிப்பிடும் பத்துக்கட்டளைகளும் மதிப்பீடுகளின் தொகுப்பு என்ற எண்ணத்தோடு அவற்றையும் திருஅருட்பாக் கருத்துக்களோடு ஒப்புநோக்கி இப்பகுதி ஆராயவிருக்கிறது.

### பத்துக் கட்டளை :

கிறித்தவம் பத்துக்கட்டளைகளைப் பின்பற்றவேண்டும் என்று குறிப்பிடுகிறது.

### கிறித்தவப் பத்துக் கட்டளைகள்:

"1. மெய்யான ஒரே கடவுளை வணங்க வேண்டும்.

2. கடவுள் பெயரை வீணாகப் பயன்படுத்தக்கூடாது
3. ஞாயிறு ஓய்வுநாளாகக் கருதப்படுதல் வேண்டும்
4. பெற்றோரைப் பேணல்
5. கொலை செய்யாதிருத்தல்
6. காம இச்சை தவிர்த்தல்.
7. திருடாதிருத்தல்
8. பொய்சாட்சி சொல்லாதிருத்தல்
9. பிறர் மனைவியை விரும்பாதிருத்தல்
10. பிறர்உடைமையை விரும்பாதிருத்தல்" (Ethical and Spiritual Dimensions Catholicism P-914)

என்பன கிறித்தவம் வலியுறுத்தும் பத்துக் கட்டளைகளாகும்.

**திருஅருட்பா :**

மேற்கூறிய பத்து வகைக் கட்டளைகளில் காமம், கொலை, களவு, பொய் ஆகியவற்றை அருட்பாவும் மறுத்துரைக்கும். அவற்றோடு கள்ளையும் சேர்த்து பஞ்சமா பாதகங்கள் என்பார் இராமலிங்கர்.

"கள் காமம், கொலை, களவு, பொய் இவ்வைந்தும் கொடிய துக்கத்தை உண்டுபண்ணும், இவ்வைந்திலும் கொலை விசேஷ பாவம். எனினும், கள்ளுண்டவனுக்குக் காமம் உண்டாகாமலிருக்காது. கொலை செய்யத் துணிவு வராமலிராது. களவு செய்யாமலிரான், பொய் பேச அஞ்சான், ஆகையால் இந்த ஐந்தையும் ஒழிக்கவேண்டியது அவசியம். இதில் ஒன்றை அடைந்தவனானாலும் அவனை மற்றவை தொடராமலிரா". (உபதேசக் குறிப்புகள்) என்று எச்சரிப்பது அருட்பாவாகும்.

கிறித்தவக் கட்டளைகளில் ஐந்து முதல் பத்து வரை உள்ள ஆறுகட்டளைகளையும் வலியுறுத்துவதாகவே அருட்பாவின் பஞ்சமாபாதகங்கள் விளங்குகின்றன. இரண்டாவது மூன்றாவது கட்டளைகளைப் பற்றிய குறிப்புகள் அருட்பாவில் இல்லை.

முதல் கட்டளையாகிய மெய்யான ஒரே கடவுளை வணங்க வேண்டும் என்பதில் அருட்பாவும் கருத்து ஒப்புமை கொண்டுள்ளது. அருட்பாவின் இறுதியில் வரும் சன்மார்க்க உலகின் ஒருமைநிலை என்ற தலைப்பில் அமைந்துள்ள பாடல்கள் கடவுள் ஒருவரே என்ற கருத்தை வலியுறுத்தவன. ஒரு தெய்வக் கோட்பாட்டை எடுத்துரைக்கிறது. அந்த ஒன்றை சிவமான பொருளும் அனைத்துச் சமய மக்களும் ஏற்றுக் கொள்ளக்கூடிய

"அருட்பெருஞ்சோதி ஆண்டவர்" (சன்மார்க்க உலகின் ஒருமை நிலை) எனக் காட்டியுள்ளது அருட்பா.

"பெற்றோரைப் பேணல்" என்ற நான்காம் கட்டளையை வலியுறுத்தும் செய்திகள் அருட்பாவிலும் உண்டு. தந்தை தாய் மொழி தவறக்கூடாது என்ற அறிவுரையை அருட்பாவின் உரைநடைப்பகுதி வலியுறுத்தும். "தாம் எழுதிய மனுமுறை கண்ட வாசகத்தில் தந்தை தாயை இறுதிவரைக் காப்பாற்ற இயலாத இளவரசன் மரண தண்டனையை ஏற்க வருந்துவதாகக் காட்டியுள்ளார் இராமலிங்கர்". அதனால் பெற்றோரைப் பேணல் அவர்க்கும் உடன்பாடு.

மூன்றாவது கட்டளையாகிய ஓய்வுநாள் என்பது குறித்த செய்தி அருட்பாவில் இடம்பெறவில்லை.

கள் என்பது மேனாட்டார்க்கு உணவு மற்றும் இயேசுவின் இரத்தமே திராட்சை ரசம் என்ற குறிப்புப்பொருளும் அதற்கு இருப்பதால் சமயச் சடங்கிலும் கிறித்தவர் பருகுவதுண்டு. ஆனால், இராமலிங்கர் கள்ளுண்ணாமையைப் பெரிதும் வற்புறுத்துவார். கள்ளே பிற பாவச் செயல்களுக்கும் காரணம் என்பார்.

கிறித்தவப் பத்துக்கட்டளைகளும், திருஅருட்பா குறிப்பிடும் பஞ்சமா பாதகங்களும் இணைப்போக்கில்தான் உள்ளன. இரண்டுமே மனிதர்களை நல்வழிப்படுத்தும் நன்மதிப்புடையோராக மாற்றும்.

## கீழ்ப்படிதல் :

கீழ்ப்படிதல் கிறித்தவ மதிப்புகளில் முக்கிய இடம் வகிப்பது. கடவுளின் சித்தத்திற்குத் தன்னை அர்ப்பணித்தலே கீழ்ப்படிதலாகக் கிறித்தவம் கருதுகிறது.

கிறித்தவம் : இறைத் தந்தையின் திட்டத்திற்கு இயேசு முற்றிலும் அடிபணிந்தார்.

"என் பிதாவே, இந்தப் பாத்திரம் என்னை விட்டு நீங்கக்
கூடுமானால் நீங்கும்படிச் செய்யும். ஆகிலும் என்
சித்தத்தின் படியல்ல, உம்முடைய சித்தத்தின் படியே ஆகக்
கடவது என்று ஜெபம் பண்ணினார்" (பரிசுத்த வேதாகமம் மத்26.39)

மரண வாயிலில் நின்று அவ்வாறு செபித்த இயேசுவின் மனநிலையே கீழ்ப்படிதல்.

**திருஅருட்பா :**

*"... ஆவிஉடல் பொருள் எல்லாம் அப்ப நின் சுதந்தரம் அன்றோ"*
*(பெற்ற பேற்றினை வியத்தல்)*

என்ற வரிகள் இறைக்குக் கட்டுப்பட்டுக் கீழ்ப்படிந்ததைத் தெரிவிக்கின்றன. எனது விருப்பப்படி அன்று உமது விருப்பப்படியே ஆகட்டும் என்ற கிறித்தவக் கீழ்ப்படிதல், உடல் பொருள் ஆவியை ஒப்புக் கொடுத்த அருட்பாக் கருத்தோடு ஒத்துள்ளது.

**சாந்தமும் தாழ்ச்சியும் :**

**கிறித்தவம் :**

"நான் சாந்தமும் மனத்தாழ்ச்சியும் உடையவன் என்று என்னிடமிருந்து கற்றுக் கொள்ளுங்கள்" என்கிறார் இயேசு. ஆகவே தன்னையே வெறுமையாக்கும் நிலை கிறித்துவ மதிப்பீடுகளில் ஒன்றாகிறது. இதை வலியுறுத்தும் கிறிஸ்து கூறுகிறார். "எளிய மனத்தோர் பேறு பெற்றோர் ஏனெனில் விண்ணரசு அவர்களதே. எவனொருவன் கடவுளுக்கு முன் தன் வெறுமை நிலையை உணர்கிறானோ அவனே எளிய மனத்தினன்"

**திருஅருட்பா:**

*"ஈரமும் அன்பும் கொண்டு இன்னருள் பெற்றேன்" (பந்தாடல்)*

*"நாயினுங் கடையேன் ஈயினும் இழிந்தேன்*
*ஆயினும் அருளிய அருட்பெருஞ் சோதி" (அகவல்)*

என்பதில் கடவுள் முன் தன் வெறுமையை உணர்ந்த மனநிலை புலனாகிறது. சாந்தமும் தாழ்ச்சியும் வேண்டுமென்கிறது கிறித்தவம். கோபத்தையும், கடுஞ்சொல்லையும் தவிர்க்கக் கூறுகிறது அருட்பா. அதனோடு ஈரமும் அன்பும் கொண்டு இன்னருள் பெற்றேன் என்றும் கூறும். ஈரமும் அன்பும் மன அமைதிக்கும், சாந்தத்திற்கும், நிறைவிற்கும் இடமளித்தால் இன்னருள் நிறைந்த அமைதி நிலை கிட்டும்.

**இரக்கம் :**

இரக்கம் என்பது மனிதநேயத்திற்கு அடிப்படையாக விளங்கும் பண்பு.

**கிறித்தவம் :** "இரக்கமுடையோர் பேறு பெற்றோர். ஏனெனில் அவர்கள் இரக்கம் பெறுவர். இயேசு சென்றவிடமெல்லாம் மனமிரங்கினார். மனதுருகி நோய் பிணியெல்லாம்

மக்களிடமிருந்து அகற்றினார். இயேசுவின் சொல். செயல் எல்லாம் அவருடைய இரக்கப் பண்பைத் தெளிவாக்குவன"

திருஅருட்பா:

"வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடினேன்

வீடுதோறிரந்தும் பசியறாதயர்ந்த வெற்றரைக் கண்டுளம் பதைத்தேன்" (பிள்ளைப் பெருவிண்ணப்பம்)

என்பன இரக்கத்தை வலியுறுத்தும் வாசகங்கள். இயேசுவின் சொல், செயல் எல்லாம் இரக்கத்தை வலியுறுத்தியது போலவே அருட்பா முழுமையிலும் இராமலிங்கரின் உயிரிரக்கக் கோட்பாட்டின் பரிமாண வளர்ச்சிகளைக் காணலாம். ஜீவ காருண்யமே மோட்ச வீட்டின் திறவுகோல் என்ற இராம லிங்கரின் கோட்பாட்டிற்கும் உயிரிரக்கமே அடிப்படையானது. அவ்வுயிர்இரக்கமுடையயோர் பெரும் சிறப்பையும் எடுத்துக் கூறுகிறார். "சீவ காருண்ய ஒழுக்கமுடையவர்களாகிச் சீவர்களைப் பசியென்கிற அபாயத்தினின்றும் நீங்கச் செய்கின்ற உத்தமர்கள், எந்தச் சாதியாராயினும், எந்தச் சமயத்தாராயினும், எந்தச் செய்கையையுடையவர்களாயினும், தேவர், முனிவர், சித்தர், யோகர் முதலிய யாவராலும் வணங்கத்தக்க சிறப்புடையவர்கள் என்று சர்வ சக்தியையுடைய கடவுள் சாட்சியாக சத்தியஞ் செய்யப்படுமென்று அறியவேண்டும்". (ஜீவகாருண்ய ஒழுக்கம்)

என்ற திருஅருட்பா வரிகள் கிறித்தவத்திற்கு விளக்கமாக உள்ளது. இரக்கமுடையோர் பேறு பெற்றோர் என்றது கிறித்தவம். எத்தகைய பேறு என்பதனை அருட்பா சிறப்பித்துக் கூறுகிறது.

**கடவுளைச் சார்ந்திருத்தல் :**

எப்போதும் சிந்தனை செயல் ஆகியவற்றில் கடவுளைச் சார்ந்திருந்து கடவுள் செயல்களைப் பின்பற்றுதல் அவசியம்.

**கிறித்தவம்** : கடவுளைச் சார்ந்திருத்தல். அவர் மேல் நம்பிக்கை வைத்தல் ஆகியவற்றை வேதாகமம் குறிப்பிடும். கிறித்துவின் மதிப்புகளைக் கொண்டிருந்தால் கிறிஸ்துவோடு கிறிஸ்துவாக வாழ முடியும் என்று நம்பினர். அதையே இயேசுவின் சீடராகிய சின்னப்பர். "நான் கிறிஸ்துவைப் பின்பற்றுவதுபோல, நீங்கள் என்னைப் பின்பற்றுகிறவர்களாயிருங்கள் " (பரிசுத்த வேதாகம் - கொரிந்தியர் - 11-1) என்றார்.

இயேசு கிறிஸ்துவும் அதே கருத்தைக் குறிப்பிடுகிறார். "பரலோகத்திலிருக்கிற உங்கள் பிதா பூரண சற்குணராயிருக்கிறது போல, நீங்களும் பூரண சற்குணராயிருக்கக் கடவீர்" (மத்தேயு-5-48)

"உங்கள் பிதா இரக்க முள்ளவராயிருக்கிறதுபோல நீங்களும் இரக்கமுள்ளவர்களாயிருங்கள்". (லூக்கா 6.36)

திருஅருட்பா : இறைவன் கருணை வடிவினன். அவன் அருட்பெருஞ்சோதி. நாமும் அக்கருணை நெறியைப் பின்பற்றினால் நலம் பெறலாம். "இத்தருணம் ஆண்டவர் எல்லாவற்றையும் நீக்கி எல்லோரும் மேலான இன்பத்தை அடையும் பொருட்டு, முடிவான இன்பானுபவத்திற்குச் சாதக சகாயமான திருவருள் மகாவாக்கியத் திருமந்திரத்தைத் தமது உண்மையை வெளிப்படக் காட்டும் மகாமந்திர வாக்கியத்தை எனக்கு வெளியிட்ட அவ்வண்ணம். எனது மெய்யறிவின்கண் அனுபவித்தெழுந்த உண்மையறிவனுபவானந்த இன்பத்தை நீங்கள் எல்லோரும் என்போல் ஐயம் திரிபு மயக்கம் இன்றி அடைய என்னுள்ளே எழுந்து பொங்கிய ஆன்ம நேய ஒருமைப்பாட்டு உரிமையைப் பற்றிக் குறிப்பித்தேன் குறிப்பிக்கின்றேன், குறிப்பிப்பேன். நமது ஆண்டவர் கட்டளையிட்டது யாதெனில், நமக்கு முன் சாதனம் கருணையானதினாலே, ஆண்டவர் முதற்சாதனமாக,

"அருட்பெருஞ்சோதி அருட்பெருஞ்சோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்சோதி"

என்னும் திருமந்திரத்தை வெளிப்படையாக எடுத்துக்கொண்டார். தயவு, கருணை, அருள் என்பவை ஒரு பொருளையே குறிக்கும். ஆதலால் பெரிய தயவுடைய அறிவே பூரண இன்பமாம். இவ்வண்ணம் சாதனம் முதிர்ந்தால், முடிவான இன்பானுபவம் பெறுவதற்குத் தடையில்லை" (பேருபதேசம்) என்பார் இராமலிங்கர்.

தெய்வம் சொன்னவாறு தாம் நடப்பதைப் போல உலகோரையும் பின்பற்றச் செய்து ஆன்ம ஈடேற்றம் பெறுதற்காகக் கடவுளைச் சார்ந்திருக்கும் படி கிறித்தவமும் அருட்பாவும் வற்புறுத்துகின்றன.

**பகைவரை மன்னித்தல் :**

அன்பின் வளர்ச்சி நிலையே பகைவரை மன்னித்தலாகும். அன்பு அருளாக மாறுதற்கு இம்மதிப்புத் துணை செய்கின்றது.

**கிறித்தவம் :**

அ. "உனக்கு அடுத்தவனைச் சினேகித்து, உன் சத்துருவைப் பகைப்பாயாக என்று சொல்லப்பட்டதைக் கேள்விப்

பட்டிருக்கிறீர்கள். நான் உங்களுக்குச் சொல்கிறேன். உங்கள் சத்துருக்களைச் சிநேகியுங்கள். உங்களைச் சபிக்கிறவர்களை ஆசிர்வதியுங்கள். உங்களைப் பகைக்கிறவர்களுக்கு நன்மை செய்யுங்கள். உங்களை நிந்திக்கிறவர்களுக்காகவும் உங்களைத் துன்பப்படுத்துகிறவர்களுக்காகவும் ஜெபம் பண்ணுங்கள்.

ஆ. இப்படிச் செய்வதினால் நீங்கள் பரலோகத்திலிருக்கிற உங்கள் பிதாவுக்குப் புத்திரராயிருப்பீர்கள் அவர் தீயோர் மேலும் நல்லோர் மேலும் தமது சூரியனை உதிக்கப் பண்ணி, நீதியுள்ளவர்கள் மேலும் அநீதியுள்ளவர்கள் மேலும் மழையைப் பெய்யப் பண்ணுகிறார்" (மத்தேயு - 5:43)

இ. "நண்பர்களிடம் மட்டுமன்றி பகைவனிடமும் நேசங்கொள். நீ நடக்கும் வழியில் முள்ளைப் போடுபவன் முன் நீ பூவைப் பரப்பு".

"ஒரு கன்னத்தில் அறைந்தால் மற்றொரு கன்னத்தையும் காட்டு." இக்கருத்துக்கள் யாவும் பகைவனுக்கு அருள்வாய் நன்னெஞ்சே என்ற தொடரையே நினைவுபடுத்தும். அது அன்பு அருளாகி முதிரும் நிலையில் அமைய முடியும்.

**திருஅருட்பா :**

திருஅருட்பா உயிர்க்கொலையும் புலைப்புசிப்பும் உடையாரை உறவினத்தார் என்று ஏற்றுக்கொள்வது இல்லை. இருந்தாலும் அப்புறவினத்தார் ஆபத்தில் வருந்தும்போது, அதைப் பார்த்து உகவேல். வருத்தம் துன்பம் பயம் தீர்த்துவிடு என்று அங்ஙனம் பரிந்துரைத்தவனும் குருவாகிய இறைவனே என்பார் இராம லிங்கர். மேலும், உலக மக்கள் அனைவரையும் ஒன்றாகக் கருதி ஆன்ம நேய ஒருமைப்பாட்டில் பகை மறந்து வாழ்வதையும் வற்புறுத்துகிறார்.

"இங்கே இருக்கிற ஜனங்கள் மட்டில் மாத்திரமல்ல. உலகத்திலிருக்கிற எல்லா ஜனங்களையும் குறித்தே விண்ணப்பித்துக் கொண்டேன். ஏன் அப்படி ஆண்டவரிடத்தில் விண்ணப்பித்துக் கொண்டேன் என்றால், எல்லோரும் சகோதரர்களாதலாலும், நான் அங்ஙனம் ஆன்ம நேய ஒருமைப்பாட்டுரிமை வைத்துக் கொண்டிருக்கிறேன். நானும் ஆண்டவரிடத்தில் இவ்வுலகத்தில் உள்ள எல்லா ஜீவர்களும் நன்மையடையப் பிராத்தித்தும், ஆண்டவரிடத்தில் கேட்டுக்கொண்டும் வருகின்றேன். ஆதலால் நீங்கள் அப்படிச் செய்துகொண்டிருங்கள்" (பேருபதேசம்) என்கிறது அருட்பா.

மேற்கூறிய கருத்துக்களை நோக்கும்போது நம்மைச் சார்ந்தவர் மட்டுமன்றி அயலாரது நன்மை குறித்தும் ஆண்டவனிடம் பிரார்த்தனை செய்யுமாறு கிறித்தவமும் அருட்பாவும் வலியுறுத்துவதை அறியலாம்.

**நீதி :**

நெறிமுறைகளின்படி வாழ்தலே நீதியுடன் வாழ்தலாம். நல்லது போற்றல், அல்லது விலக்கல் என்பனவும் நீதியின் பாற்படும்.

**கிறித்தவம் :**

*"நீதியின்மேல் பசிதாகமுள்ளவர்கள் பாக்கியவான்கள் அவர்கள் திருப்தியடைவார்கள்" (மத்தேயு- 5-6)*

**திருஅருட்பா:**

அ. "...எவ்வுயிரும் எவ்விதத்திலும் யாதொரு குறையுமில்லாமல்
வாழ்ந்து மகிழ்ந்திருக்க, நீதியுடன் முறை தவறாது...."

ஆ. "தன்னைக் கொடுத்தாவது தருமத்தைத் தேட வேண்டுமென்னும்
பெரியோர் வார்த்தையைப் பிடிப்பது சற்குணமுடை
யோர்க்குத் தகுதி..." (மனுமுறைகண்ட வாசகம்)

நீதியின்பால் பற்றுக்கொண்டு, தருமத்தைத்தேடி வாழ்தல் என்பது நிறைவு தரும் வாழ்வாக மாறும் என்றே வலியுறுத்துகின்றன.

**கூடா ஒழுக்கம் - தவிர்த்தல் :**

சமய வேடம் தாங்கி, சமய மரபுக்கு மாறாக வாழ்வோர் கூடா ஒழுக்கத்தவர். புதல் மறைந்து வேட்டுவன் புள்சிமிழ்ந்தற்றே என்ற குறளும் அதனையே வலியுறுத்துகிறது.

**கிறித்தவம் :**

"கள்ளத் தீர்க்கதரிசிகளுக்கு எச்சரிக்கையாயிருங்கள். அவர்கள் ஆட்டுத் தோலைப் போர்த்துக்கொண்டு உங்களிடத்தில் வருவார்கள். உள்ளத்திலோ அவர்கள் பட்சிக்கிற ஓநாய்கள்" (மத்தேயு 7-15)

**திருஅருட்பா :**

"சமயந் தவிர மதங்களில் உள்ள வேதாந்தி சித்தாந்தியென்று பெயரிட்டுக் கொண்ட பெரியவர்களும் உண்மையறியாது,

சமயவாதிகளைப் போலவே ஒன்று கிடக்கஒன்றை உளறுகிறார்கள். ஆதலால் நீங்கள் அஃது ஒன்றையும் நம்ப வேண்டாம். எவைகளிலும் தெய்வத்தைப் புறமுகமாகப் புலப்படச் சொல்லவில்லை." (பேருபதேசம்)

என்று சமயப்போர்வையில் ஒளிந்து கொண்டு சமூகத்திற்கெதிரான காரியஞ்செய்பவர்களைக் கண்டு விலக்கக் கூறப்பட்டுள்ளன.

## கோபங் கொள்ளாதிருத்தல் :

கோபம் என்பது மூர்க்கத் தன்மையின் பிறப்பிடம். கோபம் கொண்ட மனிதர் குணவான்களாகக் கருதப்படார். சமூக உறவை முறித்து விடும் தன்னையும் தாழ்த்தும் "சினமென்னும் சேர்ந்தாரைக் கொல்லி" என்பார் வள்ளுவர். எனவே கோபங் கொள்ளாதிருத்தல் அவசியமானது.

### கிறித்தவம் :

அ. "தன் சகோதரன் ஒருவன்மீது கோபம் கொள்ளுபவன் கடவுளின் தண்டனைக்கு உள்ளாவான்.

ஆ. நீ பிறரை இம்சித்து, தண்டித்து அடக்கலாமென்று எண்ணாதே. உனக்கு எவ்வளவு கோபம் வந்தாலும் இன்னொருவரை அடிப்பது உதைப்பது என்ற எண்ணமே உனக்கு வேண்டாம். உனக்கு ஒருவர் இழைக்கும் தீங்கிற்குப் பிறதியாக நீ தீங்கு செய்யாதே" (ஸ்ரீ கிருஷ்ண தத்பட் - கிறித்தவம் ப-18)

என்கிறது கிறித்தவம்.

### திருஅருட்பா :

சினத்தின் இயல்பைக் கூறி உள்ளமும் உடம்பும் சினத்தால் சிதைவுறுவதை அருட்பா எடுத்துரைக்கிறது.

"வெகுளி, மீசை துடித்தல், கண்சிவத்தல், கை கால் உடம்பு துடித்தல் முதலாகியவற்றை வெளிப்படையாகக் காட்டுதல். இதுவும் ஆயுளை நஷ்டம் செய்யும். ஆகையால் எந்த வகையிலுங் கோபங் கூடாது. அதை அவசியம் ஒழிக்கவேண்டியது" என்று உரைநடைப்பகுதியில் குறிப்பிடுகிறார் இராமலிங்கர்.

தத்துவ வெற்றி எனும் பாடற்பகுதியில், "கோபமெனும் புலைப்பயலே" என்று சினத்தோடு உரைப்பார்.

கோபங்கொள்ளாதே, கொண்ட கோபத்தினால் பிறரைத் துன்புறுத்தாதே என்று குறிப்பிடுகிறது. கிறித்துவம். அக்கோபத்

தினால் உடலில் தோன்றும் மாற்றங்களையும், தன்மைகளையும் அருட்பா எடுத்து உரைக்கின்றது. அதனோடமையாது, கோபம் ஆயுளை நஷ்டஞ்செய்யும் என்ற எச்சரிக்கையையும் விடுக்கின்றது.

**பற்று நீக்கம் :**

இறை நாட்டம் ஏற்பட்டவுடன் உலகப் பற்றுகள் நீங்கத் தொடங்கிவிடுகின்றன. அப்பற்று நீக்கமே இறை மீது கொள்ளும் பற்றிற்கு ஆக்கமாக அமைகின்றது.

**கிறித்தவம் :**

அ. அகப்பற்று நீக்கம்: "என்னைப் பின்பற்றுபவன் தன்னைத்தான் வெறுக்க வேண்டும்". (மத்தேயு - 16-24)

ஆ. உறவினர் பற்று நீக்கம்:

1. "யாதொருவன் என்னிடத்தில் வந்து, தன் தகப்பனையும் தாயையும் மனைவியையும் பிள்ளைகளையும் சகோதரரையும் சகோதரியையும், தன் ஜீவனையும் வெறுக்காவிட்டால் எனக்குச் சீஷனாயிருக்கமாட்டான்". (லூக்கா - 14-26)

2. இயேசு ஜனங்களோடே பேசுகையில், அவருடைய தாயாரும் சகோதரரும் அவரிடத்தில் பேசவேண்டுமென்று வெளியே நின்றார்கள். "அப்பொழுது ஒருவன் அவரை நோக்கி, உம்முடைய தாயாரும் உம்முடைய சகோதரரும் உம்மோடே பேச வேண்டுமென்று வெளியே நிற்கிறார்கள் என்றான். தம்மிடத்தில் இப்படிச் சொன்னவனுக்கு பிரதியுத்தரமாக என் தாயார் யார்? என் சகோதரர் யார்? என்று சொல்லி, தம்முடைய கையைத் தமது சீஷர்களுக்கு நேரே நீட்டி இதோ என் தாயும், என் சகோதரர்களும் இவர்களே! பரலோகத்தில் இருக்கிற என் பிதாவின் சித்தத்தின்படிச் செய்கிறவன் எவனோ, அவனே எனக்குச் சகோதரனும் சகோதரியும் தாயுமாய் இருக்கிறான் என்றார்" (மத்தேயு - 12-24) என்கிறது கிறித்தவம்.

**திருஅருட்பா :**

இறைவனின் அன்புறவிற்கு முன்னால் மற்றைய உறவுகள் ஒன்றும் இல்லை என்கிறது அருட்பா.

"உத்தமம் ஆகும் நுந்திருச் சமுகத்தென்உடல்

பொருள் ஆவியை உவப்புடன் அளித்தேன்" (மெய் இன்பப்பேறு)

என்பார் அனைத்தையும் ஆண்டவன் முன் படைக்கும் இராமலிங்கர்.

உபதேசக் குறிப்பில் அவரே பற்றைக் குறிப்பிடும் இடத்தில், "ஜீவப்பற்று, பந்துப்பற்று, களத்திரப்பற்று, தேகப் பற்று, தேகப்பற்றாகிய அகப்பற்று போயிருத்தல் சங்கல்பம்" என்பார்.

இயேசு கிறிஸ்து அகப்பற்றையும், சகோதரப்பற்றையும், உலகப் பற்றையும் விட்டுவிடுதல் பற்றுநீக்கம் என்கிறார். இராமலிங்கர் ஜீவப்பற்று, பந்துப்பற்று, களத்திரப்பற்று, தேகப்பற்று, என்பனவும் நீங்க வேண்டும் என்கிறார்.

**பொய் கூறாமை :**

அச்சம், ஆசை ஆகியவற்றால் மனம் மொழி செயல் ஆகியவை தம்முள் முரண்பட்டு நிற்கும்போது பொய் பிறக்கும். அதனால் நாம் உறவாடும் சமூகம் நம்மை வெறுத்துரைக்கும். எனவே, பொய் கூறாதிருத்தலை எல்லோருக்கும் வலியுறுத்தினார்.

**கிறித்தவம் :** "எவரும் உண்மை சொல்லுவதில்லை, பொய்யே பேசுகிறார்கள். இல்லாததையெல்லாம் இருப்பதாகப் புனைந்து கூறுகிறார்கள். ஒன்று நடந்தால் அதற்கு மூக்கு, கண் வைத்து நூறாக்கி விடுகிறார்கள். தாம் சொல்லும் பொய்யை உண்மையென்று நிலைநாட்டுவதற்காக வார்த்தைக்கு வார்த்தை ஆணையிடுகிறார்கள் என்பதை இயேசு கண்டார். இதெல்லாம் தவறாயிற்றே என்று எண்ணி மனம் நொந்த அவர், "நீங்கள் சொல்ல விரும்புவதை "ஆம்", "சரி" என்றோ, "இல்லை" "முடியாது" என்றோ, ஒரே வார்த்தையில் சொல்லி நிறுத்துங்கள். வளவளவென்று பேசிக்கொண்டே இருந்தால் உங்கள் மனத்திலுள்ள சகதிதான்வெளி வரும். அதனால் உங்களுக்கும் உங்கள் பேச்சைக் கேட்போருக்கும் தீங்கே விளையும் என்று கூறினார்" (ஸ்ரீ கிருஷ்ணதத்பட்) எனக் குறிப்பிடுகிறது கிறித்தவம்.

**திருஅருட்பா :**

பொய்யுரைத்தலைக் கண்டிக்கும் அருட்பா, மெய்யுரைத்தலை யும் வலியுறுத்துகிறது. வாக்கினால் செய்யும் பாவங்கள் எனப் பின்வருவனவற்றைக் குறிக்கிறது:

"வாக்கினால் பொய் சொல்லல், கோட் சொல்லல், புறங்கூறல், வீணுக்கழுதல் இவை நான்கும் வாக்கினால் உண்டாகும் பாவங்கள்"

என எடுத்துக் கூறும். அவற்றோடு, "பொய் சொல்லாமை, கோட் சொல்லாமை, இன்சொல்லாடல், தோத்திரம் செய்தல் இவை நான்கும் வாக்கினால் உண்டாகும் புண்ணியங்கள்" (அருள்நெறி) என்றும் குறிப்பிடுகிறது.

பொய் சொல்லாமை என்பதால் உண்மை பேசுதல் வலியுறுத்தப்பட்டது. பயனில சொல்லாமை என்பதையும் கிறித்தவம் கண்டிக்கிறது. அந்நிலை வீணாக வழக்காடும் இடங்களிலும் இடம்பெறுவதால் "வழக்கிடல் ஆகா" (நித்தியகரும விதி) என்று திருஅருட்பாவும் குறிக்கிறது.

பொய்யுரைத்தலை மறுத்து, உண்மைபேசுதலை கிறித்தவமும் திருஅருட்பாவும் வலியுறுத்துகின்றது.

**கெட்ட நோக்கின்றி வாழ்தல் :**

மனத்துக்கண் மாசிலனாதல் கெட்ட நோக்கின்றி வாழத்துணை புரியும்.

**கிறித்தவம் :**

"இயேசு மனத்தூய்மையைப் பெரிதும் வற்புறுத்தினார். ஒருவன் ஒரு பெண்ணைக் கெட்ட நோக்குடன் பார்த்தாலே போதும், தான் கெடுவதற்கு வேறு எதுவும் செய்ய வேண்டாம். மனதில் கோளாறு இருந்தால், அது மனிதனையே கெடுத்துவிடும். நான் எதுவும் செய்யவில்லையே என்று சொல்லித் தப்பமுடியாது" (ஸ்ரீகிருஷ்ணதத்பட் ப-19) என்பார் இயேசு.

**திருஅருட்பா :**

திருஅருட்பாவும் மனத்தினால் உண்டாகும் பாவ புண்ணியங்களை எடுத்துரைக்கும். "பிறர் மனைவியைத் தழுவ நினைத்தல், அன்னியருடைய சொத்தைக் கிரகிக்க நினைத்தல், அன்னியருக்குத்தீங்கு செய்ய நினைத்தல், முடியாத காரியங்களை நினைத்து அக்காரியம் அன்னியர்களுக்கு முடிந்ததை நினைத்துப் பொறாமையடைதல் இவை நான்கும் மனத்தினால் செய்யும் பாவங்கள்" என்றுரைக்கின்றது. இனி புண்ணியங்களை, "அன்னியர்களுக்கு நன்மையுண்டாக நினைத்தல், பொறாமையடையாதிருத்தல், அன்னியர் சொத்தைத் தனதாக்க எண்ணாதிருத்தல், தனது மனைவி தவிர அன்னியமான பெண்களைத் தாய், சகோதரி முதலியோர்களாகச் சிந்தித்தல் இவை மனத்தால் வரும் புண்ணியங்கள்" என விளக்கமாக எடுத்துரைக்கின்றது.

கெட்ட நோக்கம் என்பது பிறன்மனை நோக்கல் மட்டுமே என்ற கருத்துப்பட உரைக்கின்றது கிறித்தவம். பிறன்மனை நோக்கல் மட்டுமன்றி அடுத்தவர் சொத்திற்கு ஆசைப்படல், அடுத்தவர் நல்ல நிலையில் இருப்பதைக் கண்டு பொறாமைப்படல், மற்றவர்க்குத் தீங்கு செய்ய நினைத்தல் என்பவைகளையும் கெட்ட

நோக்கு எனக் குறிப்பிடுகிறது அருட்பா. கெட்ட நோக்குகளைக் களைந்து நற்சிந்தனையுடன் வாழ்தலை கிறித்தவமும் அருட்பாவும் எடுத்துக் கூறுகின்றன.

### அவா அறுத்தல் :

ஆசையே துன்பத்திற்குக் காரணம் என்பார் புத்தர், ஈசனோடாயினும் ஆசை அறுமின்கள் என்பார் திருமூலர். ஆசை பேராசையாக வளர்ந்து விடின் பூரண இலட்சியம் நழுவி விடும் என்பதால் ஆசையை அறுத்திட அறிவுறுத்தினர்.

### கிறித்தவம் :

"எப்பொழுதும் விழிப்புடன் இருந்துகொண்டு, பேராசையில் விழாது காக்குமாறு இறைவனிடம் வேண்டிக்கொண்டே இரு, ஆன்மாவுக்கு சோர்வு இராது, அது சித்தமாய்த்தான் இருக்கும்" (மத்தேயு - 26-41) என ஆன்ம உற்சாகத்திற்கு வழி கூறுகிறது கிறித்தவம்.

### திருஅருட்பா :

அவாவினை விருப்பு எனக்கொண்டு, விளக்குகிறது அருட்பா. "விருப்பென்பது யாது? ஒன்றை வேண்டிப் பந்தப்பட்டு, பூரண இலட்சியத்தை விட்டு, அதிசயமாக பார்த்து நிற்றல். இந்த விருப்பால் தானுங்கெட்டு இதர வஸ்துவும் கெட்டு சாதனமும் தடைபட்டு விடும். எவ்வகையிலும் விருப்பு என்பது கூடாது." (உபதேசக் குறிப்புகள்)

விழிப்புடன் இருந்து பேராசையில் விழாதவாறு அறிவுறுத்துகிறது கிறித்தவம். விருப்பத்தினால் விளையும் தீமைகள் இன்னதெனக் கூறி எவ்வகையிலும் விருப்புக்கூடாது என விளக்குகிறது அருட்பா.

### அன்பும் அருளும் :

அனைத்திலும் சிறந்த நெறி அன்பே. அன்பு பொறுமை உள்ளது. அழுக்காறு கொள்ளாது. பரிவுள்ளது. தன்னலத்தைக் தேடாது. பெருமை பேசாது, அநீதியைக்கண்டு மகிழ்வுறாது. உண்மையைக் கண்டு உளம்மகிழும், அன்பு இழிவான சீற்றத்திற்கு இடம் தராது. வன்மம் வைக்காது. அன்பு அனைத்தையும் தாங்கிக் கொள்ளும். பிறர் மீது நல்லெண்ணம் இழப்பதில்லை. நம்பிக்கையில் தளர்வதில்லை. அனைத்தையும் பொறுத்துக் கொள்ளும் அன்புக்கு என்றும் முடிவு இராது. அன்பு அவ்வாறென்றால் அருள் இறை நிலைக்கு இட்டுச் செல்லும்.

**கிறித்தவம் :**

அ. "கடவுளுக்கு அன்பு செய்பவன் தன் சகோதரனுக்கும் அன்பு செய்யவேண்டும். இதுவே அவரிடமிருந்து நாம் பெற்ற கட்டளை".

ஆ. அவருடைய கட்டளைகளைக் கடைப்பிடிப்பதே கடவுள் அன்பு.

இ. நான் உங்களுக்கு ஒரு புதிய கட்டளை கொடுக்கிறேன். நீங்கள் ஒருவருக்கொருவர் அன்பு செய்யுங்கள். நான் உங்களுக்கு அன்பு செய்ததுபோல் நீங்களும் ஒருவருக்கொருவர் அன்பு செய்யுங்கள்." (அருளப்பர் - 4-21, 1-5; 3, 14:34)

**திருஅருட்பா :**

திருஅருட்பா இறைவனையே அன்பின் வடிவமாகப் பார்க்கிறது. அன்புடையாரெல்லாம் அவனை அடையலாம் எனக் குறிப்பிடுகிறது.

"அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையே
அன்பெனும் குடில்புகும் அரசே
அன்பெனும் வலைக்குட் படுபரம் பொருளே
அன்பெனும் கரத்தமர் அமுதே
அன்பெனும் கடத்துள் அடங்கிடும் கடலே
அன்பெனும் உயிர்ஒளிர் அறிவே
அன்பெனும் அணுவுள்ளமைந்த பேரொளியே
அன்புருவாம் பரசிவமே" (பரசிவ வணக்கம்)

அவ்வன்பினில் இருந்து விளைந்த அருளே மானுடர்க்குப் பிரதானம் என உரைக்கிறது. அவ்வருள்தான் எல்லாமாக விளங்குகிறது. அதனை அருளே நம்மியல், நம்உரு, நம்வடிவு, நம்அடி, முடி, நடு, அறிவு, மனம், குணம், பதி, பதம், இடம், துணை, தொழில், விருப்பு, குலம், இனம், சுகம், பெயர் மற்றும் அருளே நாம் (அருட்பெருஞ்ஜோதி அகவல்) என்று உணர்த்தி அன்பையும், அருளையும் மனிதர் வாழும் நெறியாகக் கொள்ளவேண்டும் என்று வலியுறத்துகிறது அருட்பா.

மானுடர்களை அன்பு வடிவானவர்களாகவும், அருள் வடிவானவர்களாகவும் மாற்றுதற்குக் கிறித்தவமும் அருட்பாவும் கருத்துரைக்கிறது.

**புலனடக்கம் :**

மானுடர்க்கு வேண்டுவது புலனடக்கம், புலனடக்கமே அருள்வடிவெய்த வாய்ப்பளிக்கும்.

**கிறித்தவம் :**

"பெண்ணைத் தொடாதிருப்பதே ஒருவனுக்கு நல்லது எனினும் ஒழுக்கக்கேடான நடத்தை எங்கும் காணப்படுவதால் அவனவன் தன் சொந்த மனைவியையும் அவளவள் தன் சொந்தக் கணவனையும் உடையவர்களாயிருக்க வேண்டும்" என்று பரிசுத்த வேதாகமத்தில் பவுலடியார் குறிப்பிடுகிறார். "நீ இடறுவதற்கு உன் கண் ஏதுவாயிருந்தால் அதைப் பிடுங்கி எறிந்து போடு" (மத்தேயு - 5-22)

கண், கை முதலிய உறுப்புக்கள் கேடு செய்வதாயிருந்தால் அவற்றை நீக்கிவிடுவது நல்லது என இயேசு கூறினார். அதன் பொருள் புலனடக்கமே ஆகும்.

**திருஅருட்பா :**

"நம்மை நஷ்டஞ் செய்வன நான்கு. அவையாவன: ஆகாரம், மைதுனம், நித்திரை, பயம் ஆகிய நான்கிலும் அதிக ஜாக்கிரதையாய் இருக்கவேண்டும். இந்த நான்கிலும் முக்கியமானவை ஆகாரம், மைதுனம். ஆதலால் இவ்விரண்டிலும் அதனினும் அதிக ஜாக்கிரதையோடு இருக்கவேண்டும். இந்த இரண்டிலும் முக்கியமானது மைதுனம். ஆதலால் இந்த விஷயத்தில் எல்லாவற்றைப் பார்க்கிலும் அதிக ஜாக்கிரதையாயிருக்க வேண்டும். அவ்வாறு இராவிடில் தேகம் அதி சீக்கிரத்தில் போய்விடும். பின்பு முக்தியடைவது கூடாது. முத்தியடைவதற்கு இம்மானிட தேகமே தக்கதாயும் வேறு தேகத்தாலதை அடைவது அரிதாயும் இருப்பதால், எவ்விதத்தாலாயினும் தேகம் நீடித்திருக்கும்படிப் பாதுகாத்தல் வேண்டும்" (உபதேசக் குறிப்புகள்) என்கிறது அருட்பா.

புலனடக்கம் வேண்டும் என்கிறது கிறித்தவம். எதிலெல்லாம் புலனடக்கம் இருக்கவேண்டும் என்கிறது அருட்பா. இரண்டுமே புலனடக்கத்தை வலியுறத்துகின்றன.

**நோன்பு :**

பாவத்தை நீக்கும்பொருட்டு, உணவு, ஒப்பனை, உறக்கம் முதலிய தேவைகளைக் குறைத்துக் கொள்ளுதல் நோன்பு ஆகும்.

**கிறித்தவம் :**

"தன்னைத் தாழ்த்துவதே நோன்பு. இயேசு நாற்பது நாட்கள் நோன்பிருந்தார். மூன்றாம் நூற்றாண்டு முதல் கிறித்த்வர்

நோன்பிருப்பது பிரமாணமாயிற்று. நோன்பிருத்தல் பாவத்தைப் போக்கும் என்னும் கருத்து உரோமர் சபையிலும் கிரேக்கர் சபையிலும் நிலைபெற்றது. யூதர்கள் இயசேுவைக் கொலை செய்யத் தீர்மானித்த புதன்கிழமையும் இயேசு இறந்த பெரிய வெள்ளிக்கிழமையும் அப்போது நோன்பு நாட்களாகக் கருதப்பட்டன. பெரிய வெள்ளிக்கிழமைக்கு முந்திய நாற்பது நாட்கள் நோன்பிருந்தனர். மோசே நாற்பது நாட்கள் நோன்பிருந்ததாலும் இஸ்ரவேலர் நாற்பது ஆண்டுகள் காடுகளில் வழிப்பயணம் செய்து துன்புற்றதாலும் நோன்பு நாட்கள் நாற்பது என்றாயிற்று" (புதிய ஏற்பாடு, பதினெண்கீழ்க்கணக்கு நூற்கள், அறக்கருத்துகள், ஓர்ஒப்பீடு - செல்லக்கனி - ப-317) என்று வேத அகராதி குறிப்பிடுகிறது.

## திருஅருட்பா :

"பசித்திரு, தனித்திரு, விழித்திரு" என்ற தாரக மந்திரம் அருட்பாவில் இடம்பெற்றுள்ளது. இதில் வரும் பசித்திரு என்பது நோன்பினைக் குறிக்கின்றது என்பர். ஆனால் இராமலிங்கர் நித்திய கரும விதியில், "பசி கண்டவுடன் தடை செய்யாமல் ஆகாரம் கொடுத்தல் வேண்டும்" என்று வலியுறுத்துவதால் அவர் உண்ணா நோன்பை வலியுறுத்தவில்லை எனலாம்.

கிறித்தவர்கள் நாற்பது நாட்கள் நோன்பு இருப்பதைப்போன்று இராமலிங்கரைப் பின்பற்றுவோர் தொடர்ந்த நோன்பு இருப்பதில்லை. ஆனால் மாதம் தோறும் பூச நாளிலும் சிறப்பாகத் தைப்பூச விழாவன்றும் நோன்பிருக்கின்றனர்.

## அன்னதானம் - விருந்து :

பசித்தவர்க்கு உணவளித்தலே அன்னதானம். ஆடம்பரத்திற்காக அன்று ஏழை எளியோரின் துயர் நீக்கவே அன்னதானம் அமைதல் வேண்டும். ஏழைகளின் பசியாற்றல் என்பது சிறந்த தானம்.

## கிறித்தவம் :

"அன்றியும் அவர் தம்மை விருந்துக்கு அழைத்தவனை நோக்கி, நீ பகல் விருந்தாவது இரவு விருந்தாவது பண்ணும்போது, உன் சிநேகிதரையாகிலும் உன் சகோதரரையாகிலும், ஐசுவரியமுள்ள அயலகத்தாரையாகிலும் அழைக்க வேண்டாம், அழைத்தால் அவர்களும் உன்னை அழைப்பார்கள். அப்பொழுது உனக்குப் பதிலுக்குப் பதில் செய்ததாகும்.

*நீ விருந்து பண்ணும்போது ஏழைகளையும் ஊனரையும் சப்பாணிகளையும் குருடரையும் அழைப்பாயாக, அப்பொழுது நீ பாக்கியவானாயிருப்பாய். அவர்கள் உனக்குப் பதில் செய்யமாட்டார்கள். நீதிமான்களின் உயிர்த்தெழுதலின் உனக்குப் பதில் செய்யப்படும் என்கிறார்." (லூக்கா - 14-12)*

**திருஅருட்பா :**

*அ. பசியினால் துன்பப்படுகின்றவர்கள் ஆகாரத்தைக் கண்ட காலத்தில் அடைகின்ற சந்தோசமும், தாய், பிதா, பெண்டு, பிள்ளை, காணி, பூமி, பொன், மணி முதலானவைகளைக் கண்ட காலத்திலும் அடையார்களாயின் ஆகாரம் உண்ட காலத்தில் உண்டாகும் சந்தோசம் எப்படிப்பட்டதாக இருக்கும். ஆதலால் இந்த ஆகாரத்தின் சொரூப ரூப சுபாவங்களும் கடவுளருளின் ஏகதேச சொரூப ரூப சுபாவங்களாகவே அறியவேண்டும்.*

*ஆ. பசி என்கின்ற நெருப்பானது ஏழைகள் தேகத்திடம் பற்றி எரிகின்ற போது ஆகாரத்தால் அவிக்கின்றதுதான் ஜீவகாருண்யம்.*

*இ. பசியினால் வருந்துகின்றவர்கள் எந்த தேசத்தவராயினும் எந்தச் சமயத்தவராயினும் எந்தச் சாதியாராயினும் எந்தச் செய்கையாராயினும் அவர்கள் தேச ஒழுக்கம், சமய ஒழுக்கம், சாதி ஒழுக்கம், செய்கை ஒழுக்கம், முதலானவைகளைப் போதித்து விசாரியாமல், எல்லாச் சீவர்களிடத்தும் கடவுள் விளக்கம் பொதுவாக விளங்குவதை அறிந்து பொதுவாகப் பார்த்து அவரவர் ஒழுக்கத்திற்குத் தக்கபடி அவர்கள் பசியை நிவர்த்தி செய்விப்பதே ஜீவகாருண்யம். (ஜீவகாருண்ய ஒழுக்கம்)*

**ஈ. சன்மார்க்க அன்னதானம் :**

*1. 1875 - இல் இராமலிங்கரால் சத்திய தருமச்சாலை என்ற பெயரில் தொடங்கப்பட்ட அன்னச்சாலை தொடர்ந்து நாள் தோறும் பசித்தவர்க்கு உணவு வழங்கி வருகிறது.*

*2. தைப்பூச நாளன்று வடலூரில் உள்ள அனைத்துச் சத்திரங்களிலும், ஊர் வாரியாக உள்ள சன்மார்க்க சங்கக் கட்டிடங்களிலும் சங்கங்கள் அன்னதானம் செய்கின்றன. மேலும் அடியார்களும் தம் ஊரிலிருந்து தாம் கொண்டு வந்த உணவுப்பொட்டலங்களை எல்லார்க்கும் அளிப்பதுண்டு*

*3. மதுரை அவனியாபுரத்தில் உள்ள வள்ளலார் கோட்டத்தில்*

மாதந்தோறும் பூச நாளன்று அருள் கஞ்சி வழங்கப்படுகிறது. சங்க உறுப்பினர்கள் அன்றாடம் வீட்டில் சமையலுக்குப் பயன் படுத்தப்படும் அரிசியில் ஒருபிடி அரிசி எடுத்து கலயத்தில் சேமிப்பதால் "பிடி அரிசிக் கலயம்" என்றே அது வழங்கப் படுகிறது. அருள் கஞ்சிக்கு அவ்வரிசியே பயன்படுத்தப் படுகிறது.

4. மாவட்டங்கள்தோறும் உள்ள சன்மார்க்க சங்கங்களும் வருடம் ஒரு நாளாவது அன்னதானம் செய்வதைக் கொள்கையாக ஏற்றுச் செயல்படுகின்றன.

5. "வள்ளற்பெருமான் சாலை சம்பந்திகளுக்கு இட்ட சமாதிக் கட்டளையில் "கர்ம காரியங்கள் ஒன்றுஞ் செய்ய வேண்டாம். தெரிவிக்கத்தக்கவர்களுக்குத் தெரிவித்து ஒரு தினத்தில் நேரிட்டவர்களுக்கு நேரிட்டமட்டில் அன்னவிரயஞ் செய்ய வேண்டும்" என்று எழுதுகிறார். கருமாதி, திதி, திவசம் இவையெல்லாம் கர்ம காரியங்கள். இக்கர்ம காரியங்கள் எதுவும் செய்ய வேண்டாம் என்பது வள்ளலார் கட்டளை. நலந் தீங்கு இரண்டிலும் வள்ளலார் அன்னதானத்தையே வற்புறுத்துகிறார்" (புரட்சித் துறவி வள்ளலார், ஊரன் அடிகள் ப-88)

இவ்வாறு கிறித்தவமும் அருட்பாவும் அன்னதானத்தை மேற்கொள்ளும்படிக் கூறுகின்றன. தனிமனிதன் அன்னதானம் செய்வதைக் கிறித்தவம் கூறுகிறது. தனிமனிதனுக்குச் சொல்லப் பட்டாலும் இராமலிங்கர் தருமச்சாலை கட்டி வழிப்படுத்தினார். அதன் பின்னர் அன்னதானத்தை அருட்பாவின்வழி வந்தோர் அமைப்பாகச் சங்கங்களின் மூலம் சமுதாய அளவில் செயல்படுத்துகின்றனர்.

மேற்குறித்த மதிப்புகளோடு வேறு பல மதிப்புகளையும் திருஅருட்பாவில் காணமுடியும். அவை மானுட மேம் பாட்டிற்காகச் சொல்லப்பட்டன.

## திருஅருட்பா காட்டும் வாழ்வியல் மதிப்புகள் :

திருஅருட்பா காட்டும் வாழ்வியல் மதிப்புகள் வாழ்வின் ஒவ்வொரு நிலையிலும் எண்ணிப் பார்த்து பின்பற்றக்கூடிய மதிப்புகள். சிறுநிகழ்வில் தொடங்கி பெரிய செயற்பாடுகள் வரை மனிதன் எத்தகைய மதிப்புகளைக் கடைப்பிடிக்க வேண்டுமென வலியுறுத்துகிறது. அவை இறைமதிப்புகள், சமய மதிப்புகள், குண மதிப்புகள், செயல் மதிப்புகள், பண்பு மதிப்புகள், நிகழ்வு மதிப்புகள் என்ற தலைப்புகளில் அமைகின்றன. அவற்றை மேலும்

விரிவாக ஆராய இடமுண்டு. இங்கு அவை இன்னதெனத் தொகுத்துத் தரப்படுகின்றன.

## இறை மதிப்புகள் :

உத்தம வடிவினன், உண்மை வடிவினன், நல்லவன், நன்மை செயவல்லவன், கருணை வடிவினன், சூதர் உளம்புகாதவன், கொலை தவிர்ப்பவருடன்கூடுபவன், சத்தியமானவன், தருமவாதி தூய்மை உடையவன், புண்ணிய வடிவினன், நீதி வடிவினன் நல்லவர்பால் தங்குபவன், வாய்மை வடிவினன், உயர்வுடையவன், புனிதமானவன் என்ற தொடர்கள் அருட்பாவில் பல இடங்களில் வருவதுண்டு. அதனை நோக்கும் போது உத்தம நிலை, உண்மை, கருணை, சூதின்மை, சத்தியம், தருமம், புண்ணியம், நீதி, இணக்கம், வாய்மை, உயர்வு, புனிதம், நல்லதன்மை என்னும் மதிப்புகள் இறைத்தன்மையைத் தரவல்லன் என அறிந்து கொள்கிறோம். அதனால் அக்குணங்கள்யாவும் இறைவனுக்கு ஏற்றுக் கூறப் பட்டிருப்பதைக் காண்கிறோம்.

## சமய மதிப்புகள் :

கிறித்தவம், இஸ்லாம், பௌத்தம், இந்து சமயம் முதலிய சமயங்கள் எடுத்துரைக்கும் மதிப்புகள் யாவும் மனித வாழ்வை வரையறுக்க வந்தவை. எனவே அவற்றைச் சமூக மதிப்பில் அடக்கி விடலாம். ஆனால் இராமலிங்கரிடம் மட்டுமே சமூக வாழ்வியல் மதிப்புகளோடு சமய மதிப்பு என்ற சிந்தனையும் உண்டு. அம்மதிப்பு அனைத்து மக்களையும் ஒருசேர அழைத்து வரவேண்டும். அது சமய இலக்கணமாகவும் இயங்க வேண்டும் என்னும் நோக்கத்தில் மூன்று மதிப்புகளைக் குறிப்பிடுகிறார்

1. விதி தவிர்த்தல்
2. மரணத்தை வெல்லுதல்
3. தயவுடன் வாழ்தல்

பெரும்பான்மைச் சமயங்கள் விதியை வலியுறுத்துகின்றன. மரண பயத்தை மனிதனுக்கு ஏற்படுத்துகின்றன. புலைத்தொழில், உயிர்க் கொலை, போன்றவற்றைக் கண்டிக்காமல், கண்டுங் காணாதது போல இருந்துவிடுகின்றன. எனவே, அத்தகைய சமயங்கள் சமய மதிப்புகளைச் சரியாக வரையறுக்கவில்லை என்பது இராமலிங்கர் கருத்து.

## குண மதிப்புகள் :

அகங்காரம் தவிர்த்தல், ஈகை, தாராள மனப்பான்மை

யுடனிருத்தல், ஏக்கமற்றிருத்தல், இனியன கூறல், பொருளாசை தவிர்த்தல், பெருந்தன்மை, நல்மதி, ஞானக் கருத்துடைமை, சகிப்புத்தன்மை, மதம் கடந்த அருள்நிலை மடியின்மை, பொறாமை கொள்ளாமை, பொறுமையுடனிருத்தல், நினைவு கொள்ளல், நிலையான உறுதிப்பாடு என்பன குண மதிப்புகளாகக் காட்டப்பட்டுள்ளன.

## செயல் மதிப்புகள் :

மிகுதியாக வலியுறுத்தப்பட்டவை செயல் மதிப்புகளே. சிற்றினஞ் சேராதிருத்தல், நன்மை செய்தல், ஊரார் போற்ற வாழ்தல், இறைவனைக் கண்டறியும் ஆசையுடன் அடியார் கூட்டம் சாரல், பிறர்க்கு உதவுதல், அறத்தொழில் செய்தல் அன்புடையார்க்கு நன்மை செய்தல், மோசஞ் செய்யாமை, ஆலயத்தை மற்றவர் வழிபட வழிவகை செய்தல், இருண்மை நாட்டந் தவிர்த்தல், சாதிமத பேதமற்றிருத்தல், அறிவொழுக்க இச்சையுடன் வாழ்தல், உயிர்க்கொலை புரிவார் உறவு தவிர்த்தல், மெதுவாகப் பேசுதல், உறவுடன் வாழ்தல், புலால் உண்ணாமை, எளியோரைத் துன்புறுத்தாமை, தாய்மைப்பேறு, கலப்படம் செய்யாமை, அடைக்கலம் தருதல், நட்புடைமை, கள்ளுண்ணாமை, தீயவற்றுக்குத் துணைசெய்யாமை, பெரியாரைச் சேர்தல், கன்னியர் கற்பிற்குக் காவல் நிற்றல், சேர்ந்துச் சிந்தனையை மாற்றி ஆக்கவேலை பற்றி சிந்தித்தல், குளம் வெட்டல், குருவைப் போற்றல், ஒருமைப்பாட்டுச் சிந்தனையுடன் வாழ்தல், கொல்லாமை, புறங்கூறாமை, சமயங் கடத்தல், கூடி வாழ்தல், மடியின்மை, அடியாரைப்போற்றல், பணிபுரிதல், ஆபத்தில் உதவுதல், உள்ளது உள்ளபடி உரைத்தல், நேர்மையாய் இருத்தல், தவம் போற்றல், பசி அடக்கல், ஆத்திகம் பேசல், உறவுடன் வாழ்தல், பயிர்காத்தல், பசித்தோர்க்கு உணவிடல், பசி பொறுத்தல், எல்லா உயிர்களில் சுதந்திரத்தையும் போற்றல், வறியார்க்கு உதவுதல், பொதுச் சொத்துக்களுக்கு ஊறு செய்யாமை, சொன்னபடி நடத்தல், வரையறுத்து வாழ்தல், இயல்பாக இருத்தல், நட்புக்காக உயிரையும் கொடுத்தல், பயன்வழிப் பொழுது போக்கல், சாதிமத பேதமறுத்தல், அளவாக உண்ணல், போக்குவரவுக்கு உதவுதல், வழக்கிடாமை, ஆக்க வேலைக்குத் துணைநிற்றல், வாக்குத்தவறாமை, சமூக விலக்குகளை ஏற்றல், மரம் நடல், வேகம் தவிர்த்தல், உரியகூலி வழங்கல்.

மேற்குறித்த செயல்மதிப்புகள் கடைப்பிடிக்கவேண்டியவை, களையப்படவேண்டியவைகளை இனங்காட்டுதல் மதிப்புகளை

உடன்பாட்டுநிலையிலும், எதிர்நிலையிலும் பார்க்கவேண்டும் என்பதை உணர்த்துகின்றன.

## பண்பு மதிப்புகள் :

சில உயர் பண்புகளே மனித இனத்தை மக்கள், மாக்கள் எனப் பகுத்தறியத் துணை நிற்கின்றன. அத்தகைய பண்பு மதிப்புகளையும் அருட்பா குறிப்பிடுகின்றது.

பிறரை மதித்து வணங்கல், நற்சிந்தனைப் பெருக்கம், தந்தை தாய் போற்றல், தவம் போற்றல், சேர்ந்துண்ணல், நடுவு நிலைமை, ஆபத்தில் துணையாயிருத்தல், நடத்தை இனியனவாதல், விழித்திருத்தல், பாச நீக்கம், பிறர் வருத்தங் கண்டு இரங்குதல், பெண்ணாசை தவிர்த்தல், பெரியாரைப் போற்றல், பற்றறுத்தல், மனத்தாலும் வாய்மையுடன் இருத்தல், விரைவில் எழுந்திருத்தல் போன்ற பண்புகள் மதிப்புடையன என்று உணர்த்தப்பட்டுள்ளன. அவை பண்புடைய மனித சமுதாயம்வரை வகுத்துரைக்கப்பட்ட மதிப்புகள்.

## நிகழ்வு மதிப்புகள் :

மனித வாழ்வு நிகழ்வுகளின் தொகுப்பே. வாழ்க்கை நிகழ்வுகள் மனிதன் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் தொடர்ந்து நிகழ்வன. அவற்றை ஏற்பதும், எதிர்கொள்ளத் தயங்குவதும், மறுப்பதும், மாற்றியமைப்பதும் மனிதனின் சுயதிறனைப் பொறுத்தது. இன்பம் துன்பம் என்ற இருவித எதிர்வினை நிகழ்வுகள் நிகழத்தான் செய்கின்றன. நல்லது கெட்டது எனப் பகுத்தறியும் பாங்கினைப் பெற்றுவிடுகிறான். அவ்வகையில் மனித வாழ்வின் நிகழ்வுகளுங் கூட மதிப்புகளை நிர்ணயிக்கின்றன. சில போது மதிப்புகளாகவும் மாறுகின்றன.

திருஅருட்பாவில் ஆபத்து, இடர் என்ற இரு நிகழ்வுகள் மதிப்பின் எதிர்நிலைகளாகக் காட்டப்பட்டுள்ளன. இங்கு ஆபத்து தோன்றாதிருத்தல் அல்லது ஆபத்து தவிர்த்தல், இடர் நிகழாமை என்பன மதிப்பின் நேர்நிலைகளாகின்றன. ஆபத்து நேர்தல், இடர்நிகழ்தல் என்பன மதிப்பற்ற செயல்களாகவும் எதிர் மதிப்புகளாகவும் கொள்ளப்படுகின்றன. எனவே, வாழ்க்கை நிகழ்வுகளில் நேர்மதிப்புடைய நிகழ்வுடைகளைத்தான் மனித மனம் எதிர்பார்க்கின்றது.

"வாழ்வியல் மதிப்பீடுகள் தரம் தாழ்ந்து விட்டதாய்க் கவலைப்படும் இக்காலத்தில் அந்த மதிப்பீடுகள் உயரவும் வாழவும் வளரவும் வழிவகுக்கும் வகையில் இலக்கியச் சிந்தனைகள் அமைதலே இலக்கியக் கல்வியைப் பயனுடையதாக்கும்" (ஐயுறவும்

தெளிவும் மதுரை திருவள்ளுவர் கழக மாணிக்கப் பொன் விழா மலர்) என்கிறார் டாக்டர். மீனாட்சிமுருகரத்தினம் அவர்கள். அவ்வகையில் மதிப்பீடுகளை வளர்க்கின்ற கல்வியை கிறித்தவமும் திருஅருட்பாவும் வழங்கியுள்ளன.

இதுகாறும் ஆராயப்பட்ட கருத்துக்களில் கூ...து பெறப் படுவது யாதெனின், தனிமனித நலம் சமூக நலம் இரண்டும் பாதுகாக்கப்பட வேண்டும். குற்றங்களில்லாத, குறைபாடற்ற, மாண்புகள் நிறைந்த மேம்பாடுடைய சமதர்ம சமுதாயம் உருவாக வேண்டும். மேற்கூறிய மதிப்புகள், குறிப்பிட்ட குழு, சமயம் மட்டுமல்லாது மனித சமுதாயம் முழுமைக்கும் சொல்லப்பட்ட மதிப்புகளே. "மனிதன், மனிதத்துவத்தை எய்துவதற்கு முதன்மையாகச் செய்ய வேண்டியது யாதெனின், மதிப்புகளை உருவாக்கிக் கொள்வதும் அவற்றைத் தக்கவைத்துக் கொள்வதுமே யாகும்," (Faith for livings - World Treasury of Religious Quotations) அதனோடு மட்டுமன்றி, சமயச் சார்பும், தெய்வ நம்பிக்கையும் இருந்தால் அவை விரைந்து வேரூன்றி வளர முடியும். எனவேதான், சமய நுல்களில் கோட்பாடுகள், மதிப்புகள் முக்கிய இடம்பெற்றன.

## நிறைவாகச் சில சொல்லி...

பொதுவாகச் சமயங்கள் வகைமை, அமைப்பு முறை ஆகியவற்றில் வேறுபட்டாலும் ஆன்ம விடுதலை, இறை உயிர் உறவு நிலை ஆகியவை பற்றிப்பேசுவதில் ஓரளவு ஒற்றுமைப்பட்டு நிற்கின்றன. இந்துசமயம், கிறித்தவம், இஸ்லாம் ஆகியவற்றுள் பரம்பொருளுக்கும் உயிருக்கும் இடையே உள்ள உறவை விளக்குவதே முக்கிய நோக்கமாக அமைகிறது. இறை-உயிர் உறவு என்பது ஆன்மீகத்துடன் நெருங்கிய தொடர்பு - உயர்இலட்சிய மெய்ந் நிலையாகும். ஆன்மீக வாழ்வின் தொடக்கமே அவ்வுறவுவலுப் பெற்றவுடன்தான் ஏற்படுகிறது எனலாம்.

இறைவனைத் தந்தையாகக் கருதும் போக்கு திருஅருட்பாவி லும், கிறித்தவத்திலும் இடம் பெற்றுள்ளது. இஸ்லாமிய சமயத்தில் அப்போக்கு இல்லை. இறைவன் அங்கு இறைவனாக மட்டுமே எண்ணப்படுகிறான். பிற உறவு நிலைகளில் வைத்து எண்ணும் போக்கிற்கு இடம் அளிக்கவில்லை. ஆனால் இஸ்லாத்தின் வளர்ச்சி யான சூபிஸத்தில் நாயகி நாயக பாவனை இடம் பெற்றுள்ளது.

இராமலிங்கரின் அனுபவ வெளிப்பாடுகள் குறியீட்டு நிலைகளில் அமைந்துள்ளன. அவை வார்த்தை வெளிப்

பாடுகளுக்கு அப்பால், அன்றாட வாழ்வியல் நிகழ்வுகளுக்கு அப்பால், மனம் வாக்கு என்பவைகளுக்கு அப்பால் இறையோடு இரண்டறக் கலந்த நிலையில் குறிக்கப்பட்டவை. எனவேதான் அவற்றை அப்பாலை நிலைக்குறியீடுகள் என்று இந்நூல் பகுத்து உரைக்கிறது. முன்னர் அனுபூதிநிலை, கடப்பு நிலை என்றே வழங்கப்பட்டு வந்துள்ளன. சிந்தனைக்கும் வெளிப்பாட்டுக்கும் இடையே ஒரு காட்சி போல அவை விளங்குவதால் அப்பாலை நிலைக்குறியீடுகள் என்ற தொடரே பொருத்தமுடையதாகிறது. எனவே பயணம், திருமணம், ஆன்மீக உயர்வேதிவினை நிகழ்வுகள் என்றமூவிதக் குறியீடுகளும் ஆராய்ப்பட்டன.

பயணம் என்கிற குறியீடு அண்டர்ஹில் என்பவர் கருத்துக்களுடன் உடன்படுவதாக உள்ளது. பயணத்தொடக்கம் பற்றிய, புனிதப் பயணியாகத் தன்னைக் கருதுதல், அன்பிற்காக ஏங்குதல், பரிபூரணத் துணையைப் பெறவிழைதல் என்ற கிறித்தவக் கருத்துக்கள் திருஅருட்பாவின் கருத்துக்களுடன் இணைநெறியில் உள்ளன. பயண இலக்காகக் கிறித்தவர்கள் ஜெருசலத்தையும் இஸ்லாமியர் மெக்காவையும், இராமலிங்கர் சிதம்பரத்தையும் கொண்டுள்ளனர்.

இறைவனோடு ஒன்றுபடுதலையே திருமணம் உருவகித்துக் காட்டுகிறது எனக் கிறித்தவர் ஏற்றுக்கொண்டனர். தேவாலயங்களில் நடைபெறும் திருமணங்கள் இறைவனோடு நிகழும் திருமணங்களே என்று பலரும் நம்பினர். சொர்க்கத்திற்கு இணையான ஆன்ம இன்ப உணர்வுகளை விளக்கத் திருமணம் என்ற குறியீடு பெரிதும் உதவிற்று, ரிச்சர்டு புனித விக்டர் என்பவரது நிச்சயித்தல், திருமணநிகழ்வு, திருப்பூட்டு, உறவுகனிந்தமை (Betrothal, Marriage, Wedlock, Fruitfulness) என்ற வகைமைகள் திரு அருட்பாவில் சிறந்த நிலையில் எடுத்தாளப் பட்டுள்ளன. அவை இறைவனோடு ஆன்மாவை இணைத்து வைக்க விழையும் உன்னதப் பாடல்களாகப் விளங்குகின்றன. இக்குறியீடு இராமலிங்கரது நாயகி பாவங்களின் வெளிப்பாடாக அமைகின்றது.

பயணம் என்ற குறியீட்டில் இறைநாட்டம் மட்டுமே மிகுதியும் வெளிப்பட்டது. திருமணம் என்ற குறியீட்டில் பிடித்துக் கலத்தல் என்பதே வேட்கையாக விளங்கிற்று. ஆனால் இக்குறியீடு குறிப்பிட்டுக் கூறவியலாத பல குறியீட்டு நிலைகளால் புனையப் பட்டுள்ளது. ஆன்மீக உயர்வேதிவினை நிகழ்வுகள் சுயதேடலின் விளைவுகளே ஆகும். அமுதம் பருகல், ஒலிகேட்டல், வெள்ளப் பெருக்கு போன்ற நிகழ்ச்சிகள் பற்றிய குறிப்புகள் அருட்பாவில் கிடைக்கின்றன. ஆனால் அவை எவ்வாறு நிகழ்ந்தன என்பதற்கான

விளக்கங்கள் தெளிவாக இல்லை. இராமலிங்கரின் ஆன்மீக உயர் வேதிவினை நிகழ்வுகள் ஆழ்மன அனுபவ நிகழ்வுகளாக இருக்கலாம். அவை பத்து வகைகளில் வெளிப் படுகின்றன.

ரசவாதம் செய்தல், தங்கத்தைக் குறிப்பிடல், மணிக்கற்கள் பற்றிக் குறிப்பிடல், உலோகங்களைக் குறித்தல், கோளங்கள், அண்டங்களைக் குறித்தல், விலங்கியல் சார்ந்த குறியீடுகளைத் தருதல் என்ற ஆறுவகைகளும் புறப்பொருள் சார்ந்த உயர்வேதி வினை நிகழ்வுகள் ஆகும். தொடர் உருவகங்களாகப் பாடுதல், ஆன்மீக வேதியியல் மாற்றங்களைச் சுட்டிக்காட்டுதல், மருத்துவக் குறிப்புகள் தருதல், அனுபவ நிலைகளைக் குறியீடுகளாக்கிப் பாடுதல் என்ற இறுதி நான்கும் அகம் சார்ந்த அனுபவ வெளிப்பாடுகள், அவ்வனுபவ நிலைகளில்தான் சாதி, தத்துவம், சாத்திரம், சமயம் என்பவைகளுக்கு எதிரான மறுமலர்ச்சி சிந்தனைகளும் தோன்றுகின்றன.

சூபித்துவத்தில் சூபிகளின் பண்புகள், சூபிஅத்தார் காட்டும் படிநிலைகள், தௌகிட் - இ - ஸிபாதி, சமாதி வற்புறுத்... என்பன திருஅருட்பாவுடன் ஒப்பிடப்பட்டன. வள்ளள்...மை, உள்ளதைக் கொண்டு மனநிறைவடைதல், பெ...றுமை, மன்றாடுதல், இறைவனை அணுகுதல், இறைவழியில் பயணமேற் கொள்ளுதல் என்ற ஆறுபண்புகளில் இராமலிங்கரும் சூபிகளுடன் ஒன்றுபடுகிறார். ஆனால் சூபிமுறையில் நீண்ட, அங்கியணிதல் என்பது இராமலிங்கருக்கு உடலைச் சுற்றிக் கட்டிய துவராடையாயிற்று. ஏழ்மையைப் பெருமையாகக் கொள்ளும் சூபித்துவக் கருத்து இராமலிங்கருக்கு உடன்பாடன்று. தோழனுடனும் ஏழமை பேசேல் என்ற கருத்தே திருஅருட்பாவில் இடம்பெறுகிறது. எனினும் சூபிகளைப் போன்றே வாழையடி வாழையாக வந்த திருக்கூட்ட மரபினில் ஒருவர். ஈரான் நாட்டு சூபிக் கவிஞரான ஷெய்குபரீதுத்தீன் அத்தார் என்பவர் எழுதிய பறவைகளின் பரிபாஷையில் குறிப்பிடப்பட்ட ஏழு படிநிலைகளாகிய தலப், இஸ்க், மஃரிஃபா, பனா, தௌஹீத், ஹைறாத், பகர்வபனா எனும் நிலைகளுக்கு இணையான கருத்துகள் அருட்பாவிலும் இடம் பெற்றுள்ளன.

சூபிகளின் தௌகிட் - இ - ஸிபாதிக் கொள்கை போன்றே இறை இணைவு இயக்க நிலையைத் திருஅருட்பாவிலும் காணலாம். அதே இணைவியக்கத்தை கிறித்துவின் உன்னதப்பட்டு (Hymen of Jesus) எனும் பாடல்கூறுகளும் கொண்டுள்ளன. ஆன்மாவிற்கும் இறைவனுக்கும் இடையே நடைபெறும் உரையாடலாக அமைந்தவை அவை.

"சூராவாக்கிய" என்பதனுள் வலது கைத் தோழர்கள்,

இடதுகைத் தோழர்கள் கடவுளுக்கு அருகே இருப்பவர்கள் என்ற மூவகை மனிதப்பாகுபாடுகளை சூபித்துவம் பகுத்துக் காட்டுகிறது. அவற்றுள் கடவுளுக்கு அருகே இருப்பவர் என்ற பகுப்பில் இராமலிங்கர் அமைகிறார்.

உலகில் அதிக எண்ணிக்கையில் மக்கள் பின்பற்றும் சமயங்களான கிறித்தவமும் இஸ்லாமியமும் மரணத்தின் பின்னர் உடலைச் சமாதிவைப்பதையே கடைபிடித்து வருகின்றன. இராமலிங்கரும் அவ்வாறே குறிப்பிடுகிறார். புதைத்தல் என்பது பழந்தமிழர் முறை என்பதும் சிந்தனைக்குரியது. அவ்வாறு கொண்டால் தொன்று தொட்டு வந்த பழக்கத்தின் எச்சமாகவே சிலர் புதைத்தல் முறையைப் பின்பற்றுகின்றனர் எனலாம்.

சமாதி வற்புறுத்தல் என்பது இராமலிங்கருக்கு உடன்பாடு எனினும் தொடக்கத்திலிருந்தே அது வேரூன்றியிருந்ததா? இல்லை பிறரால் தெரிந்து பின்னர் ஏற்றுக்கொண்டாரா என்பது ஆய்விற்குரியது. கிறித்தவத்தின் செல்வாக்கும், கிறித்தவர் வருகையும் ஒரு காரணமாக இருக்கக்கூடும். பாண்டிச்சேரியில் கிறித்தவரின் ஆதிக்கம் அதிகம் இருந்தபோது அருகாமையில் உள்ள வடலூருக்கும் பாண்டிச்சேரிக்கும் தொடர்பு ஏற்பட வாய்ப்புள்ளது. பாண்டிச்சேரியில் வாழ்ந்த அன்பர் ஒருவருக்கு இராமலிங்கர் எழுதிய கடிதங்கள் அண்மையில் கண்டறியப் பட்டன என்ற செய்தி அதனை வலுவாக்குகிறது. எது எவ்வாறிருப்பினும் முதல் ஐந்து திருமுறைகளில் குறிப்பு எதுவுமில்லை. ஆறாம் திருமுறையில்தான் வலியுறுத்தப்பட்டுள்ளது. எனவே மரணமிலாப் பெருவாழ்வு என்ற கோட்பாடு இராம லிங்கரிடம் வலுப்பெற்றவுடன் எழுந்த கருத்தாக அதனைக் கொள்ள முடியும்.

சூபிஞானிகளிடம் சில்லா எனும் ஒரு குறிப்பிட்ட வழக்கம் காணப்படுகிறது. இந்தியாவில் உள்ள சிஷ்டியா, நக்ஷ்பந்திய்யா, குவாத்திரிய்யா, ஸீஹ்றவார்தியா என்ற நான்கு சூபிச்சங்கங்களில் சிஷ்டியா சங்கத்தைச சேர்ந்தவர்களே அதனை மேற் கொள்கின்றனர். "சில்லா" என வழங்கப்படும் அம்முறையானது தனித்த போக்குடையது. சூபிகள் தங்களை ஓர் அறையில் அடைத்துக் கொண்டு மிகக் குறைந்த உணவு உடைகளை ஏற்று, தூக்கம் இன்றி நாற்பது நாட்கள் இருப்பார்கள்.

இராமலிங்கரும் இறுதியில் சித்திவளாகம் என்ற இடத்தில் ஓர் அறைக்குள் சென்று திருக்காப்பிட்டுக் கொண்டார். பின்னர் வெளியில் வரவேயில்லை. உடலுடன் இறையோடு கலந்துவிட்டார் என்றெல்லாம் அவரது வரலாறு பேசப்படுகிறது. அவரது மறைவு குறித்துத் தெளிவான தகவல்கள் இன்றுவரை

இல்லை. திருக்காப்பிட்டுக் கொண்ட நிகழ்வு உண்மையென்பதை வடலூரில் கலெக்டரது குறிப்பு உறுதி செய்வதிலிருந்தும், இன்றும் அவ்வறை புனிதமாகப் போற்றப்படுவதிலிருந்தும் அறிந்து கொள்ளலாம். இவ்வாறு தனியறைக்குள் சென்று திருக்காப்பிட்டுக் கொள்ளுதல் என்ற முறை, சூபிகளின் சில்லாமுறை போன்று விளங்குகிறது.

ஊன் உண்ணாமை என்ற அடித்தளத்தில் சமணமும், திருஅருட்பாவும் சம இடத்தில் உள்ளன. அகிம்சையும் ஜீவகாருண்யமும்சிறந்த இலட்சியங்களாக விளங்குகின்றன. உலக மூடம், பாசண்டமூடம் என்பனவற்றில் சமணமும் அருட்பாவும் ஒன்றுபட்டாலும் தேவமூடத்தில் வேறுபடுகின்றன. இராமலிங்கர் கடவுள் என்ற ஒருவரால்தான் உயிர்கள் உய்யமுடியும் என்றுணர்த்தினார். ஆனால் தெய்வம் நம்மை வாழ்விக்கும் வீழ்த்தி விடும் என ஆர்வமுற்றும் அச்சமுற்மும் வாழ்கின்ற தேவமூடத்தை விலக்கவேண்டும் என்கிறது சமணம் ஆனால் நல்ஞானம், நல்ஒழுக்கம் என்பவற்றில் ஒத்த கருத்துரைக்கின்றன.

சமணத்தில் இருபத்து நான்கு தீர்த்தங்கரர் என்ற தொடர்ச்சி உண்டு. சன்மார்க்கத்தில் இல்லை. சமய வாழ்வைப் பொறுத்தமட்டில் பெண்ணின் தகுதிபற்றி சமணமும் அருட்பாவும் புறக்கணித்த நிலையில் கருத்துரைக்கக் காண்கிறோம்.

உயிர், கடவுள், உலகியல், ஒழுக்கநெறி, தவம், முக்தியடையும் நெறிகள், சிறந்த இலட்சியம் ஆகிய சிந்தனை வீச்சுகள் மகாவீரரிடமும் இராமலிங்கரிடமும் ஒத்த நிலையில் விளங்குகின்றன. கடவுள் கருத்தில் மட்டும் வேறுபடுகின்றனர். தனித்த கடவுள் இல்லை என்கிறார் மகாவீரர். இராமலிங்கரோ தனித்தலைமைக் கடவுள் உண்டு என்கிறார்.

சமணத்தில் விரதக் கொள்கைகள் முக்கிய இடம் வகிப்பவை. அவை அருட்பாவுடன் ஒப்பிடப்பட்டன. அணுவிரதங்களான அகிம்சை, பொய்யாமை, கள்ளாமை, பிறன்மனை நயவாமை, பொருள்வரைதல், கள்ளுண்ணாமை, ஊன் உண்ணாமை, பெரியோரை வணங்குதல் என்ற விரதங்கள் குறித்து சமணமும் அருட்பாவும் இணையாகவே கருத்துரைக்கின்றன. தேன் உண்ணாமை, இரவுண்ணாமை, பற்றி அருட்பா குறிப்பிடவில்லை. மாறாக இறைவனையே தேனாக உருவகிக்கிறது அருட்பா. குணவிரதத்தின் மூலம் வரையறுத்து வாழ்தல் என்ற பண்பை சமணமும், திருஅருட்பாவும் வளர்க்கின்றன. சிஷ்டா விரதத்தின் மூலம் தியானம், புலனடக்கம், அதிதிகளையும் துறவிகளையும் ஆதரித்தல் போன்றவைகளை சமணம் போற்றும். இராமலிங்கரும் அவற்றை ஆதரிக்கிறார்.

சமணம் குறிப்பிடும் பதினொருவகை மனிதப் பாகுபாடுகள் விரதம் பற்றியவை. திருஅருட்பாவின் மனிதப்பாகுபாடு புலால் உண்ணாமையை மையமிட்டு அமையும். அகவினத்தார், புறவினத்தார் என்று இரண்டாகப்பகுப்பார் இராமலிங்கர்.

இறை - உயிர் உறவுநிலையில் தொடங்கிய இந்நூல் இறுதி இயலில் மதிப்புகள் குறித்து ஆராய்ந்துள்ளது. மானுட வாழ்விற்கும், மதிப்புரைகளுக்கும் இடையே உள்ளார்ந்த ஆழமான உறவுநிலை ஒன்று இருந்து வருகிறது. மதிப்புடைய மனிதனே சிறந்த மானுடன் என்ற பாராட்டுதலைப் பெறுகிறான். அம்மதிப்பு நிலையைச் சமயஞ்சார்ந்த வாழ்க்கையிலும் சமயஞ்சாரா வாழ்க்கையிலும் ஒருவன் பெற முடியும். உலகில் தோன்றும் சமயங்கள்யாவும் அவ்வச்சமயஞ்சார்ந்த மக்களுக்கு மதிப்புகளைக் கூறி வழி காட்டியுள்ளன. அவ்வகையில் கிறித்தவ மதிப்புகளும், திருவருட்பா மதிப்புகளும் ஒப்பாய்வு செய்யப்பட்டன.

கிறித்தவம் கூறும் பத்துக்கட்டளைகளில் ஐந்து முதல் பத்து வரை உள்ள ஆறுகட்டளைகளையும் அருட்பாவின் பஞ்சமாபாதங்கள் விளக்குகின்றன. கடவுள் பெயரை வீணாகப் பயன்படுத்தக் கூடாது என்னும் இரண்டாவது கட்டளை அருட்பாவில் இல்லை. ஞாயிறு ஓய்வு நாள் என்னும் மூன்றாவது கட்டளையும் இடம்பெறவில்லை. மெய்யான ஒரே கடவுளை வணங்க வேண்டும் என்னும் முதல் கட்டளை அருட்பாவுக்கும் பொருந்திவரும்.

கீழ்ப்படிதல், சாந்தம் தாழ்ச்சி, இரக்கம், கடவுளைச் சார்ந்திருத்தல், பகைவரை மன்னித்தல், நீதி, அன்பு, புலனடக்கம், கோபங்கொள்ளாதிருத்தல், கூடா ஒழுக்கந்தவிர்த்தல், பற்று நீக்கம். நோன்பு, பொய்கூறாமை, கெட்ட நோக்கின்றி வாழ்தல், அவா அறுத்தல், அன்னதானம் விருந்து, ஆகிய மதிப்புகள் கிறித்தவம், திருவருட்பா இரண்டுடனும் ஒப்பாய்வு செய்யப் பட்டுள்ளன அவற்றுள் சன்மார்க்க அன்னதானம் கிறித்தவத்தை விட சிறந்து விளங்குகிறது. அவை தவிர செயல் மதிப்புகள், பண்பு மதிப்புகள், நிகழ்வு மதிப்புகள், இறை மதிப்புகள், குணமதிப்புகள் என்பன மிகுதியும் அருட்பாவில் குறிப்பிடப்பட்டுள்ளன. கிறித்தவமும் அருட்பாவும் மதிப்புடைய மனிதனை உருவாக்க மதிப்புகள் இன்னதென எடுத்துக்காட்டி வழிப்படுத்துவதில் ஒன்றுபடுகின்றன. சிறந்து நிற்கின்றன.

**நூலின் பயன் :**

சூபித்துவம், சமணம், கிறித்தவம், இஸ்லாமியம் ஆகிய சமயக்கருத்துக்களுடன் திருவருட்பாக் கருத்துக்களும் ஒப்பிட்டு விளக்கப்பட்டன. அது போன்றே சௌராஷ்டிரம், பௌத்தம், சீக்கியம் போன்ற சமயங்களுடனும் ஒப்பிட்டு ஆய்வுகள் செய்ய

வாய்ப்பு இருக்கிறது.

சௌராஷ்டிர சமயத்தின் தீ வழிபாடும் திருவருட்பா காட்டும் ஜோதி வழிபாடும் ஒப்பிடுதற்குரியன. பௌத்தம் திருவருட்பா இவற்றிற்கிடையே இறைக்கொள்கை, புலனடக்கம் குறித்து ஆய்வு செய்யலாம். இந்து சமய பக்தி இயக்கமும் இஸ்லாமிய சமயமும் இணைந்து உருவானது சீக்கிய சமயம், சமரச சன்மார்க்கம் அனைத்துச் சமயங்களும் இணைய வேண்டி உருவான இயக்கம், எனவே இவை உருவான தோற்றச் சூழல், காரணம், நிலைபேற்றின் தன்மை, மாற்று மரபு தோன்றியதன் அவசியம் ஆகியவற்றினை ஆராயலாம்.

எடுத்துக் கொண்ட சமயத்தின் சிறப்புக் கூறுகளை மட்டும் அருட்பாவுடன் ஒப்பிட்டு ஆய்வு நிகழ்த்தப்பட்டது. சமணத்தில் விரதக் கொள்கை சிறப்புடையது. எனவே அக்கொள்கை திருவருட்பாவுடன் ஒப்பாய்வு செய்யப்பட்டது. சூபித்துவத்தில் ஆன்மப்படிநிலைகள் முக்கிய இடம்பெறும். எனவே அந்நிலையில் திருவருட்பா ஒப்பிடப்பட்டது. கிறித்தவத்தில் மதிப்புகள் உயர்ந்த இடத்தை வகிப்பதால் ஒப்பாய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டன. விரிவஞ்சி பொதுக் கூறுகளை எடுத்துக்கொள்ளவில்லை. இனிமேல் வரும் ஆய்வாளர்கள் அவற்றைத் தனித்தனியே எடுத்து ஒப்பிட வாய்ப்பு மிகுதியும் உண்டு.

வேண்டுதல் என்பது அனைத்துச் சமயங்களும் ஏற்றுக் கொண்ட ஒரு பொதுக்கூறாகும். திருவருட்பாவிலும் அத்தகு வேண்டுதல் நிலைப்பாடல்கள் ஏராளமாக உள்ளன. உள்ளமாற்ற வேண்டுதல், பிழைபொறுக்கவேண்டுதல், பொதுமை வேண்டுதல், சேவைசெய்ய வேண்டுதல், புலன் நிறைவு வேண்டுதல், கொள்கை வேண்டுதல்கள், தனித்த கோட்பாட்டுநிலை வேண்டுதல்கள், மதிப்புசார்ந்த வேண்டுதல்கள் எனப்பகுத்து ஆராய விரிவான இடமுண்டு. மற்ற சமயங்கள் ஒவ்வொன்றுடனும் அவற்றை தனித்த நிலையில் ஒப்பிட்டு ஆய்வு செய்வதற்கும், ஒன்றுக்கு மேற்பட்ட சமயங்களுடன் இணைந்து ஆய்வு மேற்கொள்வதற்கும் பரந்த அளவில் இடம் அளிக்கும்.

சமய அருளாளர்களுடன் இராமலிங்கரை ஒப்பு நோக்கி ஆராயலாம். இராமலிங்கரின் அப்பால் நிலைச் சிந்தனைகளையும், அவரது ஆன்ம அனுபவநிலைக் குறியீடுகளையும் பிறசமய அருளாளர்களுடன் (Mystics) ஒப்பிடலாம். உருக்காட்சி பற்றிய தாந்தே கூறிய குறிப்பு இராமலிங்கருக்கப் பொருந்துவதாக உள்ளது. எனவே அவரது கருத்துக்களையும் ஒப்பாய்வு செய்யலாம்.

சமணமும் திருவருட்பாவும் என்ற இயலில் மகாவீரரும்

இராமலிங்கரும் என்ற சில பகுதியே ஆராயப்பட்டது. அதுவே தனித்த ஆய்விற்கு அவசியமான உந்துதலை அளிக்கிறது. ஜீவகாருண்யம், அஹிம்சை என்பன மனிதநேய உணர்வுக்கு அடிப்படையாகத் திகழ்வதை இவ்விருவர் கோணங்களிலும் நின்று ஆராயலாம்.

கிறித்தவமதிப்புகள் மட்டுமே திருவருட்பாவுடன் ஒப்பிடப் பட்டுள்ளன. அதுபோன்றே பிற சமய மதிப்புகளுடனும் ஆராயலாம்.

இராமலிங்கரையும் திருவருட்பாவையும் சைவம், சைவ சித்தாந்தம் என்ற எல்லையில் இருந்து நீக்கி, சற்றுப் பரந்த கண்ணோட்டத்தில் இந்நூல் ஒப்பாய்வு செய்தது. அது போன்றே சைவம், வைணவம், வடகலை, தென்கலை என வரையறைக்குள் நின்ற பிற பக்தி இலக்கியங்களையும் வெளிக்கொணர்ந்து ஒப்பாய்வு நிகழ்த்தலாம்.

திருஅருட்பாவில் மறுமலர்ச்சிச் சிந்தனைகள் அதிகமாக உள்ளது. அம்பேத்காரின் நூற்றாண்டுவிழாவின்போது பல்கலைக் கழகத்தில் நிகழ்ந்த தேசியக் கருத்தரங்கில் இராமலிங்கரும், அம்பேத்காரும் குறிப்பிடும் சமய சமூக மறுமலர்ச்சிச் சிந்தனைகள் (The Religious and Social Revolutionary thoughts of Ramalingar and Ambedkar) என்ற தலைப்பில் நூலாசிரியர் கட்டுரை வழங்கினார். இருவரது மறுமலர்ச்சிச் சிந்தனைகளையும் மேலும் ஆய்வு செய்யலாம். இருவரும் ஒரே நூற்றாண்டைச் சார்ந்தவர்கள். சமயங்களில் உள்ள குறைபாடுகள் அவர்களை சிந்திக்க வைத்தன. இராமலிங்கர் சமரச சன்மார்க்கத்தைத் தொடங்கினார். அம்பேத்கார் புத்த சமயத்தைத் தழுவினார். அச்சமயச் சூழல்களை ஒப்பிட்டு இருவரது மறுமலர்ச்சிச் சிந்தனைகளின் தோற்றுவாய், வீரியமாய் வளர்ந்தவிதம் ஆகியவைகளை மேலும் ஆராயலாம்.

இராமலிங்கர் குறிப்பிடும் மருத்துவக்குறிப்புகள் தனிச் சிறப்புடையன. மருத்துவ உலகம் கண்டிப்பாக அவரது குறிப்புகளை மறுபரிசீலனை செய்ய வேண்டுமென்று இந்நூல் வற்புறுத்துகிறது. மனித சமுதாயத்தின் அகபுறவாழ்வுக்கு அவை வழி காட்டுகின்றன. இயற்கையோடு இணைந்த பக்க விளைவுளைத் தராத கருத்தடை முறையைத் திருவருட்பா உணர்த்துவது மிகச் சிறப்பானது. மருத்துவக் குறிப்புகளும் இடம் பெற்றுள்ளன. உடம்பை வளர்த்தேன், உயிரை வளர்த்தேனே என்ற திருமந்திரக்கருத்தை அடியொற்றியே மருத்துவச் செய்திகளைத் தந்தார் எனலாம். இருந்தாலும் தெய்வமே நூலின் பயன் என்பதும் வலியுறுத்தப்பட்டுள்ளது.

## ஆய்விற்குத் துணைபுரிந்த நூல்கள்

1. அப்துல் ஹமீது ஆ.கா. அல்லாமா, பாகவி 1958 - தர்ஜீம துல்குர்ஆன்பி அல்தபில் பயான், பாகம் 6, அல்மாயிதா முதல் வாலையூம் பாகவிஸன்ஸ், 114-அய்யநாயக்கன் தெரு, மதராஸ்.

2. இராமச்சந்திரன். சிவ. (தமிழாக்கம்) 1974 - குருநானக் சீக்கிய சமயத்தின் தோற்றம், ஹர்பன்ஸ் சிங் மதுரை பல்கலைக் கழகம், மதுரை.

3. ஊரன் அடிகள் (பதி) 1978 - திரு அருட்பா உரைநடைப் பகுதி, சமரச சன்மார்க்க ஆராய்ச்சி நிலையம், வடலூர்.

4. ஊரன் அடிகள், 1989 - திரு அருட்பா – முதல் ஐந்து திருமுறைகள் சமரச சன்மார்க்க ஆராய்ச்சி நிலையம், வடலூர்

5. ஊரன் அடிகள், 1989 - திரு அருட்பா – ஆறாம் திருமுறை, சமரச சன்மார்க்க ஆராய்ச்சி நிலையம், வடலூர்.

6. ஊரன் அடிகள், 1989- நான் கண்ட வடலூர், சமரச சன்மார்க்க ஆராய்ச்சி நிலையம், வடலூர்.

7. ஊரன் அடிகள், 1993- புரட்சித் துறவி வள்ளலார், ஓர் அறிமுகம், சமரச சன்மார்க்க ஆராய்ச்சி நிலையம், வடலூர்.

8. "சர்வபள்ளி" இராதா கிருஷ்ணன் (பதி) 1979 - கழை மேலை நாடுகளில் மெய்ப் பொருளியல் – வரலாறு, தொகுதி - II அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

9. சாது செல்லப்பா. 1978 - ஜோதி இராமலிங்க அடிகள், ஓர் சமய ஆராய்ச்சி நூல், இந்திய சுவிசே செயற்படு குழு, கோயம்புத்தூர்.

10. சாமி. அ.அ. 1963 - விஞ்ஞான சமயம், பழனியப்பா பிரதர்ஸ், திருச்சி.

11. சுத்தானந்த பாரதி 1966 - ஜோதி இராமலிங்கம், சுத்தானந்த நூலகம், யோகசமாஜன், சென்னை.

12. செங்கல்வராய பிள்ளை. வ.சு. 1967- திருவாசக ஒளிநெறி, திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை.

13. ஸ்ரீ சந்திரன். ஜெ. 1981 - ஜைனதத்துவமும் பஞ்ச பரமேஷ்டிகளும், வர்த்தமானன் பதிப்பகம், சென்னை.

14. தேவசேனாபதி. வ.ஆ. (பொ.பதி) - சமணம், பொன்விழா வெளியீடு, டாக்டர் இராதாகிருஷ்ணன் மெய்யுணர்வு மேல்நிலைக் கல்வி நிறுவனம், சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை.

15. நடராஜன் அ.லெ. 1968 - <u>பகவான் மகாவீரர் வாழ்க்கை வரலாறு</u> புக்ஸ் (இந்தியா) பி.லிமிடெட், சென்னை.

16. நடராஜன் அ.லெ. 1974- <u>வள்ளலார் அமுதமொழிகள் ஆயிரம்,</u> வானதி பதிப்பகம், சென்னை.

17. நடராஜன் அ.லெ. 1974 - <u>வள்ளலார் வாழ்வும் வாக்கும்,</u> இராமலிங்கர் பணி மன்றம், சென்னை.

18. மாணிக்கவாசகம். இரா. 1985 - <u>திரு அருட்பா ஆராய்ச்சி,</u> அன்னை அபிராமி, அருள் பதிப்பகம், சென்னை.

19. மீனாட்சி சுந்தரம். தெ.பொ. 1961 - <u>சமணத் தமிழ் இலக்கிய வரலாறு,</u> கலைக் கதிர் வெளியீடு, கோவை.

20. முத்துக்குமாரசாமி.நா.1988-<u>விஞ்ஞான அருளாளர் வள்ளலார்</u> மணிவாசகர் பதிப்பகம், 55 லிங்கி தெரு, சென்னை - 1.

21. வன்மீக நாதன். கோ. 1977 - <u>ஜோதி வழியில் வள்ளலார்,</u> தமிழாக்கம் - பகீரதன், மு. இராமலிங்கம், இராமலிங்கர் பணி மன்றம், சென்னை.

22. ஸ்ரீ வாமன முனிவர் 1967 - <u>மேருமந்தர புராணம்,</u> ஸ்ரீ குந்தகுந்தர் அச்சகம், ஆரணி, வட ஆர்க்காடு.

23. வெள்ளைவாரணார். க. 1986 - <u>திருவருட்பாச் சிந்தனை,</u> மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம்.

24. வைத்தியலிங்கர். செ. 1986 - <u>வள்ளலார் வாழ்வியல்,</u> செல்லமுத்தகம், அண்ணாமலை நகர்.

## வெளியீடுகள்

1. ஆசாரியர் குந்த குந்தர் தத்துவப் பரப்பு மையம். 1986 - <u>ஆகமஞான மலர்,</u> குந்த குந்தர் நகர்.

2. இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம். 1987 - <u>ஆய்வுக் கோவை தொகுதி 4,</u> பத்தொன்பதாவது கருத்தரங்கு, அண்ணாமலை நகர்.

3. இந்திய வேதாகமச் சங்கம். 1980 - <u>பரிசுத்த வேதாகமம்,</u> (பழைய ஏற்பாடும், புதிய ஏற்பாடும் அடங்கியது), 20, மஹாத்மா காந்தி சாலை, பெங்களூர்.

4. ஸ்ரீ இராமகிருஷ்ணமடம். 1986 - <u>திரு அருள்மொழி,</u> மயிலாப்பூர், சென்னை.

5. சமரச சுத்த சன்மார்க்க சங்கம். 1977 - <u>வள்ளலாரும் வேதாந்தமும்,</u> கடலூர்.

6. சாது அச்சுக் கூடம். 1942 - <u>நாலாயிர திவ்ய பிரபந்தம்,</u> இராயப்பேட்டை.

7. சென்னை பல்கலைக் கழகம். 1965 - **ஆசாரிய ஹிருதயமூலம்,** மணவாள மாமுனிகள் அருளிச் செய்த வியாக்கியானத்தின் தமிழாக்கம், பகுதி - 1-2. புருஷோத்தம நாயுடு உரை, சென்னை.
8. பகவான் மகாவீரர். 2500-ஆம் நிர்வாண மகோத் சவசமிதி, 1975 - **பகவான் மகாவீரர்,** சென்னை.
9. ஸ்ரீ ஜைன யுவக் சங்கம். 1966 - **பகவான் மகாவீரர்,** முதல்தளம், 208 பெரிய பஜார், திருச்சி - 8.
10. வள்ளலார் இளைஞர் மன்றம். 1983 - **வள்ளலார் வாழ்வியல்,** கோட்டக்கரை, வடலூர்.

## கலைக் களஞ்சியம் அகராதி

1. இஸ்லாமியக் கலைக் களஞ்சியம் தொகுதி - ஒன்று அஃமஷ் - இத்னா அஷரிய்யா அப்துற் - றஹீம் 1981 - **யுனிவர்ஸல் பப்ளிஷர்ஸ்,** அண் புக் செல்லர்ஸ், 25, அங்கப்ப நாயக்கன் தெரு, சென்னை - 600 001.
2. இஸ்லாமிய கலைக் களஞ்சியம் தொகுதி - இரண்டு, இந்தியர் முதல் - குமார வைஹ்வரை, அப்துற்றஹீம், 1977 - **யுனிவர்ஸல் பப்ளிஷர்ஸ்,** அண்புக் செல்லர்ஸ், 155-156, அங்கப்ப நாயக்கன் தெரு, சென்னை - 600 001.
3. இஸ்லாமிய கலைக் களஞ்சியம் தொகுதி - மூன்று, குர்ஆன் முதல்-ஹெளலுல் கெளதா வரை, அப்துற்-றஹீம் 1979 - **யுனிவர்ஸல் பப்ளிஷர்ஸ்,** அண் புக் செல்லர்ஸ், புதிய எண் 25, அங்கப்ப நாயக்கன் தெரு, சென்னை.
4. ஆங்கிலம் - தமிழ் அகராதி ஏ.சி. செட்டியார். 1988 - சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை.

## கட்டுரைகள்

1. ஊரனடிகள், 1991 - (1.5.91) இதழ் **"வள்ளலாரும் மகாவீரரும்"** சன்மார்க்க விவேகவிருத்தி சமரச சன்மார்க்க ஆராய்ச்சி நிலையம், வடலூர்.
2. மரிய அருள் இன்ப ராஜ். எஸ். 1988 மே 5 & 6 - **"கிறித்தவ மதிப்பீடுகள்"** AIACHE. Tamil Nadu, Region, Orientation, Programme for College teachers on Value Education, St. Xaviours College at Palayamkottai.
3. மீனாட்சி முருகரத்தனம் 1992 - **"ஐயுறவும் தெளிவும்",** மதுரை திருவள்ளுவர் கழக மாணிக்கப் பொன்விழா மலர், மதுரை.
4. Malarvizhi Mangayarkarasi. R. 1994 - **Revolutionary thoughts of Ramalingar and Ambedkar**. ஆய்வுக் கோவை, வெள்ளி

விழா ஆண்டு கருத்தரங்கம், இ.ப.த. மன்றம், புதுவைப் பல்கலைக் கழகம், புதுச்சேரி.

1. Annamalai. SP 1973 - **The life and teachings of St. Ramalingar,** Bharatiya Vidya Bhavan, Bombay - 7.
2. Arthur Anthony Macdonell 1978 - **Lecture on Comparative Religion,** Stephanos Nirmalendu Lectures, Bharatiya Publishing House Indo Logical Book Seller & Publishers, Delhi - Varanasi.
3. Bhagavan Dos Dr. 1960 - **Essential Unity of All Religions,** Bharatiya Vidya Bhavan, Chowpatty Road, Bombay.
4. Bouquet A.C. 1951 - **Comparative Religion** A Short outline, Penguin Books, Harmondsworth, Middle Sex.
5. Dayanandan Francis T. 1990 - **The Mission and Message of Ramalinga Swamy,** Motilal Banarsidass Publishers, Private Limited., Delhi.
6. Durkheim Emile 1965 - **The Elementary forms of the Religious Life,** A Study in Religions Socialogy, Newyork.
7. Evelyn Underhill 1930 - **Mysticism.** A study in nature and development of Mans Spiritual Consciousness, University Paper backs, Methuen, London.
8. Geden A.S. 1917 - **Comparative Religion** Society for promoting Christian Knowledge, London 68. Haymarket S.W.
9. Gustav Mansching 1976 - **Struchures And Patterns of Religons** Translated from German into Eng by Hans F.Klimkeit & V. Srinivasa Sharma, Motilal Banarasidass, Delhi, Varanasi, patna.
10. Harit Satya Bhattacharya Dr. 1976 - **Jain Moral Doctrine** Jain Sahitya Vikar Manadala, 112, Swami Vivekanand Road, Vile Parle, Bombay - 56.
11. Herbert Warren's 1968 - **Jainism.** Shree Vallabhsuri, Smaraknidhi Publication, Bombay.
12. Janet Kalven, Larry Rosen, Bruce Taylor 1982 - **Value Development,** A Practical Gudie, Paulist Press, Newyork
13. Jevons F.B. 1985 - **Comparative Religion** A study ot Mans Attitude towards God in the Religious of the world, Orient Publications, Delhi.
14. John A.Abbo, Jerome Hannan 1960 - **The Sacret Cannons** (Vol -2 -870 -2414) A Consise Presentation a the current discriplinary norms of the church, B.Herder Book Company, 213. Dought Mews. London W.C.I.
15. Jyaistha (Edr) 1903 - **Devotional Poets And Mystics** Cultural

Leaders of India part II, Ministry of Information And broadcasting, Govt. of India, New Delhi.

16. Kalghatgi T.G. (Edr) 1981 - **Gommateswara Commemoration Volume** University of Mysore, Shravana Belagola, Karnataka, India.
17. Kedarnath Tiwari 1992 - **Comparative Religion** Motilal Banarsidass, Delhi Varanasi Patna Bangalore Madras.
18. Mashi 1990 - **Acomparative study of Religions** Motilal Banaarsidass Publishers, pvt. Ltd., New Delhi.
19. Max Muller F. 1964 - **The Sacred Book of the East (Vol - XXV)** The Laws of Manu, Motilal Banarasi Dass, Delhi Varanasi Patna.
20. Mercica Eliade 1974 - **Patterns in Comparative Religion,** Translated by Rosemary Sheed, A Meridian Book, New American Library, Times Mirror, U.S.A.
21. Ralph L Woods (Edr) 1966 - **The World Treasury of Religious Quotations,** Garland Books, 95, Madison Avenue, New York City.
22. Ram Jee Singh M.A.Ph.D., 1968 - **World perspectives in phi losophy Religion and Culture.** Bharat Bhavan.
23. Richard Brien P.M. 1989 - **Catholicism, Christian Existence, Ethical and Spiritual Dimensions,** A Geoffrey Chapman Book Published by Cassell Ltd. U.S.A
24. Sethupillai R.P. (G.Edr) 1959 - **The Religon and Philosophy of Tevaram** with special reference to Nampi Arurar (Sundarar) Book II (VOL III & IV), University of Madras, Madras.
25. Sheshagiri Rao V.N. 1984 - **Vacaspatics Contribution To Advaita,** Mysore Printing and Publishing house, Mysore.
26. William Stoddart 1976 - **Sufism.** The mystical Doctrines and methods of Islam, Thorsons Publishers Ltd., Welling Borough, Northamptonshire.

## ENCYCLOPAEDIAS, DICTIONARIES, JOURNALS, THESIS

1 Cf. Colliers Encyclopedia
2. Encyclopeadia of Religons and Ethics Vol - XII- 1958- James Hastings (Edr). Edinburgh TVT Clark. 38, Gearge St, New York.
3. Encyclopeadia of Religions Vol - III - 1987 - Merciea Eliade, (Edr.C) Macmillan Publishing Co., New York.
4. The Encyclopedia of philosophy. Vol - VII - 1972 - Paul Edwards, (Edr c) Collier Macmillan. Publishers. LONDON.

5. The New Schaff-Herzog Encyclopeadia of Religious Knowledg VOL - III - 1909 - Samuel Macauley Ja ckson, (Edr), Funk and Wagnalls company, New York and London U.S.A.
6. A Dictionary of Comparative Religion - 1970 - Brardon Madd S.G.F (G.Edr) Werdenfeld & Nicolson, 5, Winsley Street, London W.
7. Dictionary of Philosophy & Religion Easten & Western Thought. - 1980 - Reese W.L. Humainties Press, New Jersey.
8. English - Arabic Dictionary - 1978 - Steingass Ph.D.F., The University of Munich, COSMO Publications, New Delhi, India.
9. Tamil Laxicon Vol IV
10. Indian Philosophical Annual Vol-17. - 1985 - Balasubramanian. R. University of Madras.
11. Lord Mahaveera's Souvenir - 1975 - 2500th nirvana year celebration, 10th Anniversary Celebration, Jain Yuvak Sang Souvenir, Tiruchy.
12. Vaishali Institute Research Bulletin No-4. 1983 - Poddar. RP. Dr., (Edr.C) Research institute of Prakrit, Jainology & Ahimsa, Vaishali, Bihar.
13. Mysticism In English & Tamil Poetry - A Comparative Study (Ph.D.) 1985-Padma Srinivasan, Dept. of English & Comparative Literature Madurai Kamaraj University, Madurai.

## ஆய்வேடு

1. இளங்கோவன். ம. 1992 - திருஅருட்பா - திருக்குறள் ஒப்பீடு, பிஎச்.டி., சென்னை பல்கலைக்கழகம்.
2. செல்லக்கனி. த. 1986 - புதிய ஏற்பாடும் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களும், அறக்கருத்துக்கள் ஓர் ஒப்பீடு, பிஎச்.டி., மதுரை காமராசர் பல்கலைக்கழகம்.
3. தனராசு. அ. 1980 - தமிழ் இதழ்களில் மதிப்புகள் பி.எச்.டி., மதுரை காமராசர் பல்கலைக்கழகம்.
4. கிருஷ்ணமூர்த்தி. ஆர். 1982-பெரியபுராணத்தில் உருக்காட்சி, பிஎச்.டி., மதுரை காமராசர் பல்கலைக்கழகம்.
5. மலர்விழிமங்கையர்க்கரசி. இரா. 1988 - திருஅருட்பா - ஆறாந்திருமுறை உவமை உருவகப் பொருளடைவு எம்ஃபில், மதுரை காமராசர் பல்கலைக்கழகம்.
6. விசய இலக்குமி. பொ. 1983 - ஆழ்வார் பாடல்களில் அகம், பிஎச்.டி., மதுரை காமராசர் பல்கலைக்கழகம்.



இராமலிங்கர் திருக்காப்பிட்டுக்
கொண்ட அறை

பின்னிணைப்பு - ௨.

# சித்திர கவி மாலை.

## மலைப் பந்தம்.



# சித்திர கவி மாலை

## தீர்த்தங்கரர் திருநாமம் வரிசையாக வரும்படி அமைத்த மலைப் பந்தம்

### நேரிசையாசிரியப்பா

1. ஆதிபகவன் ரிஷபதேவ
2. ரருள் மே வஜித நாதர் சம்பவ
3. நாதரபி நந்தனர் சுமதி நாதர்
4. அழகு பதுமநாபர் சுபார்சவ
5. நாதர் சந்திரப் பிரபர் மலரும்
6. புஷ்ப தந்தர் சீதள நாதர்
7. சீரே யாம்ச நாதர் மாபெரும்
8. வாசு பூஜ்யர் விமல நாதர்
9. அனந்த நாதரறிதரும நாதர்
10. சாந்திநாதர் குந்து நாதர்
11. மாநெறி அரநாதர் மல்லி நாதர்
12. மூதறிவுற்ற முனிசு விரதர்
13. நமிநாதர் மிக்க அருள்மலி நேமி
14. நாதர் சீர்சே ரழகு பார்சுவ
15. நாதர் பாரோர் தொழு மகாவீரர்
16. நீதி நாடிய அறுநா லன்பினர்
17. அவர் பக வானே அருமை
18. அருகனடி தொழு அறநெறி பெருகுமே.

## மலைப்பந்தம் வாசிக்கும் வழி :

மலையில் கீழே உள்ள 1. நெம்பர் ஆதிபகவன் முதலாக, நேரே வாசித்து, மேலேறி நேராக வாசித்து, மேலேறி நேராக வசித்து, இப்படியே வாசித்து உச்சிக்குச் சென்று, நடுவே இறங்கினால் பாடல் முடிவாகும். பாடலையும் நெம்பரையும் பார்த்து வாசித்து மகிழுங்கள்.


சித்தரகவி ஆசிரியர்,

ஆசு கவி-புலவர் ப.வெ.அப்துல் கபூர் சாஹிப்

திருவையாறு, தஞ்சை மாவட்டம்.

இத்தகு நூல்கள் மதநல்லிணக்கத்தை வலியுறுத்துவன
அமைவது கண்டு பாராட்டுகிறேன்.

**பேராசிரியர். மூ.சா**

துணைவேந்தர், மதுரை காமராசர் பல்கலைக்கழ

ஆசிரியரின் எளிய தெளிவான நடை ஆழமான பொருளை எளிதாகப் புரிந்து கொள்ளச் செய்கிறது. தமிழ் இலக்கிய மற் ஆன்மீக உலகம் நூலை வரவேற்கும் என நம்புகிறேன்.

**பேராசிரியர். அ.இராமச**

பதிவாளர், மதுரை காமராசர் பல்கலைக்கழ

சாதி சமயப் பிணக்குகளும் போராட்டங்களும் மீண் தலைதூக்கும் இக்காலகட்டத்தில் இந்நூல் காலத்தேவை ஈடுசெய்வதாகவும் அமைந்திருப்பதால் பலராலும் படிக்கப்ப பாராட்டப்படும் என நம்புகிறேன்.

**தமிழண்ண**

புதிய துறையான ஒப்பியல் சமயத் துறைக்குப் பெரு சேர்க்குமாறு தமிழில் வந்துள்ள இந்நூல் பாராட்டத்தக்க அ பணியாகும். இன்றைய காலத் தேவைக்கு ஏற்ற மனிதர்க இணைக்கும் இந்நூலைத் தமிழ் கூறு நல்லுலகம் ஏற்றுப் போ வரவேற்பதாக என நான் வாழ்த்துகிறேன்.

**பேராசிரியர். கு.வேங்கடராம**

தலைவர், தமிழியற்புலம், ம.கா

இந்நூலும் நூலின் ஆசிரியரும் புதிய நூற்றாண்டின் பணிச் ஏற்ற கருவிகள் எனக் கூறலாம்.

**அருள்திரு. வி.மீ.ஞானப்பிரகாசம், சே**

தலைவர், கிறித்தவ இலக்கிய பீடம், ம.கா

இறைவனின் பேரன்பினைப் பெறுவதற்கான பாதையி சூபித்துவமும் திருவருட்பாவும் ஆன்மீகத்தின் அடிப்படையி ஒருங்கிணைந்திருப்பதை இந்நூலாசிரியர் நன்குணர்த் யிருப்பதைப் பாராட்டுகின்றேன்.

**பேராசிரியர். பீ.மு.அஜ்மல்கா**

தலைவர், இஸ்லாமியத் தமிழியல் துறை, ம.கா